கடற்கரை ஓர கிராமம் ஒன்றில் நடக்கும் திகில் அமானுஷ்ய கதை. இதன் நாயகி நிலா சாந்தமானவள். அவளின் கோட்டை வீட்டில் நடக்கும் சாகசங்கள்,மர்மம்,திகில் நிகழ்வுகள்,எதிர்பாராத முடிவு.

கடலில் புதைந்த தங்க கோவில்.

அனைத்தும் படிப்பவர்களை பரவச படுத்தும்..
சுப்ரஜா

# கோட்டை வீடு

சுப்ரஜா

## அத்தியாயம் ஒன்று

ஊருக்கு வெளியே கோபித்துக் கொண்டு இருப்பது போல் தனியாய் இருந்தது அந்த சின்னதேவன் பட்டி ரயில்வே நிலையம்.

விடியற்காலையில் சென்னையிலிருந்து வரும் வண்டி இரண்டு நிமிடம் நின்று போகும்.

மாலை நேரத்தில் கொல்லத்திலிருந்து சென்னை செல்லும் வண்டி இரண்டு நிமிடம் நின்று தன்னை ஆசுவாசப் படுத்திக் கொண்டு போகும்.

வாரத்தில் இரு முறை சரக்கு ரயில் ‘தடக் தடக்’ என்று நிலையம் கடக்கும்.

எனக்கு தெரிந்து எங்கள் குடும்பத்தினரை தவிர வேறு யாரும் இந்த ரயிலினால் பயன் அடைந்தார் போல் தெரியவில்லை.எப்பொழுதாவது வந்து இறங்கும் சரக்குகளும் எங்கள் வீட்டிற்கு வந்தவையாகத்தான் இருக்கும்.

பிரிட்டிஷ் காலத்தில் கொள்ளு தாத்தா பிரிட்டிஷாரிடம் தனக்கு இருந்த செல்வாக்கைப் பயன் படுத்தி சின்னத் தேவன் பட்டியில் ரயில் நிலையம் நிறுவியதாக என் தந்தை அடிக்கடி
பெருமையாக சொல்லி கொள்வார்.

ஒரு நிமிடம் என் பெயரை கூட சொல்லாமல் நான் பாட்டுக்கு பேசிக் கொண்டே போகிறேன் என்று நினைத்து விடாதீர்கள்.

நிலா.என் பெயரே நிலாதான்.முன்னாலோ பின்னாலோ வேறு எதும் கிடையாது.எனக்கு வயது பதினெட்டு.இந்த சுய தகவல் மட்டும் இப்போது போதும் என்று நினைக்கிறேன்.

ஜன்னல் வழியே வெளியே பார்த்தேன்.

இதோ வந்து விட்டது.

இன்னும் சில வினாடிகள்தான்.சின்னத் தேவன் பட்டி வந்து விடும்.

சக்கரங்கள் தண்டவாளத்தில் உராயும் சப்தம்

.‘கீரிச்’ என்கிற சப்தத்தோடு ரயில் நின்றது.

என் பெட்டிகளை எடுத்து கொண்டு இறங்கினேன்.

வழக்கம் போல் ரயில் நிலையம் மிக அமைதியாக இருந்தது.

அதே அழுக்குடன் இருந்தது.

ஸ்டேஷன் மாஸ்டர் விசில் அடித்த படியே பச்சை கொடியை ஆட்டினார்.

ரயில் நகர்ந்தது.

ஸ்டேஷன் மாஸ்டர் அந்த இடத்தில் நின்ற படியே என்னையே பார்த்துக் கொண்டிருந்தார்.

நான் மெல்ல நடந்து அவரை நோக்கி போனேன்.

எனது ஹாண்ட் பேக்கிலிருந்து பயணச் சீட்டை எடுத்து அவர் கையில் கொடுத்தேன்.

அவர் பயணச் சீட்டை வாங்கி பார்த்தார்.

நான் அவரையே பார்த்து கொண்டிருந்தேன்.சதுர முகம்.சிவந்த முட்டை கண்கள்.

சீட்டைத் திரும்ப தந்தவர்,'' எப்படி இருக்கே நிலா'' என்றார்.

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை.அவரும் சளைக்காமல், '' போன வருஷம் பார்த்தது..இப்பத்தான் வறே..ஊரு..அப்பா ,அம்மா எல்லோரையும் மறந்துட்டியா.?.'' ஏதோ குற்றப் பத்திரிக்கை வாசிப்பவர் போல் சொன்னார்.

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை.
அவர் என்னை விழுங்கி விடுகிறார் போல் பார்த்தார்.
'' நிலா நீ ரொம்ப அழகாயிட்டே..'' என்றார்.
என் முகம் 'குப்'பென்று சிவந்தது.மெல்லிய நாணம் இளம் சிரிப்புடன் எட்டிப் பார்த்தது.
ஸ்டேஷன் மாஸ்டர் முகத்தில் ஒரு வித பாவம். தன் மனதில் வைத்திருந்ததை எந்த வித பயமும் இன்றி வெளிப் படுத்தி விட்ட சந்தோசம்.
ஒரு வேளை நான் கோபித்து கொள்வேன் என்று கூட நினைத்திருக்கலாம்.
நான் கேட்டுக்கு வெளியே செம்மண் ரோட்டையேப் பார்த்து கொண்டிருந்தேன்.
'ஏன் கார் இன்னும் வரவில்லை..?'நானே கேட்டு கொண்டேன்.
திரும்பிப் பார்த்தேன்.
அவர் இன்னமும் என்னையே பார்த்து கொண்டிருந்தார்.பாவம் அவர் என்ன செய்வார்? நாள் முழுவதும் அத்துவானக் காட்டில் தண்டவாளங்களோடு எவ்வளவு நேரம் தான் தனிமையில் தவிப்பது.
முழுசாய் ஒரு ஆள்,அதுவும் இளம் பெண் அருகில் கொஞ்சம் பேசலாம் என்று தோன்றுவது இயற்கை

தானே?
ஒரு வேளை இங்கு ஸ்டேஷன் வர காரணமாயிருந்த என் கொள்ளு தாத்தாவை மனதிற்குள்ளேயே திட்டி கொண்டிருக்கலாம்.
கேட்டே விட்டேன்.
‘‘இந்த அத்துவானத்தில் ஸ்டேஷன் வர காரணமாயிருந்த என் கொள்ளு தாத்தாவை மனசிலேயே திட்டுகிறீர்கள்தானே?’’
‘‘ ஐயையோ..சத்தியமா அப்படி இல்லை..’’ என்றார்.
கொஞ்ச நேரம் அமைதியாய் இருந்தவர் ,‘‘ஓவிய கல்லூரியலதானே படிச்சிட்டு இருக்கே
‘‘ஆமாம்..’’
‘‘இன்னும் எத்தனை வருஷம் ?’’
‘‘ஒரு வருஷம் ஒன்பது மாசம் ’’
பட்டணம் எனக்கு நிறைய கற்றுத் தந்திருக்கிறது.
ஆண்கள் பெண்களிடம் நிறைய பேச வேண்டும் என்று நினைக்கிறார்கள்.ஆனால் பேசுவதில்லை.
நிறைய பெண்கள் ஆண்களிடம் பேச’கூடாது என்று நினக்கிறார்கள்.ஆனால் ஒரு ஆண் கொஞ்சம் பழகினால் அபத்தமாய் எதாவது பேசி கொண்டே இருக்கிரார்கள்.
இவரும் பட்டணத்தில் இருந்து வந்தவர்தானே?
‘‘உடனே கிளம்பி வரச் சொல்லி தந்தியும் போனும் வந்தது.வீட்டல யாருக்காவது உடம்பு சரியில்லையா..?
நானாக கேட்டேன்.
‘‘ நிலா நீ ரொம்ப அழாகாயிட்டே ’’ என்றார் மறுபடியும்.
அதற்க்கு மேல் அவரால் தொடர முடியவில்லை.
நான் ஒன்று கேட்க அதை காதில் வாங்கி கொள்ளாமல் இன்னமும் அவர் என் அழகிலேயே திணறி கொண்டிருக்கிறார் என்பது மட்டும் புரிந்தது.
ஒரு புறம் பெருமையாகவும் ஒரு புறம் பயமாகவும் இருந்தது.
அதிக ஆண்களை கவரும் அழகான பெண்களுக்கு ஆபத்து எப்பொழுது எந்த ரூபத்தில் வரும் என்று சொல்ல முடியாது.
அத்துவான க் காட்டில் திடிர் என பெண் பித்து பிடித்து விட்டாள்?

“தந்தியும் போனும் வந்தது ..உடனே கிளம்ப சொல்லி..யாருக்காவது ஏதாவது ப்ரசனையா ?” இந்த முறை கொஞ்சம் சப்தமாக அழுத்தம் திருத்தமாக அதிகாரத் தோரனையில் கேட்டேன்.
“ரெண்டு நாளா உங்க சொந்தகாரங்க எல்லாம் வந்துட்டே இருக்காங்க..காதல் கல்யாணம் பண்ணிட்டு பெங்களுரு போய் செட்டில் ஆயிட்ட உன்னோட பெரிய அண்ணன் சிவராமன் நேத்து அவனோட பொண்டாட்டியோட வந்து இறங்கினதும் நீ இப்ப கேட்ட இதே கேள்வியைதான் கேட்டான்..எப்பொழுதும் போல் சிடு சிடு ன்னு இருந்தான்.அவன் காதல் மனைவி மூஞ்சி அதுக்கு மேல.. தேவாங்கு மாதிரி..சூனியக்காரி மாதிரி பார்த்தா..கொஞ்சம் பயமாகவே இருந்தது..”
சொல்லி கொண்டே போனவர் பட்டென்று நிறுத்தினார். என்னத்தான் இருந்தாலும் என் குடும்பத்தாரைப் பற்றி சொல்லி நான் கோபித்து கொள்ள போகிறேன் என்ற எண்ணம் எழுந்த்திருக்களாம்.
“உன் அளவுக்கு அவ அழகு கிடையாது” என்றார்..
என் அழகில் பித்துப் பிடித்து விட்டது அவருக்கு.
நான் கிளம்புகிற வரை இதே பாட்டை பாடுவார்.
“அவனை அழைத்துப் போக யார் வந்தார்கள்..?”
“உங்க வீட்டிலே யாருக்கு அவனைப் பிடிக்கும் ..உங்க குடும்ப மருத்துவர் தான் வந்தார்..”
“எனக்கு பிடிக்கும் ” என்றேன் ‘பொட்’டென்று திரும்பி ஒரு முறை ஸ்டேஷனையும் அவரையும் பார்த்தேன்.
அழுக்கின் மொத்த குத்தகை.
அவர் போட்டிருந்த ‘கோட்’ நாற்றம் அடித்தது.
“இந்த ஸ்டேஷனை ஒரு முறை படம் வரையணும்..”
“என்னையும் சேர்த்துதானே?”
“நீங்க இல்லாமலா..இந்த ஸ்டேஷனை உங்களையும் உங்க அஷ§§க்கு கோட்டையும் விட்டுட்டு வரைய முடியுமா?”
அவர் முகம் சுண்டிப் போனது.
“சும்மா விளையாட்டிற்கு சொன்னேன்”
முகத்தில் வலிய சிரிப்பை வரவழைத்து கொண்டார்.
தூரத்தில் இஞ்சின் சப்தம்.

பார்த்தேன்.
புள்ளியாய் கார் தெரிந்தது.
அப்பாவின் கார்.
என்னை அழைத்துப் போக அவரே வருகிறார் என்றதும் மனம் பூரிப்பானது.
கார் ஸ்டேஷனை நெருங்கியதும் தான் ஒட்டுனர் இடத்தில் இருந்தவரைப் பார்த்தேன்.
நான் ஊகித்தது போல் அது அப்பா இல்லை. என்னை அழைத்துப் போக அவர் வராமல் கண்ணன் மாமாவை அனுப்பியிருந்தார்.
அவர் என் அம்மாவின் தம்பி.குடும்ப வரவு ,செலவு கச்சா நோட்டு எல்லாமே அவர் கையில்தான்இரு க்கும்..எங்களுடைய கோட்டை வீட்டில் அவருக்கு செல்வாக்கு அதிகம்.
அவசரம் அவசரமாய் இறங்கியவர்,'' சாரி நிலா கொஞ்சம் தாமதமாயிடுச்சு..''என்றார்.
''அப்பா வரலையா?'' நான் கேட்டதும் என்னைப் பார்த்தார்.
பதில் சொல்லவில்லை.

## அத்தியாயம் இரண்டு

''நான் கிளம்பும் போது சொன்னார் , என்னை எதிர்பார்த்து காத்திட்டு இருப்பான்னு..''
''அவருக்கு ஒண்ணும் இல்லையே''
''எல்லாம் வீட்டிலே போய் பேசிக்கலாம்..''
ஸ்டேஷன் மாஸ்டர் நாங்கள் சொல்லாமலேயே டிக்கியை ஒடிப் போய் திறந்தார்.
என் பெட்டிகளை கொண்டு போய் வைத்து மூடினார்.மாமா டிக்கியை மூடும் போது ''எல்லாம் சரியாயிடும்' என்று மெல்லிய குரலில் ஸ்டேஷன் மாஸ்டரிடம் சொன்னது என் காதுகளில் விழுந்தது.
நான் காரில் ஏறும் முன் இயல்பாய் திரும்பி பார்த்தேன்.
ஸ்டேஷன் மாஸ்டர் என் அழகின் பாதிப்பு மாறாமலயே இன்னும் என்னையே பார்த்து கொண்டிருந்தார்.
வண்டியை செலுத்த ஆரம்பித்த ஆரம்பித்த மாமா,''காபி கொண்டு வந்திருக் கேன்.இந்த மண்

பறக்கற புழுதி ரோடு தாண்டினதும் தார் ரோட்டிலே நிறுத்தி தரேன்'' என்றார்.
''யாருக்கு உடம்பு சரியில்லை ..சொந்தகாரங்க எல்லாரும் வந்துட்டிருக்காங்கன்னு ஸ்டேஷன் மாஸ்டர் சொன்னாரு?''
நான் மாமாவை' கேட்க அவர் ஒன்றும் பதில் சொல்லாமலேயே காரைத் தொடர்ந்து செலுத்தி கொண்டிருந்தார்.
'' அப்பா ஏன் வரலை மாமா,அவருக்கு ஏதாவது பிரச்சனையா?''
" இல்ல நிலா அவர் நல்லாதான் இருக்கார்''
''பின்னே யாரு க்கு உடம்பு சரியில்லை?''
''என் அக்கா அதான் உங்க அம்மா அவளுக்குதான்''
"என்ன ஆச்சு மாமா?''
"நல்லாதான் இருந்தா..நாலு நாளைக்கு முன்னாடி பாத்ரூம்ல்ல வழுக்கி விழுந்தா..அவ்வளவுதான் உள்ளே ஒளிஞ்சிருந்த வியாதி எல்லாம் விழிச்சு எழுந்துடுச்சு..ரத்த அழுத்தம்..ஸ்ட்ரோக்..ஒன்னு மேல ஒன்னு..''
நான் ஒன்றும் பேசாமல் இருந்தேன்.
சொன்னவர் மௌனமானர்.
எனக்கு அம்மாவின் அருகாமை எதுவும் நினைவில் இல்லை.காரணம் இல்லாமல் இல்லை.எனக்கு நினைவு தெரிந்த வரையில் தாதியம்மாள் தான் எல்லாம்.மதிய உணவு வேளையில் சாப்பாட்டு மேஜையிலும் இரவு உணவின் போதும் அம்மாவைப் பார்ப்பதோடு சரி.
எப்போதாவது கூத்து கட்டுபவர்கள்,நாட்டியக்காரிகள் வந்தால் அம்மா அந்த நிகழ்ச்சிகளின் போது தன் பக்கத்தில் என்னை உட்கார வைத்து கொள்வாள்.
மாமா திடீர் என்று மௌனம் உடைத்தார்.
''நிலா நான் சொன்னா நீ நம்ப மாட்டே?''
''என்ன?''
''நிலா நிலான்னு உன் பேரை சொல்லித்தான் புலம்பிட்டே இருக்கா''
''என்ன சொல்றீங்க மாமா?''
''எனக்கு என்னமோ பொசுக்குன்னு போயிடுவாளோன்னு தோணுது''

எனக்கு ‘திக்’கென்று இருந்தது. வயிற்றைப் பிசைந்தது.என்னத்தான் கான்வென்டிலும்,ஹாஸ்டலிலும் தூக்கிப் போட்டாலும் அம்மா அம்மா தானே?
“அப்பா எங்கே இருந்தாரு?”
“எப்ப?”
“அம்மா கீழே விழுந்தப்ப?”
“திருநெல்வேலியில”
“இப்ப?”
“வந்துட்டாரு”
கார் தார் ரோட்டை அடைந்திருந்தது.ஓரமாய் நிறுத்தினார்.பிளாஸ்க்கிளிருந்து காபியை ஊற்றிக் கொடுத்தார்.
காபியை குடித்துக் கொண்டே கேட்டேன்.
“அவ்வளவு சீரியஸா மாமா?”
“என்ன பண்ண ? விழறதுக்கு முன்னாடி வரைக்கும் கம்பீரமாய் இங்கிலாந்து மகாராணி மாதிரி தான் நம்ப கோட்டைக்கு உள்ள வலம் வந்துட்டு இருந்தா..வயசாயிடுச்சு இல்ல..எல்லா வியாதியும் சமயம் எழுந்து ஆட்டம் போட ஆரம்பிச்சுடுச்சு”
அம்மாவுடன் அதிக ஒட்டுதல் இல்லை என்றாலும் மெல்லிய சோகம் மனதிற்குள் இழைந்து ஓட ஆரம்பித்தது.
நான் காபியை குடித்து முடித்ததும் காரை செலுத்த ஆரம்பித்தார்.
தார் ரோடு கண்ணுக்கு எட்டும் வரைக்கும் துடைத்து விட்டார் போல் சுத்தமாய் இருந்தது.
மாமாவைப் பார்த்தேன்.
“ எனக்கு பரிட்ச்சை வேற நெருங்கிட்டு இருக்கு மாமா..போன மாசமே எழுதியிருந்தேன் மாமா ..இது மத்த படிப்புங்க மாதிரி இல்ல..”
“தெரியும் நானும் லெட்டரைப் படிச்சேன்..அப்பாதான் உன்கிட்ட விவரமா பேச சொன்னார்..நான் சொன்னா நீ கேட்பேன்னு அவருக்கும் தெரியுமே,உங்க அம்மாவும் அதைதான் சொல்லி சொல்லி புலம்பறா"

எனக்கு ஒன்று மட்டும் தெளிவாக புரிந்தது.மாமா எதற்கோ பீடிகை போடுகிறார்.

‘‘மாமா என்னோட படிப்பை பாதியில விட்டுட்டு என்னால வர முடியாது..அந்த அத்துவானக் காட்டில அம்மா மாதிரி இடுப்புல சாவியை மாட்டிட்டு எல்லாரையும் நாட்டாமை பண்ணிட்டு இருக்க என்னால முடியாது,எனக்கு அந்த கோட்டை வீடு ,மேல எனக்கு எந்த ஒட்டுதலும் கிடையாது, என்னைக்கோ விட்டுப் போச்சு..இருக்கிறது என்னோட சில சின்ன வயது நினைவுகள் தான்,அதுலயும் பலது வலியும், வேதனையும் ஆனது..எத்தனை நாள் தூக்கம் வராமல் தவிச்சிருக்கேன் தெரியுமா?பத்து மைல் தூரத்துக்கு ஆள் நடமாட்டமே இல்லாத வீடு...தூரத்துல இருக்கற கடலும் பாறையும்..’’

நான் நிறுத்தி ஆசுவாசப் படுத்திக் கொண்டேன்.

‘‘உன்கிட்டே ஒரு முக்கிய விஷயம் பேசணும் நிலா..’’

‘‘சொல்லுங்க மாமா’’

இவ்வளவு நேரம் அவர் பீடிகைப் போட்ட விஷயம் இப்பொழுதுதான் வெளியில் வரப் போகிறது.

‘‘உனக்கு கல்யாணம் பண்ணனும்ன்னு அவ புலம்ப ஆரம்பிச்சுட்டா..எல்லாத்துக்கும் மேல பேசியும் முடிச்சுட்டாங்க..’’

மாமா சொல்ல நான் அதிர்ந்து போனேன்.
‘‘என்ன மாமா சொல்றீங்க?’’

‘‘ஆமாம் நிலா..எல்லாரும் அந்த முடிவில தான் இருக்காங்க,உன்கிட்டே எப்படி சொல்றதுன்னு தான் இவ்வளவு நேரம் யோசிச்சுட்டு இருந்தேன்..’’

‘‘மாமா நீங்க சொல்றது எனக்கு ரொம்ப அதிர்ச்சியா இருக்கு’’

‘‘உன்னோட அத்தைப் பையன்தான் மாப்பிள்ளை..அவங்களும் வந்து சேர்ந்துட்டாங்க..’’

‘‘முடியாது மாமா’’

மாமா இந்த பதிலை எதிர்பார்க்கவில்லை என்பது அவர் சட்டென்று என்னைத் திரும்பி பார்த்ததுமே புரிந்தது.

“என்ன முடியாது மாமா ..அவனைதான் உனக்கு தெரியுமே..ஸ்கூல் விடுமுறை நாட்களில் அவனோட சேர்ந்து விளையாடி இருக்கே”

“என்ன மாமா,நீங்களே இப்படி சொல்றீங்க..சின்ன வயசுல கூட விளையாடின பையன்னு கல்யாணம் பண்ணிக்க முடியுமா?”

“நிலா அவன் வேற யாரோ இல்லை..உன்னோட அத்தைப் பையன்”

“இல்ல மாமா என்னால முடியாது..கட்டாயம் பண்ணாதீங்க..உங்களால முடியாதுன்னா இப்பவே சொல்லிடுங்க..அப்படியே திரும்பி போயிடறேன்..நான் வரவே இல்லைன்னு சொல்லிடுங்க..”

“என்ன நிலா இப்படி சொல்றே..என்னதான் உனக்கு பிரச்சனை?என்கிட்டே சொல்லு..என்னால என்ன பண்ண முடியும்ன்னு பார்க்கறேன்”

மாமா காரை ஒட்டிக் கொண்டே கேட்டார்.

நான் அவரைப் பார்த்து விட்டு ஜன்னல் பக்கம் திரும்பி கொண்டேன்.

பின் மெல்ல சொன்னேன்.

“மாமா எனக்கு ஏற்கனவே கல்யாணம் ஆயிடுச்சு ”

மாமா அதிர்ந்து போய் என்னைப் பார்த்தார்.

## அத்தியாயம் மூன்று

மாமா அதிர்ந்து போய் பார்த்தார்.காரை ஓரமாய் நிறுத்தியே விட்டார்.

“ என்ன நிலா இப்படி ஒரு குண்டை தூக்கிப் போடறே?” என்றார்.

” மாமா நான் சொல்ல சொல்ல நீங்க பேசிட்டே இருந்தீங்க..உங்க கிட்டே நான் என்னைக்கும் எதையும் மறைச்சதில்லே, மறைக்கவும் மாட்டேன்..”

“ அது சரி...கல்யாணம்ங்கறது எவ்வளவு பெரிய விஷயம்..நீ பொட்டுன்னு சாதாரணமாய் சொல்லிட்டே..நீ உண்மையதான் சொல்றீயா,உன்னை

ரொம்ப சின்னப் பொண்ணுன்னு இல்ல நினைச்சுட்டு இருந்தேன்''

''மாமா வேற யாராய் இருந்தாலும் இந்த தருணத்துல இதை சொல்லியிருக்க மாட்டேன்..என்னோட நிலைமை புரிஞ்சா நீங்களே என்னை சப்போர்ட் பண்ணுவீங்க ..எனக்கு அந்த கோட்டை வீட்டை விட்டு வெளியேற அந்த ஒரு வழிதான்..அண்ணன் கல்யாணம் பண்ணிட்டு போனா மாதிரி..''

''இந்த மாதிரி கோட்டை வீட்டிற்க்குள்ளே நீ சொன்னா உன்னை வெட்டியே போட்டுடுவாங்க''

''அதனால தான மாமா உங்க கிட்டே உண்ணையை சொல்லிட்டேன்..''

'' நீ உண்மையை மட்டும் சொல்லலை..ப்ரச்சனையை என் பக்கம் திருப்பி விட்டே''

''மாமா எனக்கு ஏதாவது ஒரு வழி நீங்க சொல்லித்தான் ஆகணும்''

''ஆமாம்..நீ கல்யாணம் வேணாம்ன்னு சொன்னாலே வீடு ரெண்டு படும் ..இப்போ உனக்கு கல்யாணம் ஆயிடுச்சுன்னு சொன்னா என்ன நடக்கும்ன்னு கற்பனை கூட பண்ணி பார்க்க முடியலை...கொலையே விழும்..''

''மாமா நான் நல்லா யோசிச்சு பார்த்தேன்..எனக்கு உதவி செய்ய உங்களாலே மட்டும் தான் முடியும்..''

''என்ன சொல்லு..''

''நீங்க எனக்கு மாமாதான..?''

''ஆமாம் அதுல என்ன புதிய சந்தேகம் உனக்கு?''

''உங்களுக்கும் ஒரு பையன் இருக்கான் இல்லே''

''ஆமாம்..''

''அவனைதான் எனக்கு கட்டி வைக்கணும்ன்னு நீங்க புதுசா ப்ரச்சனை கிளப்புங்க..உங்களுக்'கும் என்னை மருமகள் ஆக்கிக்க உரிமை இருக்கு இல்ல..''

மாமா யோசிக்க ஆரம்பித்து விட்டார்.

''இந்த உதவியை மட்டும் பண்ணுங்க..கொஞ்ச நாள் இந்த ப்ரச்சனையில என்ன பண்ணலாம்ன்னு முடிவு

எடுத்துடுவேன்..''
‘‘சின்ன வயசுலயே நீ இப்படித்தான் நினைச்சதை சாதிச்சுக்குவ..அப்பவே நீ ரொம்ப வம்பு பண்ணா என்கிட்டே தள்ளி விட்டுவாங்க ..இப்பவும் நீ என்னை தான் மாட்டி விட பார்க்கறே''
‘‘மாட்டி விடலை மாமா..உங்களை நம்பறேன்''
‘‘மாப்பிள்ளை எந்த சமூகம்..''
‘‘நம்ப சமூகம் இல்ல''
‘‘ஐயிரா?''
‘‘இல்ல ஐயங்காரு..''
''கூடப் படிக்கிற பையனா?''
‘‘இல்ல மாமா காலேஜ் லெக்சரர்''
மாமா நிறுத்தியிருந்த காரின் எஞ்சினை மீண்டும் உயிர்பித்தார்.
‘‘நீ காதல் பண்ணதை தான் என்னால நம்ப முடியலை..என்னதான் பண்ற ஐடியா வச்சிருக்கே?''
‘‘ இன்னும் முடிவு பண்ணலை மாமா ..உங்ககிட்டே சொன்னதும் மனசு பாரம் இறங்கிடுச்சு..நீங்க ஆரம்பிச்சு வையுங்க அதுக்கப்பறம் முடிவு பண்ணிக்கலாம்''
‘‘நாளைக்கு உண்மை வெளியில வரும் போது உங்க அம்மா எனக்கு தெரியாதுன்னு சொன்னா நம்பகூட மாட்டா..''
நான் சிரித்தேன்.
''ஆமாம் அம்மா அப்படிதான் நினைப்பாங்க.''

தூரத்தில் கோட்டை வீட்டு சுவர் தெரிந்தது.

மாமா இன்னும் வேகம் எடுத்தார்.
‘‘உங்க அம்மா உள்ளே போனதும் நிச்சயம் கேட்பா  ஏன் இவ்வளவு நேரம்ன்னு ,டயர் பஞ்சர் போட்டுட்டு கிளம்ப நேரம் ஆயிடுச்சுன்னு பொய் சொல்லனும்..நீ வந்ததும் பொய் சொல்ல ஆரம்பிச்சுடுவேன் போல் இருக்கு..''
‘‘என்ன மாமா இப்படி சொல்றீங்க..''

‘‘உண்மைதானே..’’ சிரித்தார் மாமா.

‘‘இப்படி ஒரு அன்னியோன்யமான மாமா இல்லை என்றால் நான் ஊருக்கே திரும்பி வந்து இருக்க மாட்டேன்.’’

‘‘நல்லாதான் ஐஸ் வைக்க கத்துகிட்டே’’

காரிலிருந்து பார்க்க கோட்டை வீடு பிரமாண்டமாய் தெரிந்தது.

என்னையும் அறியாமல் என்னை ஒரு வித இறுக்கம் சூழ்ந்தது.

கார் வருவதை மாடியின் தன் அறையில் பால்கனியில் இருந்து பார்த்து கொண்டிருந்த என் சித்தி வசந்தா காரை நோக்கி அங்கிருந்தே கையை ஆட்டினாள்.வெளியில் இருந்து பார்த்தால் அத்தனை பால்கனிகளும் கோட்டை வீடு எவ்வளவு பெரியது என சொல்லும்.

கார் கேட் முன்னால் ஒரு வினாடிதான் நின்று இருக்கும்.சடாரென்று கேட் திறந்தது.

கார் உள்ளே செல்ல இருபுறமும் மலர்ந்திருந்த ரோஜா செடிகள்.கோட்டை வீட்டு முன் கார் நின்றது.சித்தி கீழே இறங்கி வந்திருந்தாள்.

உள் பக்கம் திரும்பி ‘நிலா வந்தாச்சு‘என்று கத்தினாள்.சித்திக்கு என்னை கொஞ்சம் பிடிக்கும்.யாரை பற்றிய செய்தி என்றாலும் என்னிடம்தான் பகிர்ந்து கொள்வாள்.

சித்தி என் கையை பிடித்து இழுத்து கொண்டு உள்ளே போனாள்.

ஹாலில் என் அண்ணன் தன் மனைவியுடன் உட்கார்ந்து இருந்தான்.அவன் பக்கத்தில் அந்தப் பெண்மணி.அதுதான் என் அண்ணியாக இருக்க வேண்டும்.அவன் அருகில் சென்றதும் அவன்அவளிடம்,‘‘ஸ்வப்னா நான் சொல்வேனே அடிக்கடி நிலா நிலா ன்னு இவதான்’’ என்று அறிமுகம் செய்தான்.

நான் அவளை முழுமையாய் பார்த்தேன்.ஸ்டேஷன் மாஸ்டர் சொன்னது போல் இல்லை.அழகாகவே இருந்தார்.அவர் சொன்னதில் ஒரு உண்மை .என் அளவுக்கு அவர் அழகில்லைதான்.

‘ஹலோ‘என்றாள்.

பக்கத்தில் போய் கைகளைப் பற்றி குலுக்கினேன்.

“நிலா முதல்ல போய் குளிச்சுட்டு வா..அம்மாவை பார்த்துட்டு டிபன் சாப்பிடலாம்..நான் உனக்காக சாப்பிடாம காத்திருக்கேன்”என்றாள்.

நான் என் பெட்டி ,பேக் இரண்டையும் எடுத்துக் கொண்டு ஹாலில் இருந்து மாடிக்கு செல்லும் எங்கள் கோட்டை வீட்டின் பிரசித்தமான மரப் படியில் ஏறினேன்.மிகப் பெரியப் படிகள்.ஒரே நேரத்தில் மூன்று பேர் கையை கோர்த்து கொண்டு ஏறலாம்.

இருபத்து நாலு படிகள் முதல் மாடிக்கு.மொத்தம் மூன்று மாடிகள்.ஒவ்வொரு மாடியிலும் ஏறியதும் வலப் பக்கமும் இடப் பக்கமும் ஒன்பது ஒன்பது அறைகள்.

முதல் மாடியில் தான் எங்களுடைய அறைகள்.இரண்டாவது மாடி சொந்த காரர்களுக்கு.மூன்றாவது மாடி விருந்தாளிகள் வந்தால் தங்குவதற்கு.

மெல்ல என் அறைக்கு சென்றேன்.

என் அறையை சுத்தம் செய்திருந்தார்கள்.

மெத்தை மீது எனக்கு பிடித்த நீல நிற படுக்கை உறை.நீல உறைப் போட்ட இரண்டு தலையணைகள்.

நான் ஊருக்கு செல்லும் போது விட்டுப் போன துணிமணிகள் மற்றும் புதிய புடவைகள் எல்லாம் அலமாரியில் வைக்கப்பட்டு இருந்தது.

சித்திதான் இந்த வேலைகளை செய்திருப்பாள்.

என் பெட்டியைத் திறந்து சுரிதார் செட் ஒன்றை எடுத்து பெட் மேல் பொட்டேன்.

துண்டு எடுத்துக் கொண்டு குளிக்க தயார் ஆனவள் பால்கனியைப் பார்த்தேன்.

பால்கனி கதவு திறந்து இருந்தது.

என் சிறு வயதில் நேரம் காலம் பார்க்காமல் நான் நின்று ரசித்த பால்கனி.

துண்டை சுழட்டிக் கொண்டே பால்கனிக்கு சென்றேன்.கண்ணுக்கு எட்டிய தூரம் வரை ஜன நடமாட்டம் இல்லாத பகுதி.

தூரத்தில் கடல் நீலமாய் தெரிந்தது.வெயில் நிலம் எங்கும்.எப்பொழுதாவது மாமா தான் எங்களை கடலுக்கு அழைத்து செல்வார்.,தண்ணீருக்குள் ஒடக் கூடாது என்கிற நிபந்தனையோடு.

கல்லூரிக்கு செல்லும் முன் ஒரு முறை நான் தனியாய் ஆர்ப்பரிக்கும் கடல் முன் நின்று வந்தேன்.அன்று கூட மாமா பால்கனியில் இருந்து கவனித்துக் கொண்டு தான் இருந்தார்.

பால்கனியில் நின்று பழைய நினைவுகளை அசைப் போட்ட படி  கொஞ்ச நேரம் என்னை மறந்து நின்றேன்.

எதிர்பாராத உணர்வில் உந்தப் பட்ட நான் பக்கவாட்டில் பார்த்தேன்.

மூன்று பால்கனி தள்ளி அந்த பெண் வெண்ணிற உடையில் நின்று இருந்தாள்.

அவள் என்னை கவனிக்கவில்லை.

சொந்தம் போல் தெரியவில்லை.

வேறு பக்கம் பார்வை போய் திரும்பி பார்த்தேன்.

அவளை காணவில்லை.

அதிர்ந்தேன்.

அதற்குள் எங்கே போனாள்?

அத்தியாயம் நான்கு

குழப்பம் மெல்ல தலைத் தூக்கியது.

யார் அந்த பெண்?

யோசித்த படியே குளிக்கப் போனேன்.

என் வீட்டு பாத்ரூமில் குளித்து எவ்வளவு நாள் ஆயிற்று.

நான் வழக்கமாய் தேய்த்து கொள்ளும் சோப் புதியது வைக்கப்பட்டு இருந்தது.சித்தி சொல்லித்தான் வேலைக்கார பெண்மணி வாங்கி வைத்து இருப்பாள்.

குளிக்கும் போதே கீழே அம்மாவிடம் என்ன பேச வேண்டும் என்று ஒத்திகைப் பார்த்து கொண்டேன்.

அண்ணி வேறு சாப்பிடாமல் காத்திருக்கிறாள்.

குளித்து விட்டு என்னையும் அறியாமல் பால்கனிக்கு சென்றேன்.

அந்த பால்கனி காலியாய் இருந்தது.

உடைகளை மாற்றிக் கொண்டு இருக்கும் போது சித்தியின் குரல் கேட்டது.

‘‘சீக்கிரம் வா நிலா ..உன் அண்ணிக்கு ரொம்ப பசிக்குதாம்’’

நான் வேகமாய் கீழே இறங்கினேன்.

அண்ணி அங்கே தட்டைப் போட்டு உட்கார்ந்து இருந்தாள்.

‘‘அண்ணி ஒரு நிமிஷம் அம்மாக்கிட்டே போயிட்டு வந்துடறேன்..’’

அம்மாவின் அறைக்கு போனேன்.

அறைக்குள் நுழைந்ததும் அது வரை வாசலையே பார்த்து கொண்டிருந்த அம்மா என் தலையைப் பார்த்ததும் ‘சாப்பிட்டியா?’ என்று ஜாடையில் கேட்டாள்.

‘‘ இப்பதான் சாப்பிட போறேன் ’’ என்றேன்.

’‘சாப்பிட்டு வா’ என்று ஜாடை செய்து போகச் சொன்னாள்.

டைனிங் டேபிள் வந்தேன்.

அண்ணி காத்திருந்தாள்.

நானும் அண்ணியும் உட்கார்ந்ததும் சூடாய் தோசை வந்தது.

தேங்காய் பூ சட்டினி.எனக்குப் பிடித்தது.இதுவும் சித்தியின் வேளையாகத்தான் இருக்கும்.என் மீது

அவளுக்கு கொள்ளை ஆசை.

நல்ல பசி.

இரண்டு தோசை கூடவே சாப்பிட்டேன்.

அண்ணி ஏதாவது பேசுவாள் என்று பார்த்தேன்.

என் படிப்பை பற்றி மட்டும் விசாரித்தாள்.அவ்வளவுதான்.

அம்மாவின் அறைக்குப் போனேன்.

பக்கத்தில் உட்கார்ந்தேன்.அம்மாவின் கண்கள் கலங்கித்தான் இருந்தது.

அம்மாவின் கைகளைப் பற்றி கொண்டேன்.'

''என்ன நிலா இந்த அம்மாவை மறந்துட்டியா?''

''என்னம்மா சொல்றீங்க ..அம்மாவை யாராவது மறப்பாங்களா?அதுவும் உங்களை நான் மறப்பேனா?''

''மாமா எதுவும் சொன்னாரா நிலா?''

அம்மா நேரடியாய் விஷயத்திற்க்கு வந்து விட்டார்.

''இல்லம்மா.. படிப்பு முடிய இன்னும் எவ்வளவு நாள் இருக்குன்னு கேட்டாரு..''

''வேற ஒண்ணும் பேசலையா ?''

'' இல்லம்மா?''

''அப்புறம் ஏன் இவ்வளவு லேட் ?''

நான் கொஞ்சம் ஜாக்கிரதை ஆனேன்.

திரும்பி வந்ததும் நிச்சயம் மாமா அம்மாவிடம் நான் குளிக்கப் போன போது பேசியிருப்பார்.அம்மா என்னிடம் மறு உறுதி செய்து கொள்ள கேட்கிறார் என்று மட்டும் புரிந்தது.

'' கார் பஞ்சர் ஆயிடுச்சு ..''

''ஓ அப்படியா .. நான் நீங்க காபி சாப்பிட நிறுத்தும் போது ஏதாவது பேசியிருப்பீங்களோன்னு நினைச்சேன்.''

“இல்லம்மா..நீங்க கீழே விழுந்தது பற்றிதான் சொன்னாரு..வேற எதுவும் பேசலை..நல்லா எப்போதும் கோட்டை வீட்டுக்குள்ளே வலம் வந்த உங்களை இப்படி பார்க்கறது மனசுக்கு ரொம்ப கஷ்டமா இருக்கு ”

“அதுக்கு என்ன பண்ணறது ...நான் உழைச்சது போதும்ன்னு தேவி நினைக்கறா போல இருக்கு”

அம்மா சுற்றி சுற்றி மீண்டும் கோட்டை வீட்டுப் பொறுப்பை பற்றி பேச வருகிறார் என்று மட்டும் புரிந்தது.

அப்புறம் என்ன நினைத்தாரோ “ நிலா ரயில்ல வந்த களைப்பு இருக்கும் போய் ஒய்வு எடுத்துக்க..உன் அண்ணியை உனக்கு பிடிச்சிருக்கா அதான் சிவராமன் மனைவி எப்படி இருக்கா?”

“அண்ணி நல்லாதான் இருக்காங்க ..படிச்சப் பொண்ணாதான் அண்ணன் தேடி கட்டியிருக்கான்” என்றேன்.

“ சரி நிலா நீ போய் ரெஸ்ட் எடு ,அப்புறம் பேசிக்கிடலாம்” என்றாள்.

நான் வெளியில் வந்தேன்.

“இப்படி வந்து உட்காரு ” என்று கூப்பிட்டாள் என்னை மருமகள் ஆக்கி கொள்ள் சம்மதித்த அத்தைக்காரி.

அம்மா உள் இருந்தே “அவ கொஞ்சம் ஒய்வு எடுத்துட்டு வரட்டும் ”என்று குரல் கொடுத்தாள்.

நான் படியேறினேன்.

சித்தி பின்னாலேயே வந்தாள்.

“நிலா பட்டணத்துக்கு போனதும் நீ ரொம்ப அழகா மாறிட்டே”

“அதெல்லாம் இல்ல சித்தி..எப்போதும் போல தான் இருக்கேன் ..உங்க கண்ணுக்கு அப்படி தெரியுது போல”

“சித்தி மேலே இரண்டு பால்கனி தள்ளி ஒரு பொண்னைப் பார்த்தேன்..நம்ம சொந்தகாரங்க வழக்கமா தங்கற இடத்துலே ”

‘‘ஓ ..வந்தனாவைப் பார்த்தியா..பேச வேண்டியதுதான ?’’

‘‘நீங்க வேற சித்தி திடீர்ன்னு பார்த்ததும் பயந்துட்டேன்..யோசிச்சு முடிவு பண்ணறதுக்குள்ளே அவ உள்ள போயிட்டா ..நானும் குளிக்கப் போயிட்டேன்..யாரு சித்தி அது?’’

‘‘ நம்ப டாக்டரோடப் பொண்ணு ..சென்னையில தான் படிக்குது ’’

‘‘அப்படியா பரவாயில்லை அம்மா சொந்தகாரங்க அறையை ஒதுக்கிட்டாங்க’’

‘‘நம்ப குடும்ப டாக்டர் ஆச்சே...இத்தனை வருஷமா நம்ப குடும்பத்தை பார்த்துக்கறார் இல்லே..அவங்களுக்கு நம்ம சொந்தகாரக்களுக்கு கொடுகற மரியாதையை கொடுக்கணும்ன்னு உங்க அம்மா உத்தரவு’’

என் அறைக்குள் நுழைந்தேன்.

படுக்கையில் உட்கார்ந்தேன்.

சித்தி பக்க்கத்தில் உட்கார்ந்தாள்.சித்தி என்னுடன் எப்பொழுதுமே மனம் விட்டுப் பேசுவாள்.ஏனோ தெரியவில்லை அவள் வீட்டில் வேறு யாருடனும் ஒட்டவில்லை.

‘‘நிலா பட்டணத்துல உனக்கு யாராவது நெருக்கமா இருக்காங்களா ?’’

‘‘ என்ன கேட்கறீங்க சித்தி?’’

‘‘ம்.. இந்த லவ்வு .கிவ்வு ..?’’

’’சரிதான் படிக்க போனேனா லவ் பண்ண போனேனா..போங்க சித்தி’’ என்று செல்லமாய் கோபித்துக் கொண்டேன்.

‘‘சாதரணமா இருக்கிற பொண்ணுங்களுக்கே ஜொல்லு விடுவாங்களாம் இல்லே..உன்னை மாதிரி ஒரு அழகி போனா ..ஒருத்தன் கூடவா பின்னாடி
வந்து
இருக்க மாட்டான்?’’

‘‘வராம இல்லே..நான் தான் விரும்பலை.. ’’

‘‘பெரிய அத்தையை இன்னும் பார்க்கலை இல்லே?’’

சித்தி  கேட்டதும் எனக்கு உடம்பு நடுங்கியது.

என் தாத்தாவின் சகோதரி.என் அப்பாவிற்கு அத்தை.எனக்கு அத்தைப் பாட்டி.ஆனாலும் எல்லோருமே அத்தை என்று தான் கூப்பிடுவோம்.இந்த முதல் மாடியில் தான் கடைசி அறையில் இருக்கிறாள்.வயசானாலும் நடமாட்டம் இருக் கிறது.அறையை விட்டு வெளியில் வர மாட்டாள்.

அறையில் இருந்த படியே அவள் எல்லா செய்திகளையும் உள் வாங்கி விடுவாள்.அவள் முகமே அழுத்தமான ரேகைகளை கொண்டு ஒரு வித பயமுறுத்தலுடன் இருக்கும்.

சின்ன வயதில் அத்தையைப் பார்த்தாலே அலறி அடித்துக் கொண்டு ஒடி விடுவேன்.என்னை அவளுக்கு பிடிக்கும்.பக்கத்தில் போனாலே உடம்பு நொறுங்குகிறார் போல் இறுக அணைத்துக் கொள்வாள்.

அத்தை கோபமாக இருக்கும் நேரத்தில் யாருமே பக்கத்தில் போக மாட்டார்கள்.மிகவும் கொடூரமாக மூர்க்கத்தனத்துடன் நடந்து கொள்வாள்.

சில நேரங்களில் அத்தை நாள் கணக்காக அறைக்குள்ளேயே அடைந்து கிடப்பாள்.என் அண்ணன் சிவராமன் அவள் ஏதோ மந்திரம் செய்கிறாள் என்பான்.அவனுக்கும் அவளை பார்த்தாலே அலர்ஜி.

அத்தை வருகிறார்கள் என்றாலே காத தூரம் ஒடி விடுவான்.அறைக்குள் திரும்ப போய் விட்டார் என்பதை உறுதி செய்து கொண்டு தான் திரும்புவான்.

‘‘நான் போகும் போதேல்லாம் உன்னைப் பத்தி விசாரிக்காம இருந்ததே இல்லை..கோட்டை வீட்டோட வாரிசு வாரிசுன்னு சொல்லிட்டே இருப்பாங்க’’என்று சித்தி சொன்னதும் எனக்கு சித்தி யதார்த்தமாக இந்த வாரிசு விஷயத்தைப் பற்றி பேசுகிறாளா இல்லை அம்மா சொல்லி பேசுகிறாளா என்று சந்தேகம் வந்தது.

‘‘அட போங்க சித்தி நீங்கதான் இந்த கோட்டை வீட்டிற்கு அடுத்த வாரிசு’’என்றேன்.

‘‘நிலா என்னோட தங்கச்சி...இந்த கோட்டை வீட்டுக்கு வாரிசுன்னு சொன்ன அடுத்த வாரமே அவளுக்கு என்ன ஆச்சுன்னு உனக்கு தெரியும் இல்ல ?’’

சித்தி கேட்க எனக்கு குலை நடுங்கியது.

அத்தியாயம் ஐந்து

சித்தி சொன்னதும் எனக்கு உண்மையிலேயே உடம்பில் ஒரு உதறல் போட்டது.

இந்த சித்தியை விட ஒரு வயது சின்னவள்.

ரொம்ப கலகலப்பாக இருப்பாள்.

அவள் மூன்று வருடம் முன் சொந்தாகாரர்கள் எல்லோரும் வந்திருக்கும் போது சாப்பாட்டு மேஜையில் எல்லோர் முன்னாலும் சொன்னாள்.

‘என்ன பெரிய பராமரிப்பு..நான்தான் இந்த கோட்டை வீட்டோட அடுத்த வாரிசு..எங்க பெரிய அக்கா மாதிரி எல்லாம் கெடுபிடி பண்ணமாட்டேன்..சுதந்திரம் ..எல்லாருக்கும் எல்லாத்திலயும் சுதந்திரம்’ என்றாள்.

இந்த சித்திதான் அவளை அப்பொழுது அடக்கினாள்.

‘சும்மா இருடி ..ஏதாவது உளறிட்டு இருக்காதே’

அதன் பின் சாப்பாட்டு மேஜையில் யாரும் ஏதும் பேசவில்லை.ஆனால் அம்மாவின் முகத்தில் கோபம் கொந்தளித்ததைப் பார்த்தேன்.

எங்கள் வீட்டில் பெரிய குதிரை லாயம் உண்டு. லாயத்தில் முதலில் நான்கு உயர்ந்த சாதி குதிரைகள் இருந்தன.தாத்தாவின் மறைவுக்கு பின் அவை கொஞ்சம் கொஞ்சமாக குறைந்து கடைசியில் ஒரு குதிரை என்று ஆகிவிட்டது.

நான் அடுத்த வாரிசு என்று சொன்ன சித்தி வனஜாவின் பெட் அது.வேறு யாரையும் பக்கத்தில் கூட நிற்க

விடாது.சித்தி அதன் மேல் ஏறி பிடறி பறக்க சவாரி செய்வாள்.

மேஜையில் அவள் எல்லோரையும் தர்ம சங்கடப் படுத்திய அன்று மாலை அவள் வழக்கம் போல் குதிரை சவாரிக்கு புறப்பட்டாள்.

நான் அப்போது என் அறையின் பால்கனியில் தான் நின்று இருந்தேன்.

கோட்டை வீட்டு கதவை இப்பொழுது இருக்கும் சித்திதான் திறந்து விட்டாள்.வனஜா பறந்ததும் சித்தி மேலே என் அறைக்கு வந்து விட்டாள்.பால்கனியில் இருந்து பார்த்தால் கடல் மணலில் அவள் குதிரையில் செய்யும் சாகசம் தெரியும்.

நாங்கள் இருவரும் பால்கனியில் இருந்து பார்த்து கொண்டிருந்தோம்.

புயல் வேகத்தில் பறந்து கொண்டிருந்தாள் அவள்.

'யப்பா அவ தைரியம் எனக்கு வராது..எனக்கும் குதிரை ஏறணும்ன்னு ஆசைதான் ..பக்கத்துல போனாலே உர்றுன்னுது..'

சித்தி குதிரையில் பறந்து கொண்டிருந்தாள்.

பத்து நிமிடம் கடந்திருக்கும்.

பெர்க்கி என்று என் சித்தியால் செல்லமாய் கூப்பிடப்படும் அந்த செம்மண் நிற குதிரை அவளை சுமந்தபடி சீறிக்கொண்டு அலைகளால் ஆர்ப்பரித்துக் கொண்டிருந்த கடலுக்குள் பாய்ந்தது.

நானும் சித்தியும் அவள் ஏதோ சாகசம் செய்ய கடல் அலைக்கு போனாள் என்றுதான் முதலில் நினைத்தோம்.

பொங்கி வந்து கொண்டிருந்த தொடர்ந்து அலைகளின் ஊடே பெர்க்கி அவளுடன் பாய்ந்தது ,சென்றது,கண்களில் இருந்து மறைந்தது.

'சித்தி'என்று முதலில் அலறல் போட்டது நான்தான்.

மாமா ஆட்களுடன் கடலுக்கு போய் சேருவதற்க்குள் குதிரையுடன் அவள் காணாமல் போயிருந்தாள்.எங்கு

தேடியும் சித்தி ,குதிரை இரண்டு பேரையும் காணவில்லை.

இரண்டு நாள் கழித்து அவளுக்கு மிகவும் பிடித்த அதிகம் நேசித்த  கடலைப் பொளந்து கொண்டு சென்ற பெர்க்கி அதே  இடத்துலேயே சித்தியின் உடலுடன் வயிறு உப்பி ஒதுங்கியது.

வீட்டில் கதறி அழாதவர்கள் இல்லை அம்மாவாவைத் தவிர.

'தேவி காவு வாங்கி விட்டாள்'என்றார் மாமா.பல இரவுகள் என் கனவில் குதிரையில் பறக்கும் சித்தி வந்து தொந்தரவு செய்தாள்.

''என்ன சித்தி அதை நினைவு படுத்திட்டீங்க?''என்று திகிலுடன் சித்தியிடம் கேட்டேன்.

''நினைவு படுத்தலை நிலா..வந்துச்சு..நிலா நீ பட்டணத்துகு எல்லாம் போய் படிக்கிறே..உனக்குன்னு ஆயிரம் ஆசைகள் இருக்கும்..நீ ஏன் இந்த வணாந்திரத்திலே கஷ்டப்படணும்..உங்க அண்ணை சிவராமன் மாதிரியே நீயும் உனக்கு பிடிச்ச ஆம்பிள்ளையை கல்யாணம் பண்ணிட்டு அங்கயே செட்டில் ஆயிடு..உன்னை எனக்கு ரொம்ப பிடிக்கும் நிலா ,அதனாலதான் சொல்றேன்''என்றாள்.

சித்தி மிக இயல்பாய் தான் பேசினாள்.அவள் அக்ககறை எனக்கு புரியாமல் இல்லை.கொஞ்ச நேரம் எதை எதையோ யோசித்தவாளாய்,''சித்தி ரொம்ப டயர்டா இருக்கற மாதிரி இருக்கு நான் ஒரு குட்டி தூக்கம் போடறேன்..''என்றேன்.

''சரிப்பா..அப்ப நான் கீழே போறேன்''

''சித்தி நீங்க இங்கயே இருங்க உங்களுக்காக கிளம்பும் போது கொஞ்சம் கதை புத்தகங்கள் வாங்கிட்டு வந்தேன்.''

பொட்டியை திறப்பதற்குள் பாய்ந்தாள் சித்தி.

''நீ பலே ஆளு நிலா..வாங்கிட்டு வந்துட்டு எவ்வளவு சைலன்டா இருக்கே?''

சித்தி நிறைய படிப்பாள்.

அவளுக்ககாக வாங்கி வந்திருந்த புத்தகங்களை எடுத்து கொடுத்தேன்.

அவ்வளவுதான் அவள் அதை ஒவ்வொன்றாய் எடுத்து முகர்ந்து முகர்ந்து பார்த்தாள்.

என்னை கட்டிப் பிடித்து கன்னத்தில் முத்தம் இட்டாள்.

‘‘சூப்பர் நிலா ..போன வருஷம் உங்க மாமா திருநெல்வேலி போனப்ப வாங்கிட்டு வந்தார்..அதுக்கப்புறம் இப்பதான்..சரி நான் நம்ப லைப்ரரி ரூமுக்கு போறேன்..’’

‘‘பார்த்தீங்களா சித்தி ..புத்தகம் வந்ததும் என்னை மறந்துட்டீங்க ..இங்கயே உட்கார்ந்து படிக்கலாம் இல்லே’’

‘‘நிலா உனக்கே தெரியும் ..புத்தகம் படிக்கும் போது நம்ப பக்கத்துல யாரும் இருக்க கூடாது..அப்படியே அதுல மூழ்கி பயணம் பண்ணனும்..அதுக்கு சரியான இடம் நம்ப மூணாவது மாடி லைப்ரரிதான் ..நானே இரண்டு மணி நேரத்துல கீழே வர்றேன்..அது வரைக்கும் நீ நிம்மதியாய் தூங்கு’’

சித்தி புத்தகங்ளை எடுத்து கொண்டு ஓடாத குறையாக போனாள்.கொஞ்ச நேரம் முன் வரை கலக்த்தில் விழுந்த இருவரையும் புத்தகம் மாற்றி சித்தி பழைய துள்ளலுடன் போக வைத்து சந்தோஷமாய் இருந்தது.

நான் அப்படியே தூங்கிப் போனேன்.

மீண்டும் முழிப்பு வந்த போது இருட்ட ஆரம்பித்து இருந்தது.

‘இவ்வளவு நேரமா தூங்கியிருக்கிறோம்’என்று எனக்குள்ளேயே கேட்டபடி எழுந்து கீழே போனேன்.

டீ இருந்தது.

குடிக்கும் போது அம்மா கூப்பிட்டாள்.

அம்மாவின் அறைக்குப் போனேன்.

என் படிப்பைப் பற்றி சகஜமாய் விசாரித்தாள்.

‘‘நிலா உனக்கு கல்யாணம் பண்ணலாம்ன்னு முடிவு பண்ணியாச்சு ’’என்றாள் தடாலடியாக.

“எனக்கு வேற வழியில்ல நிலா..நீதான் அடுத்த வாரிசு..இதை நீ என்னப் பண்ணாலும் தடுக்க முடியாது.”என்றாள் தொடர்ந்து.

“படிப்பு ?”

“படிச்சது போதும்..மீதியை தபால்ல படிச்சுக்க”

“மத்த படிப்பு மாதிரி இல்லம்மா ..நேர தான் படிக்கணும்”

“என்ன நிலா நான் எவ்வளவு பக்குவமா சொல்லுறேன்..எனக்கு மரணம் நெருங்குது..”

“அப்படியெல்லாம் சொல்லாதீங்கம்மா ..இன்னும் பல வருஷம் நீங்க இந்த கோட்டை வீட்டிலே வலம் வரப் போறீங்க ”

“உனக்கு கல்யாணம் முடிவு பண்ணியாச்சு..அத்தை மகன் சுரேஷ் தான் மாப்பிள்ளை .அடுத்த முகூர்த்ததிலே கல்யாணம்”

“என்னம்மா சொல்றீங்க..” இப்பொழுதுதான் செய்தி அறிவது போல் முகத்தில் அதிர்ச்சி தேக்கினேன்.

“கண்ணா ”என்று மாமாவை கூப்பிட்டாள் அம்மா.

ஹாலில் சிவராமனுடன் பேசி கொண்டிருந்த மாமா‘இதோ வந்துட்டேன் அக்கா ”என்று சொல்லி கொண்டே வந்தார்.

உள்ளே வந்தவர் நாற்காலியில் உட்கார்ந்தார்.

“ஏண்டா வரும் போது இவக்கிட்டே நான் சொன்ன விஷயம் ஏதும் பேசலையா ?”

“இல்லக்கா பஞ்ஜர் ஆனதுல டென்ஷன் ஆகி மறந்துட்டேன்..நான் முதல்ல பேசணும்ன்னு நினைச்சேன் ..அதுக்குள்ள நீங்க ஆரம்பிச்சுடீங்க போல”

அம்மா மாமாவை ஒரு முறை முறைத்தாள்.அம்மா மிகவும் கோபமாய் இருக்கும் போது விடும் லுக் அது!

யாரும் பக்கத்தில் நிற்க மாட்டார்கள்.

“இப்பதான் அக்கா யோசிச்சேன்..அதுக்கும் ஒரு காரணம் இருக்கு ..நிலா நீ கொஞ்சம் வெளியில் போறியா ?”

நான் புரிந்து கொண்டேன்.

மாமா நான் சொன்ன பிரச்சனையை கிளப்ப போகிறார் என்றும் இன்னும் கொஞ்ச நேரத்தில் ஒரு பெரிய புயல் அந்த அறையில் வீசப் போகிறது என்றும் புரிந்தது.

‘அம்மா’என்று பெரிய அலறல்!

திடுக்கிட்டேன்.

அது சித்தியின் குரல்.

‘தொபீர் & டமால் & ஐயோ’ என்ற சப்தம்.

அமைதியான அந்த வேளையில் காதை கிழித்தது.

## அத்தியாயம் ஆறு

மாமா பதறி எழுந்து வெளியில் ஒடினார்.

அம்மா என்னை பார்க்க நானும் எழுந்து தொடர்ந்து அவர் பின்னால் ஒடினேன்.

ஹாலில் இருந்த எல்லோரும் மாடிப் படியின் அருகே நின்று இருந்தார்கள்.வனஜா சித்தி மடங்கி கடைசி படியில் கிடந்தாள்.அவள் முகத்தில் பயங்கரத்தை சந்தித்த பீதி தெள்ளத் தெளிவாய் தெரிந்தது.

முட்டிக்கருகே ‘பொச பொச‘வென்று வீங்க ஆரம்பித்திருந்தது.

“என்ன ஆச்சு?” மாமா கேட்க அவள் ஏதோ சொல்ல வாய் திறந்தாள்.

அவள் வாயில் இருந்து காற்றுதான் வெளியில் வந்தது.

டாக்டர் ஒடி வந்தார்.

‘முதல்ல தூக்கி சோபவிலே படுக்க வையுங்க” டாக்டர் கட்டளையிடும் குரலில் சொல்ல மாமா அவள்

கால்களைப் பிடிக்க நான் தலைப் பக்கம் பிடித்தேன்.

மாமா கைப்பட்டதும் ஏற்கனவே அடிப் பட்டிருந்த வேதனையில் அலறித்துடித்தாள்.

“மெல்ல மெல்ல கால் பிசகியிருக்கும் போல”

டாக்ர் சொன்னதும் மெல்ல அரை மயக்கத்தில் இருந்த வனஜாவை சோபாவில் கிடத்தினோம்.

சித்தியின் உடல் நடுங்கி கொண்டே தான் இருந்தது.

டாக்டர் அவளை பரிசோதித்துப் பார்த்தார்.

பின் மாமாவைப் பார்த்து “நல்லா ஸ்பரையின் ஆகியிருக்கு..ஊசி போடறேன்..இங்கயே தூங்கட்டும்”என்றார்.

நான் சித்தியைப் பார்த்தேன்.

இன்னமும் ஏதோ உளறி கொண்டு தான் இருந்தாள்.

நான் சித்தியின் முகத்தருகே குனிந்தேன்.

சித்தி “அங்கி ..உருவம்..கருப்பு..”என்று என் காதில் சொன்னாள்.

டாக்டர் “கொஞ்சம் நகரு நிலா..முதல்ல வலிக்கும் ..தூக்கத்திற்கும் ஊசி போட்டுடறேன்...ரெஸ்ட் எடுக்கட்டும் ”என்றார்.

அவர் ஊசிப் போட்ட சில நிமிடங்களில் சித்தி கண்களை மூடி தூங்க ஆரம்பித்து விட்டாள்.மாமா அம்மாவின் அறைக்குள் நுழையநான் எதிர்புறம் சோபாவில் உட்கார்ந்தேன்.

பக்கவாட்டில் உட்கார்ந்து இருந்த அண்ணி கொஞ்சம் பயத்துடனே உட்கார்ந்து இருப்பது தெரிந்தது.என்னை பார்த்ததும்“பட பட ன்னு உருண்டு வந்தா..என்னமோ ஒரு பெரிய சக்தி வேகமா உருட்டி விட்டா மாதிரி ”என்றாள்.

சிவராமன் “சக்தியும் இல்ல ஒன்னும் இல்லே..ஏதோ யோசனைப் பண்ணிட்டே இறங்கியிருப்பா..கால் தடுமாறி விழுந்திருப்பா”என்றான்.

நான் சித்தி என் காதருகில் சொன்னதை நினைத்துப் பார்த்தேன்.வார்த்தைகளை கோர்த்தேன்.

‘கருப்பு..அங்கி..உருவம் ..’

கருப்பு அங்கி அணிந்த உருவம்.

யாரிடமும் இதை சொல்லி கலவரப் படுத்த விரும்பவில்லை.

நான் வந்த பின் இது மாதிரி நடந்து விட்டதே என்கிற கவலைதான் எனக்கு.

சித்தி கவன குறைவாக நடப்பவள் இல்லை.எதிலும் நிதானம் ஆனவள்.தவறி விழுந்திருக்க வாய்ப்பு இல்லை.

அவள் மேலே லைப்ரரியில் இருந்து இறங்கும் போது கருப்பு அங்கி உருவம் எதிரே வந்திருக்க வேண்டும்..சித்தி பயந்து இருக்க வேண்டும்.எப்படியும் எழுந்தவுடன் தனியாய் பேச வேண்டியதுதான்.

அம்மாவின் அறையில் மாமா பேசி கொண்டிருப்பது என் காதுகளில் பட்டும் படாமலும் விழுந்தது.

மேல் படியில் இருந்து சுரேஷ§ம் அத்தையும் இறங்கி வருவதைப் பார்த்தேன்.வேகமாய் இறங்கி வந்த அத்தை ‘என்னாச்சு நிலா..இப்பதான் மெலே போனேன் ..இவன் ஏதோ கீழே சப்தம்ன்னு சொன்னான்..திரும்ப வரோம்.’’என்றவள் சோபாவில் நாங்கள் கிடத்தியிருந்த வனஜா சித்தியைப் பார்த்தாள்.பின்‘‘என்னாச்சு இவளுக்கு’’ என்று கேட்டாள்.

நான் நடந்ததை சொன்னேன்.

‘‘யாராவது தள்ளி விட்டுதான் இவ விழுந்திருக்கனும்’’என்றாள்.

‘‘நீயா  கற்பனையில் ஏதாவது சொல்லாதேம்மா..யாரு இங்க வந்து அவங்களை தள்ளி விடப் போறாங்க..தவறி தான் விழுந்து இருப்பாங்க ’’என்றவன் என் பக்கம் திரும்பி ‘‘என்ன நிலா நான் சொல்றது சரிதானே’’என்று கேட்டான்.

அவன் என்னுடன் பேச விரும்புகிறான் என்பது எனக்கு புரியாமல் இல்லை.

அத்தை கொஞ்ச நேரம் வனஜா சித்தியைப் பார்த்து கொண்டே இருந்தாள்.பின் எதிர் சோபாவில் வந்து உட்கார்ந்தாள்.

உள்ளே மாமாவின் குரலை விட அம்மாவின் குரல்தான் வேகமாய் ஒலித்தது.

கொஞ்ச நேரத்தில் மாமா வெளியில் வந்தார்.

என்னைப் பார்த்தவர் ‘‘நிலா என் கூட வா..அத்தையைப் பார்த்துட்டு வரலாம்’’ என்றார்.

உண்மையிலேயே நான் பயத்தில் தான் அத்தையை பார்கக்வில்லை.ஏதாவது என் மனதுக்கு பிடிக்காத விஷயத்தை சொல்லி சங்கடப் படுத்தி விடுவாள் என்கிற எண்ணத்தில் தான் நான் அவரை பார்ப்பதை வந்ததில் இருந்தே தள்ளிப் போட்டேன்.வனஜாவுடன் போய் பார்க்கலாம் என்றுதான் இருந்தேன்.

அத்தையின் அறைக்கு செல்ல நான் மாமாவுடன் நகர மாமா‘‘நிலா சாப்பாடு கொண்டு போன் தங்கம்மா கிட்ட அத்தை சொல்லியிருக்கா..நிலா ரொம்ப பெரிய மனுஷி ஆயிட்டாளா..என்னை வந்து பாக்க கூட முடியாமன்னு..’’என்றார்.

நான் ‘‘மாமா அம்மாகிட்டே பேசிட்டீஙகளா’’என்று கேட்டேன்.

மாமா‘‘நான் பேச பீடிகை போட்டதுமே உங்கம்மா பிடிச்சுட்டா..ஏண்டா  நிலாவை நீயே மருமகள் ஆக்கிகணும்ன்னு ஒரு எண்ணம் உனக்கு இப்போ வந்திருக்கோன்னு என் முகத்துல வச்ச பார்வையை எடுக்காம கேட்டா.உங்கம்மா பத்தி உனக்குதான் தெரியுமே .. நம்ம மனசுக்குள்ளே என்ன ஒடுதுன்னு சுளுவா கண்டு பிடிச்சுடுவா..நீ புத்திசாலித்தனமா இவ்வளவு திட்டம் போடும் போது உன்னைப் பெத்தவ அவளுக்கு என்ன சாமர்த்தியம் இருக்கும்?’’

‘‘என்னதான் சொன்னாங்க?’’

‘‘எதுக்கு தள்ளி போடணும் ..இன்னைக்கே சாப்பாட்டு நேரத்துல எல்லாரையும் வச்சுட்டு பேசிடுவோம்ன்னு சொல்லிட்டா ..நிலா ஒண்ணு நல்லா புரிஞ்சுக்க ..என்னொட புது கோரிக்கையை வச்சிட்டு எல்லாம் ரொம்ப நாள் தள்ளிப் போட முடியாது..என்னால உனக்கு உதவ முடியாம போயிடும்மோன்னு எனக்கு தோண ஆரம்பிச்சுட்டு ’’என்றார்.

மாமா சொன்னது என்னை இன்னும் கலவரப் படுத்தி விட்டது.இதற்குதான் வர சொல்லியிருக்கிறார்கள் என்று ஊகம் செய்திருந்தாள் வராமலே இருந்திருக்கலாம்?

கீழ் தளத்திலேயே இருந்த அத்தையின் அறையை அடைந்து விட்டோம்.

மாமா கதவை மெல்லமாக தட்ட ‘யாரு?’என்கிற கணீர் குரல் கேட்டது.

‘‘நான்தான் கண்ணன்..நிலா வந்திருக்கா’’என்றார்.

கொஞ்ச நேரம்தான் கதவு திறந்தது.

பூ வேலைப்பாடு செய்த நீண்ட இரவு உடையில் அத்தை.கொஞ்ச நேரம் முன்னால் கேட்ட குரலுக்கு சம்பந்தமே இல்லாத தோற்றம்.

என்னை பார்த்ததும் முகத்தில் ஒரு சின்ன சந்தோஷம் வந்து போனது.

‘‘உள்ளே வா நிலா ’’ என்ற படி கட்டிலுக்கு போனாள்.அமர்ந்தவள் அருகில் நான் செல்ல என் கைகளை இறுகப் பிடித்து கொண்டாள்.

தோற்றத்திற்கும் வயதிற்கும் ஒட்டாத பலம் கைகளில்.

என் கூந்தலில் கை வைத்து தடவி விட்டாள்.

‘‘நீ வந்ததுமே வருவேன்னு நினைச்சேன்..என்னை மறந்துட்டே போல..நீ வந்திருக்கேன்னு தங்கம்மா சொல்லிதான் எனக்கு  தெரியணுமா?’’அத்தையின் குரலில் உண்மையிலேயே வருத்தம் தெரித்தது.

‘‘அப்படியெல்லாம் இல்லை அத்தை ’’

‘‘ எல்லாரையும் போல நான் உன்னை நினைக்கலை..இந்த கோட்டை வீட்டோட ராணி நீ..’’அத்தையின் முகத்தில் இருந்த வயதின் ரேகைகள் என்னை பயமுறுத்த கூடியதாக இருந்தது.

‘‘கோட்டைக்கு நான் ராணியானாலும் உங்களுக்கு நான் நிலாதான்’’என்றேன்.

அத்தை சிரித்தாள்.

‘‘நிலா நீ நல்லா பேசறே..சின்ன வயசுல நீ வெடுக் வெடுக்குன்னு  யாரு என்ன கேட்டாலும் பதில் சொல்லுவே..ரொம்ப புத்திசாலியா,பெரியாளா வருவேன்னு அப்பவே எனக்கு தெரியும்..நீ படிக்க போனதுமே சந்தோஷப் பட்டேன்...ஆனா உன்னோட வாழ்க்கை இந்த கோட்டை வீட்டீலே முடியனும்ன்னு இருந்தா யாரு என்னை பண்ண முடியும்?’’அத்தை சொல்லிய படியே என் கைகளை அழுத்திப் பிடிக்க எனக்கு உடம்பெல்லாம் ஒரு உதறல் போட்டது.

அத்தியாயம் ஏழு

அத்தையின் கைகளில் எப்பொழுதுமே ஒரு சூடு இருக்கும்.அத்தை மெல்ல என் கூந்தலை தடவினாள்.

‘‘உங்க அம்மா உனக்கு கல்யாணம் பண்ணி வைக்க துடிக்கிறா..ஏற்கனவே சுரேஷ் தான் மாப்பிள்ளைன்னு முடிவு ஆயிடுச்சு ...உனக்கு அவனை பிடிக்கலையா?’’

‘‘ஆமாம் ..’’

அதற்குள் அத்தைக்கு செய்தி எப்படி வந்தது என நான் நினைக்கும் முன் அடுத்த இன்னொரு குண்டையும் தூக்கிப் போட்டாள்.

கண்ணன் மாமா பக்கம் திரும்பினாள்.

‘‘முதல்லேயே உனக்கு இவளை மருமக ஆக்கிக்க விருப்பம் இருக்குன்னு சொல்லியிருக்களாம் இல்லே ..புதுசா ஒரு பிரச்சனையை இப்ப கிளப்பி விட்டிருக்கே..?’’ & அத்தை கேட்ட தொணியில் மிரண்டது  நான் மட்டுமல்ல ..மாமாவும்

தான்.இப்பொழுதுதான் அவர் அம்மாவிடம் பேசி விட்டு நேரே என்னை அழைத்துக் கொண்டு அத்தை அறைக்கு நேரே வந்திருக்கிறார்.அதற்குள் எப்படி செய்தி வந்திருக்கும்?

நான் ஒருவித பீதியுடன் அத்தையைப் பார்த்தேன்.

அத்தை என் முகத்தில் இருந்த கேள்வியைப் படித்தவள் போல் ‘‘எனக்கு எப்படி அதுக்குள்ள தெரியும்ன்னு யோசிக்கிறியா ..இந்த வீட்டிலே சின்ன அசைவு கூட எனக்கு தெரியாம நடக்காது..ஆமாம் உனக்கு வேற ,மாதிரி பிரச்சனை ஏதும் இல்லையே?’’

‘‘இல்லை’’ ‘சட்‘டென்று சொன்னேன் வேறு ஏதும் யோசனைக்கு இடம் தராத வேகத்தில்!

அத்தை சிரித்தாள்.

அத்தையின் இந்த சிரிப்பு கூட எனக்கு பயத்தைதான் தந்தது.என் கண்கள் நான் சொல்லாமலேயே அத்தையின் ஓவிய ஸ்டேண்டின் மேல் சென்றது.

அத்தை பிரமாதமாக படம் வரைவாள்.சித்தி குதிரையுடன் கடலில் மரித்ததுற்கு சில நாட்கள் முன்னால் அவளின் முழு உருவ படத்தினை வரைந்து முடித்திருந்தாள். விருப்பம் இல்லாமலேயே சித்தி அத்தைக்கு போஸ் கொடுத்ததை பின்னாளில் அறிந்தேன்.

இப்போழுது அந்த ஸ்டேண்டில் இருந்த பலகை வெல்வெட் துணியால் மூடப் பட்டு இருந்தது.

அது பறக்காமல் இருக்க கிளிப்பைப் போட்டிருந்தாள்.நான் அத்தையை பார்க்க ‘‘அதை நீ பார்க்கணுமா ,இப்பதான் ஆரம்பிச்சிருக்கேன்..ஒரு வாரம் போகட்டும் நானே உன்னை கூப்பிட்டு காண்பிக்கறேன்..சரிதானே?’’

‘ம்’ என்று தலையாட்டினேன்.

அத்தை மாமா பக்கம் திரும்பினாள்.

‘‘இவளை மருமகள் ஆக்கிக்க தீவிரமா இருக்கே..அப்படித்தானே?’’

‘ஆமாம்‘ என்று தலையாட்டினார் மாமா.

“எப்படியோ நீங்க ரெண்டு பேரும் நினைக்கறது நடந்தா சரி”

அத்தை பூடகமாய் சொன்னதும் மிரண்டு தான் போனேன்.உடனே அறையை விட்டு வெளியில் செல்ல வேண்டும் போல் இருந்தது.

மாமாவிற்கும் அதே எண்ணம் தான் நிச்சயம் மனதில் ஒடிக் கொண்டிருக்கும் என்றே தோன்றியது.

அதனை என்ன நினைத்தாளோ “நீ கிளம்பு நிலா ..நாம திரும்ப நாளைக்கு பேசலாம்”என்றாள்.

விட்டால் போதும் என்று மாமாவும் எழுந்தார்.

அத்தை “கண்ணா நீ இரு ..உன்கிட்ட கொஞ்சம் தனியா பேசணும்”எழுந்த மாமா உட்கார நான் வெளியில் வந்தேன்.மாமா தனியாய் மாட்டி கொண்டது போல்தான் எனக்கு தோன்றியது.

மாமா நான் அவரிடம் சொன்னதை சொல்லி விடாமல் இருக்க வேண்டும் என்று தெய்வத்தை வேண்டி கொண்டேன்.

அறை வாசலில் நிற்க விருப்பம் இல்லாமல் அங்கிருந்து நகர்ந்து மீண்டும் ஹாலிற்கு வந்தேன்.வனஜா சித்தி இன்னும் உறக்கத்தில் இருந்தாள்.

சுரேஷ் என்னைப் பார்த்ததும் சிரித்தான்.அவன் சிரிப்பு எனக்கு எரிச்சலை உண்டு பண்ணியது.அவன் என்னுடன் பேசுவதை சகித்து கொள்ள வேண்டாமென்றால் அங்கிருப்பதை தவிர்க்க வேண்டும் என்று முடிவு செய்தேன்.

படியேறி என் அறைக்கு வந்தேன்.அறைக்குள் கட்டிலின் மேல் என் பெட்டியும் லெதர் பேக்கும் திறந்து கிடந்தன.அவற்றையெல்லாம் மூடி வைத்துப் போனது நினைவில் வந்தது.கோட்டை வீட்டில் யாரும் அறைகளைப் பூட்டுவது கிடையாது.அறைக்கு உரியவர்கள் அனுமதி பெறாமல் யாரும் நுழைவதும் இல்லை.இருந்தும் என் அறைக்குள் யாரோ வந்து

சென்று இருக்கிறார்கள் என்பது மட்டும் தெரிந்தது.யாராக இருக்கும்?

கீழே நடந்த களேபரத்தில் எல்லோரும் இருந்ததாகத்தான் எனக்கு நினைவு.அத்தையும் சுரேஷ§ம் மேல் இருந்துதான் கீழே வந்தார்கள்.அவர்களில் யாராவது ஒருவர் என் அறைக்குள் வந்து இருக்களாம்.அவர்களுக்கு இந்த அறையில் என்ன வேலை?

பெட்டியில் நான் வைத்து இருந்த அனைத்தும் அப்படியே இருந்தது.ஆனால் கவருக்குள் நான் வைத்து இருந்த என் சிறிய போட்டோ ஆல்பம் வெளியில் இருந்தது.யாரோ எடுத்துப் பார்த்திருக்கிறார்கள்.

பெட்டிக்குள் நான் அதை வைத்து இருந்த இடம் வேறு..இப்பொழுது அது இருக்கும் இடம் வேறு!

ஆல்பத்தை பார்த்தவர்கள் நான் ரமேஷ§டன் எடுத்து கொண்ட புகைப்படத்தைப் பார்த்து இருக்கலாம்!

மூளை குழம்ப தேவையில்லாத குழப்பங்களை மூளையில் இருந்து விரட்ட வேண்டும் என்று முடிவு செய்தேன்.

டாக்டரின் பெண் வந்தனாவின் நினைவு வந்தது.இத்தனை களேபரத்திலும் அவள் கீழே வரவே இல்லையே?எப்படி இருந்தாலும் சாப்பாட்டு நேரத்தில் கிழே வந்துதான் ஆக வேண்டும்?

நாமே போய் பார்த்தால் என்ன? ஒன்றும் தவறில்லை என்று யோசித்த படியே அறையை விட்டு வெளியில் வந்தேன்.வந்தானாவின் அறைக்கு சென்று மெல்ல அறையின் கதவை தட்டினேன்.

‘‘யாரு ?’’ என்று உள்ளே இருந்து ஒரு இனிமையான குரல்.

‘‘நிலா’’ என்றேன்.

கொஞ்ச நேரத்தில் கதவு திறந்தது.

இப்பொழுது புதிய சுரிதாரில் இருந்தாள்.பால்கனியில் நான் பார்த்த போது கொஞ்சம் தூரத்தில் இருந்து

பார்த்ததில் அவ்வளவாக கணிக்க முடியவில்லை.நான் எதிர்பார்த்ததை விட அழகாக இருந்தாள்.

‘ஹாய்..’ என்றாள்.

நானும் ‘ஹாய்’ என்றேன்.

‘உள்ளே வாங்க நிலா’ என்றாள்.

உள்ளே சென்றேன்.

அறையின் கட்டிலின் மேல் இரண்டு மூன்று புத்தகங்கள் கிடந்தன.எல்லாமே ஆங்கில நாவல்கள்.

‘‘உட்காருங்க ’’என்றாள்.

சுவரை ஒட்டிப் போடப் பட்டிருந்த நாற்காலியில் உட்கார்ந்தேன்.அவளும் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

என்னுடைய கைகளைப் பிடித்து கொண்டவள் ‘‘தப்பா நினைச்சுகாதீங்க நீங்க வந்ததுமே வந்து பார்க்கலாம்ன்னுதான் இருந்தேன்...கீழே  உங்க சொந்தகாரங்களா இருந்தாங்க... நிறைய பேர் இருந்தாலே எனக்கு அலர்ஜி..அதுதான் வரலை..எப்படி இருக்கீங்க..அப்பா அடிக்கடி சொல்லுவாரு..கோட்டை வீட்டிலேயே நீங்கதான் ரொம்ப புத்திசாலியான அழகான பொண்ணுன்னு சொல்வாரு..உண்மைதான் ..நீங்க ரொம்ப அழகாதான் இருக்கீங்க..’’ சொல்லி நிறுத்தினாள்.

அவள் சொன்னதும் எனக்கு முகம் சிவந்தது.

‘‘நீயும் தான் அழகா இருக்கே’’

‘‘கொஞ்ச நேரம் முன்னாடி உங்க அறைக்கு வந்தேன்..கதவைத் தட்டிப் பார்த்தேன்..நீங்க திறக்கலை.சரி சாப்பாட்டு நேரத்திலே பார்த்துகலாம்ன்னு வந்துட்டேன்..’’

‘‘நான் கிழே இல்ல இருந்தேன்’’ என்று சொன்ன நான் அவள் முகத்தையேப் பார்த்தேன்.முகத்தில் எந்த வித சலனமும் காட்டாமல் இருந்தாள்.

ஒரு வேளை இவள் தான் என் பெட்டியை குடைந்து இருப்பாளோ?

‘‘இந்த கோட்டை வீடு உனக்கு பிடிச்சிருக்கா வந்தனா?’’

‘‘ஏன் கேட்கறீங்க?’’

‘‘நம்பளை மாதிரி மாடர்ன் பெண்களுக்கு இந்த மாதிரி படு நிசப்தமா இருக்கிற வீடு..?’’

‘‘உங்களுக்கு பிடிச்சிருக்கோ இல்லையோ நிலா எனக்கு ரொம்ப பிடிச்சிருக்கு..இங்கயே நிரந்தரமா தங்கிடலாம்ன்னு கூட தோணுது’’ அவள் சொன்ன தொணி எனக்கு வியப்பைத் தந்தது.

அத்தியாயம் எட்டு

அவள் முகத்தில் ஏதோ ஒரு தீவிர சிந்தனையின் ஓட்ட புள்ளிகள் தெரிந்தன.

நான் எழுந்தேன்.

‘‘வந்தனா நான் கிளம்பறேன்...அப்புறம் பார்க்கலாம்’’

அவளும் எழுந்தாள்.

அந்த அறையை விட்டு நான் வெளி வந்து வராண்டாவில் நடந்த போது அவள் தன் அறையின் உள்புறம் தாழிட்டு கொள்ளும் சப்தம் கேட்டது.

சித்தி லைப்ரரிக்கு போவதாக சொல்லி விட்டுதான் போனாள்.அதன் பின் படியில் கிடந்த சித்தியைத்தான் பார்த்தேன்.லைப்ரரியில் ஏதாவது பிரச்சனை இருக்குமோ?

லைப்ரரிக்குள் போய் பார்த்தால் என்ன என்ற எண்ணம் எழுந்தது.

அடுத்த தளத்திற்கு செல்லும் படியில் ஏறினேன்.

அந்த நிசப்தத்தில் என் காலடி ஓசைதான் பெரியதாக கேட்டது.

லைப்ரரியின் வாசல் கதவுகள் இரண்டும் திறந்தே கிடந்தன.வழக்கமாக வெளியில் பூட்டாமல் சும்மா தாழ் போடப் பட்டிருக்கும்.

யார் வேண்டுமானாலும் உள்ளே போய் புழங்கி விட்டு வெளியில் வரும் போது மறுபடி தாழ் போட்டு விட்டு வரலாம்.வாரத்திற்கு ஒரு முறை எங்கள் வீட்டு வேலைக்காரி சுத்தம் செய்வாள்.

லைப்ரரிக்குள் எதையோ பார்த்து சித்தி பயந்திருக்க வாய்ப்பு உள்ளதாகவே எனக்கு தோன்றியது.

மெல்ல என் பார்வையை சுற்றி விட்டேன்.

படு நேர்த்தியாக இருந்த எங்கள் லைப்ரரி என்னையே பிரமிக்கதான் வைத்தது.

லைப்ரரியை நானே ரசித்துக் கொண்டிருந்த வேளையில் தான் அது கண்ணில் பட்டது.

ஒரு புத்தகம் தரையில் கிடந்தது.

எடுத்தேன்.

இது வரை என் கண்ணில் படாத புத்தகம்.அச்சிடப்பட்ட புத்தகம் இல்லை.உள்ளே இருந்தது கையெழுத்துப் பிரதி.அட்டை காலிகோ பைண்ட் செய்யப பட்டு இருந்தது.உள்ளே படங்களுடன் சில பக்கங்கள்.கை எழுத்தில் ஒரு நளினம் இருந்தது.நிச்சயம் ஒரு பெண்ணின் கையெழுத்துதான்.ஆனால் அகால மரணம் அடைந்த என் சித்தியின் கையெழுத்தோ என் அம்மாவின் கையெழுத்தோ இல்லை.படங்களைப் பார்த்தேன்.

கோட்டை வீடு பல கோணங்களில் வரையப் பட்டு இருந்தது.வடிவமைப்பு மற்றும் கட்டப் பட்ட வருடம் மற்றும் அதன் விவரங்கள்.பின் பக்கங்களில் சில படங்கள்.அந்த புத்தகத்தின் கடைசிப் பக்கங்களில் கோட்டை வீட்டுப் பெண்களின் படங்கள் வரிசைக்கிரமமாக வரையப் பட்டு இருந்தன.கொள்ளுப் பாட்டி,பாட்டி,அம்மா வரிசையாய் பார்த்து கொண்டே வந்தேன்.கடைசியில் என் படம்.இது என்ன வரிசை..?யார் எதற்காக இந்த கையெழுத்துப் பிரதியை தயார் செய்து இருப்பார்கள்.?

யோசித்து கொண்டு இருந்த வேளையில் என் கண் முன் ஏதோ ‘விருட்‘டென்று நகர நிமிர்ந்தேன்.கடைசிப் புத்தக இடுக்கில் யாரோ நகர்ந்தது போனது போல்

தெரிய அதிர்ச்சி அடைந்து தைரியத்தினை வரவழைத்துக் கொண்டு ‘யாரது ‘ என்று குரல் கொடுத்தேன்.

மெல்லிய சிரிப்பொலி நான் திகிலில் உறைய அந்த சிரிப்பும் நின்றது.புத்தகத்தினை இரண்டாவது ரேக்கில் ஒரு இடத்தில் சொருகினேன்.புத்தகம் வைத்த இடத்தினை  நினைவில் பதித்துக் கொண்டேன்.

என் பின்னால் யாரோ விரைந்து சென்றது போல் தோன்ற வேகமாய் திரும்பினேன்.லைப்ரரியின் வாசல் கதவு லேசாய் ஆடியது.வேகமாய் வாசல் பக்கம் ஓடிப் போய் பார்த்தேன்.யாரையும் கானோம்.ஆனால் ஒன்று மட்டும் தெளிவாய் புரிந்தது.

நான் உள்ளே வரும் போதே யாரோ இருந்திருக்கிறார்கள்.என்ன காரணத்தினாலோ தாங்கள் யார் என்று என்னிடம் காட்டிக் கொள்ள விரும்பவில்லை.

வாசலில் நிழலாட நிமிர்ந்தேன்.எங்களின் குடும்ப டாக்டர்.“என்ன நிலா வந்த ரெண்டு நாள்லயே கோட்டை வீடு போர் அடிக்க ஆரம்பிச்சிடுச்சா?”என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

“அப்படி இல்ல கோட்டை வீட்டு லைப்ரரியை யாராவது புழங்கறாங்களா..இல்லை புத்தகங்கள் எல்லாம் தனிமையில வாடுதான்னு பார்க்க வந்தேன் ”என்றேன் சிரித்து கொண்டே.

அவர் பதில் ஒன்றும் சொல்லவில்லை.நான் சொன்னதை அவர் ரசிக்கவில்லை என்பது மட்டும் புரிந்தது.எனக்கு ஒரு சந்தேகம் திடீர் என்று மனதில் எழுந்தது.ஒரு வேளை டாக்டர்தான் நான் வரும் போது உள்ளே இருந்ததோ..?

அப்படி இருந்திருந்தால் என்னை கலவரப்படுத்தி விட்டு வெளியே செல்ல வேண்டிய அவசியம் என்ன?

“டாக்டர் நீங்க எப்ப புத்தகம் எல்லாம் படிக்க ஆரம்பிச்சீங்க..”

“உங்க தாத்தா காலத்துல இருந்தே சில முக்கியமான மருத்துவப் புத்தகங்களை இங்க வாங்கி

வச்சிருக்கார்..எப்பவாவது அந்தப் புத்தகங்களை புரட்ட மேலே வருவேன்..''என்றார்.

''சரி...டாக்டர்....நான் கீழே போறேன்''என்று கூறி விட்டு நகர்ந்தேன்.

கீழே வந்த போது வனஜா சித்தி எழுந்து உட்கார்ந்து இருந்தாள்.

''எங்க போன நிலா ..இவ எழுந்த உடனேயே உன்னைத்தான் கேட்டா ..''என்றாள் அத்தை.

வனஜா சித்தி ''நிலா ''என்ற படியே எழுந்தாள்.

''கால் வலி இருக்கா?''

''வலி இல்லாம இல்ல ..''  சித்தி சொல்லி கொண்டிருந்த வேளையில் அத்தை '' நிலா நான் மேலே போறேன்..இவளை தனியா விட்டுட்டு போக வேண்டாம்ன்னுதான் இங்க உட்கார்ந்து இருந்தேன்..''என்றாள்.

''சிவராமன் அண்ணன் எங்கே..?''

''அவன் இப்பதான் மேலே போனான்..''என்றாள்.

அத்தை போனதும் நான் வனஜா சித்தி அருகில் உட்கார்ந்தேன்.

சித்தியின் கால்களைப் பார்த்தேன்.வலது காலில் வீக்கம் இருக்கத்தான் செய்தது.

''நிலா''என்றாள்.

''சொல்லு சித்தி..''

''எனக்கு ரொம்ப குழப்பமா இருக்கு நிலா ..இங்க ஏதேதோ நடக்குது..''

''எப்படி விழுந்தீங்க சித்தி..?''

''நானா விழலை நிலா..யாரோ என்னை தள்ளி விட்டாங்க '' என்றாள் கண்களில் பீதி தெறிக்க சொன்னாள்.

''என்ன சொல்றீங்க சித்தி..?''

‘‘ஆமாம் நிலா ..லைப்ரரியில் உட்கார்ந்து படிச்சுட்டு இருந்தேன்..உள்ளே போனதுலேந்தே ஒரு உணர்வு..யாரோ இருக்கிற மாதிரியே..எழுந்துப் பார்தேன்..நான் எழுந்த உடனேயே ரேக் பின்னாடி யாரோ ஒடினா மாதிரி இருந்தது..அப்பதான் நம்ப கோட்டை வீட்டு பரம்பரை பத்தி கையால எழுதி இருந்த புத்தகம் ஒன்னுப் பார்த்தேன்..அதைப் புரட்டிட்டு இருக்கும் போது பெரிய கருப்பு அங்கிப் போட்ட உருவம் வேகமா ஒடி வந்தது..நான் பயந்து போய் வெளியில ஒடி வந்தேன்..மாடிப்படிக்கிட்ட வந்தப்ப என் பின்னாடி அந்த உருவம் கை வச்சது மட்டும் தான் எனக்கு தெரியும்..நல்ல வேளை கையை ஊனாம இருந்தேன்..இல்லேன்னா கை ஒடைஞ்சிருக்கும்..நிலா எனக்கு ஒரு சந்தேகம்..’’சொல்லி விட்டு நிறுத்தி சுற்றும் முற்றும் பார்த்தாள்.

நானும் பார்த்தேன்.

யாரும் எங்கள் பேச்சை கேட்க இல்லைதான்

சித்தி தொடர்ந்தாள்.

‘‘யாரோ நம்ப கோட்டை வீட்டுக்குள்ள நமக்கு தெரியாமலே இருக்காங்க’’என்றாள்.

அவள் சொன்னது அர்த்தம் இல்லாதது போல் இருந்தாலும் எனக்குள்ளும் அந்த எண்ணம் எழாமல் இல்லை.மாமாவிடம் தான் தனியாக பேசிப் பார்க்க வேண்டும்.

‘‘சித்தி அந்த உருவம் உங்களைப் பயமுறுத்த வேண்டியதன் அவசியம் என்ன?’’

‘‘உன் கூட நெருக்கமா இருக்கேன் இல்லே..எனக்கு என்னமோ நீ ஜாக்கிரதையா இருக்கணும்ன்னுதான் தோணுது’’

அவள் சொல்லிக் கொண்டிருக்கும் போதே சமையலறையில் இருந்து வேலைக்காரி வெளியில் வந்து ஹாலில் இருந்த மணியை அடித்து ஒசை எழுப்பினாள்.

‘சாப்பாடு தயார்’ ஏன்று அதற்கு அர்த்தம்.

அம்மா சாப்பாட்டு நேரத்தில் மாமாவின் கோரிக்கையை பேசப் போவது எனக்கு நினைவில் வந்தது.

அங்கு என்ன பூகம்பம் வெடிக்கப் போகிறதோ?

## அத்தியாயம் ஒன்பது

நானும் சித்தியும் சாப்பாட்டு மேஜைக்குப் போனோம்.ஆனால் எங்களுக்கு முன்னாலேயே மாமா அங்கே உட்கார்ந்து இருந்தார்.அவர் பசி தாள மாட்டார்.

என்னைப் பார்த்ததும் தன் முகத்தில் மெல்லிய புன்னகையை தவழ விட்டார்.

ஒவ்வொருவராக வர ஆரம்பித்தார்கள்.

மேஜையை அனைத்து வித உணவு வகைகளும் ஆக்கிரமித்து இருந்தன.

சுரேஷ் எனக்கு எதிர் பக்கம் உட்கார்ந்து என்னையே பார்க்க ஆரம்பித்தான்.

இன்னும் கொஞ்ச நேரத்தில் அவன் கனவுகள் உடையப் போகின்றன என்று தெரிந்தால் இப்படி சிரிக்க மாட்டான்.

எல்லோரும் வந்து விட்டார்கள்.டாக்டரின் பெண்ணும் வந்து விட்டார்.டாக்டர் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

அம்மா மெல்ல நடந்து வந்தாள்.வந்தவர் மாமாவின் பக்கத்தில் உட்கார்ந்தார்.என் பக்கத்தில் இருந்த இருக்கை காலியாகவே இருந்தது.சமையல்கார அம்மா பரிமாறா ஆரம்பிக்க அம்மா ‘பெரிய அத்தைக்கு சாப்பாடு போயிடுச்சா?‘என்று கேட்டார்.

சமையற்கார அம்மா ‘கொடுத்துட்டு வந்துட்டேன்மா’என்ற படியே பரிமாறத் தொடங்கினார்.

அப்பா வழக்கம் போல் ரொம்பவும் மௌனமாக இருந்தார்.

சுரேஷ் சாப்பிடுவதில் கவனம் செலுத்தாமல் என்னை கண்களாலேயே விழுங்கி கொண்டிருந்தான்.

அம்மா மெல்ல கனைத்தாள்.

எல்லோரும் அம்மாவைப் பார்த்தார்கள்.

“நிலாவுக்கு நிச்சயம் பண்ணதுல இப்ப ஒரு புதிய பிரச்சனை கிளம்பியிருக்கு” என்று சொல்லி நிறுத்தினார்.

நான் சுரேஷ் முகத்தைப் பார்த்தேன்.அவன் முகம் விஷயம் அறியாமலயே இஞ்சி தின்ன குரங்கு போல் ஆனது.

அம்மா தொடர்ந்தாள்.

“கண்ணனுக்கு இந்த சம்பந்தம் பேசினதுல விருப்பம் இல்லை..”

எல்லோர் பார்வையும் கண்ணன் மாமாவின் மேல் விழுந்தது.அத்தை மாமாவை எரித்து விடுவது போல் பார்த்தாள்.

அம்மா,“தன்னோட பையனுக்கு நிலாவை கட்டி வைக்கணும்ன்னு பிரியப் படறான்..நிலாவுக்கும் இதுல விருப்பம் இருக்கும் போல தெரியுது..”என்றாள்.

சுரேஷைத்தான் பார்த்தேன்.

அவன் கொஞ்சம் விட்டால் அழுது விடுவது போல் இருந்தான்.நான் ஊருக்கு வந்ததில் இருந்தே அவன் என்னை மனதில் ஆசைப் பொங்கதான் பார்த்து கொண்டு இருக்கிறான்.பேச வந்தும் நான் இரண்டு முறை தவிர்த்துப் போயிருக்கிறேன்.ஆனால் அந்த அத்தையின் முகமோ அஷ்ட கோணல் ஆனது.

“அன்னைக்கு இப்படி உட்கார்ந்து இதே மாதிரி பேசும் போதே தன்னோட விருப்பத்தை சொல்லியிருக்கலாமே.. நிலாவை கூட்டிட்டு வர வேகமா போகும் போதே நினைச்சேன்...இப்படி ஏதாவது ஆகும்ன்னு”

மாமா இதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை.

‘‘இப்படி கூப்பிட்டு வந்து சம்பந்தம் பேசி அசிங்கப் படுத்த வேண்டாம் ..’’என்றாள் அத்தை கோபமாக.

‘‘இங்க யாரும் வெளி மனுஷங்க இல்லை... ஏதோ சின்ன தவறு நடந்து போச்சு’’ & அம்மாவின் குரல் அதிகாரத் தொணியில் இல்லை.இப்படி இறங்கிப் பேசி நான் பார்த்தது இல்லை.எதையும் ஒரு தகவலாகத்தான் வெளிப்படுத்துவாள்.

டாக்டர்‘‘ உடம்பு சரியில்லாம இருக்காங்க..அவங்களை டென்ஷன் பண்ணிடதீங்க’’என்றதும் அத்தைக்காரி கொஞ்சம் கோபமாகவே ‘‘டாக்டர் இது எங்க குடும்ப பிரச்சனை ..நீங்க கொஞ்சம் சும்மா இருந்தீங்கன்னா நல்லா இருக்கும்’’என்றாள்.

அம்மாவின் முகம் கடுமையானது.

‘‘டாக்டர் வெளி ஆள் கிடையாது...அவரும் இந்த குடும்பத்துல ஒருத்தர் தான்..இது மாதிரி அவர் மனசு நோகற மாதிரி பேச கூடாது.....’’

‘‘சரி..என் பையன் மனசுல ஒரு வாரமா என்ன என்ன கனவுகளை வளர்த்துட்டு இருப்பான்..இப்ப திடுப்புன்னு இப்படி ஒரு குண்டைத் தூக்கிப் போட்டீங்க..அவன் மனசு நொந்து போகாதா’’

‘‘அதுக்காக டாக்டரை மரியாதை குறைவா பேசறதா..’’

‘‘நல்லா மரியாதை பண்ணுங்க..எனக்கு அதுல என்னை குறைஞ்சிடப் போவுது..அவர் பையன் ஒருத்தன் இருக்கான் இல்ல ..அவனை கூட நீங்க நிலாவுக்கு பேசலாமே..’’அத்தை இப்படி வேகமாகப் பேசியதும் அம்மா எழுந்து விட்டாள்.

வேலைக்கார அம்மாவைப் பார்த்தாள்

அவர் அருகில் போக தாங்கிப் பிடித்து கொண்டு அறையை நோக்கி  நடக்க ஆரம்பித்தாள்.எனக்கு தர்ம சங்கடமாகப் போனது.

நான் மாமாவை பார்த்தேன்.மாமா ஒன்றும் பேசாமல் மெல்ல சாப்பிடத் தொடங்கினார்.

டாக்டர் சமையற்கார அம்மாவைப் பார்த்து ‘‘அவங்க சாப்பிடாம இருக்க கூடாது..உள்ளே கொண்டு போய்

கொடுத்துடுங்க..’’என்றார்.

அம்மா காதில் அது விழுந்திருக்கும் போல திரும்பியவர்‘‘அதெல்லாம் வேணடாம்..ஒரு வேளை சாப்பிடலைன்னா செத்துட மாட்டேன்’’என்றார்.

மாமா என்னைப் பார்த்தார்.அவரின் பார்வையின் அர்த்தம் எனக்குப் புரிந்தது.

நான் அவசரம் அவசரமாய் சாப்பிட்டு விட்டு அம்மாவின் தட்டை எடுத்து சாதத்தில் குழம்பை ஊற்றி பிசைந்து கொண்டு உள்ளே எடுத்துச் சென்றேன்.

அம்மா என்னைப் பார்த்தப் பார்வை என்னை தட்டுடன் எதிர்பார்க்கவில்லைப் போலிருந்தது.

‘‘என்ன நிலா?’’

‘‘இதை சாப்பிடுங்க.....நீங்க சாப்பிடமா இருக்க கூடாது.....நான் வேணும்ன்னா ஊட்டி விடட்டுமா..’’என்று அவர் கோபத்தை குறைத்து சகஜ நிலைக்கு மாற்ற கேட்டேன்.

அம்மா.‘‘இன்னும் அந்த நிலைக்கு வரலை’’ என்ற படியே தட்டை வாங்கி கொண்டார்.

அதற்கு மேல் நான் அங்கு நிற்க விரும்பவில்லை.

மாமா இன்னும் சாப்பிட்டு கொண்டிருந்தார்.சுரேஷ் என்னை ஒருவித ஏக்கப் பார்வை பார்த்தான்.

நான் முன் ஹாலுக்கு வந்து உட்கார்ந்தேன்.

கொஞ்ச நேரத்தில் சாப்பிட்டு வெளியே வந்த டாக்டரின் பெண் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள்

.‘‘நீங்க  நிம்மதியா பட்டணத்துல படிச்சிட்டு இருந்தீங்க..கல்யாணம்ங்கற பெயரில உங்கப் பேரைப் போட்டு எல்லோரும் உருட்டறாங்கா..டென்ஷனா இல்லை..நானா இருந்தா என்ன பண்ணுவேன்னு தெரியுமா?’’

‘‘சொல்லுங்க ’’என்றேன்.

‘‘சொல்லிக்காம ஓடிப் போயிடுவேன்..’’

நான் சிரித்தேன்.

“அதனால் பிரச்சனை பெரிசுதான் ஆகும்”

“எனக்கு ஒரு ஆச்சர்யம்”

“என்ன?”

“பட்டணத்துல உங்களுக்கு ஒரு ஆண் சிநேகிதம் கூட ஏற்படலையா?”

“இல்லை ..நான் படிக்கத்தான போனேன்?” & நான் சொன்ன இந்த பதிலை அவள் ரசிக்கவில்லை என்பதை அவள் முகமே சொன்னது.

“கொஞ்சம் வேலை இருக்கு..நாம அப்புறம் பேசலாம்”என்ற படியே எழுந்த நான் என் அறைக்கு போனேன்.எனக்கு ஒரு அதிர்ச்சி அங்கு காத்திருந்தது.என் பெட்டி கட்டில்  மெத்தையின் மேல் குப்புறக் கிடந்தது.

என் உடைகள் மற்றும் பொருட்கள் கட்டிலிலும் தரையிலும் களைந்து கிடந்தன.எனக்கு அதிர்ச்சியாகத்தான் இருந்தது.யார் சாப்பாட்டு நேரத்தில் இங்கு வந்து இருப்பார்கள்?

நான் கீழே போன போது பெட்டியை மூடி விட்டுப் போனது நினைவில் வந்தது.நான் கீழே போன உடனேயே யாரோ வந்து இங்கு குடைந்து விட்டுப் போயிருக்கிறார்கள்.எதை தேடி வந்தார்கள் எதை தேடினார்கள்.குழப்பமாய் தான் இருந்தது.

அம்மாவிடம் சொல்லலாமா..வேண்டாம்..இருக்கும் சிக்கல்கள் போதும்.இதை வேறு சொல்லி பெரிதாக்க வேண்டாம் என்று மனதிலேயே தீர்மானித்தவளாய் எல்லாவற்றையும் மீண்டும் எடுத்து வைகக ஆரம்பித்தேன்.

சாப்பாட்டு நேரத்தில் யார் கடைசியாய் வந்தார்கள்?

டாக்டரின் பெண்தான்!

ஒரு வேளை அவள் என் அறையை குடைந்து இருப்பாளோ?அவளுக்கு இதில் எந்த அவசியம் இருப்பதாக தெரியவில்லை.இருந்தாலும் முழுமையாக அவளை சந்தேகப் பட்டியலில் இருந்து நீக்க வேண்டாம் .வேறு யாருக்கும் இதில் தொடர்பு இருக்குமோ...?

அப்பொழுதுதான் எனக்கு அது உறைத்தது.

அவசரம் அவசரமாய் அதை பத்திரப் படுத்தி இருந்த அலமாரியின் துணிகளுக்கு இடையில் பார்த்தேன்.

அடைத்து வைக்கப் பட்டிருந்த என் கைப்பேசி பத்திரமாய் இருந்தது.நான் நிம்மதி பெருமூச்சு விட்ட வேளையில் பத்திரப் படுத்தியிருந்த இன்னொன்று காணாமல் போய் இருப்பதை அறிந்தேன்.

அத்தியாயம் பத்து

அவசரம் அவசரமாய் ஊருக்கு கிளம்பும் போது நானும் ரமேஷ§ம் எடுத்து கொண்ட போட்டோ!

எனக்கு படபடப்பு அதிகமாகியது.முதலிலேயே ஒரு முறை என் அறைக்குள் நுழைந்த யாரோ இப்படி களைத்துப் போட்டு விட்டுப் போக நான் போட்டாவை மட்டும் தனியாக எடுத்து துணிகளுக்கு இடையில் பத்திரபடுத்தினேன்.

பின் எடுத்து பெட்டியில் வைத்தேன்.

அது அம்மாவின் கண்ணில் பட்டால் தொலைத்து எடுத்து விடுவாள்.ரமேஷ§டன் நான் இருக்கும் அன்னியோன்யமே எங்களுக்குள் இருக்கும் உறவை சொல்லி விடும்.

முதல் நாள் யாரோ குடைந்த போதே கொஞ்சம் ஜாக்கிரதை உணர்வோடு இருந்திருக்க வேண்டும்.அம்மாவிடம் இப்பொழுது போய் சொன்னால் முதல் தடவை நடந்த போது ஏன் சொல்லவில்லை என்று குறுக்கு கேள்வி கேட்பாள்.எந்த பதிலும் சொல்லி தப்பிக்க முடியாது.

பலவித யோசனைகளுக்கு நடுவே ரமேஷ் நினைவுகள் என்னைப் பற்றிக் கொண்டது.எனக்கு ஊரில் இருந்து தகவல் வந்ததும் ரமேஷ் தவித்துப் போனார்.

‘‘ஊரு க்கா கட்டாயம் போய் ஆகணுமா...நிலா நானும் வந்துடவா?’’

‘‘சரிதான் ...நானே நம்பளைப் பத்து எப்படி சொல்றதுன்னு யோசிச்சுட்டு இருக்கேன்..கூட வேற வரேன்னு சொல்றீங்க ..சரிதான்......’’

‘‘பொட்டுன்னு போட்டு உடைச்சுடு.....’’

‘‘ம்..என்னை தூக்கிப் போட்டு உடைச்சுடுவாங்க..’’

‘‘அப்படியா..எப்படி துக்கி போடுவாங்க..’’என்று கேட்ட படியே பக்கத்தில் வந்து என் இடுப்பில் கையை வைத்து தூக்க எத்தனித்தான்.

‘பட்‘ என்று அவன் கையை தட்டி விட்டேன்.

என்னை தனியே அனுப்ப மனமே இல்லை .

ரயில் ஏற்ற வந்தவன் ரயில் கிளம்பும் வரை ஒன்றும் பேசாமல் நின்று கொண்டே இருந்தான்.என்னை பிரியப் போகும் ஏக்கம் அவன் கண்களில் தெரிந்தது.ஜன்னல் வழியே என்  கையைப் பற்றி கொண்டு பிளாட்பாரம் முடியும் வரை நகர்ந்து கொண்டே இருந்த ரயிலுடன் பிரிய மனமில்லாமல் விரைந்து வந்தான்.

ரயில் வளைவில் திரும்பும் போது பார்த்தேன்.அங்கேயே நின்று கொண்டிருந்தான்.வந்ததில் இருந்து அவனுடன் பேசவேயில்லை .என் மீது பயங்கர கோபத்தில் இருப்பான்.

அறையின் கதவை மூடி விட்டு எனது கைப் போனை திறந்தேன்.சுத்தமாய் சிக்னல் இல்லை.ரயில்வே ஸ்டேஷன் போனால் தான் பக்கத்து டவரில் இருந்து சிக்னல் கிடைக்கும்.வீட்டு போன் அம்மாவின் அறையில் இருக்கிறது.

அங்கிருந்தும் பேச முடியாது.எதாவது காரணம் சொல்லி மாமாவை அழைத்து கொண்டு திருநெல்வேலி போய் போனும் செய்து விட்டு அப்படியே ஒரு மின் அஞ்சலும் அனுப்பினால்

நன்றாய்தான் இருக்கும்..பாவம் நிச்சயம் ஒரு செய்தி கூட இல்லையென்று துடித்துப் போயிருப்பான்.

யோசித்தபடியே படுக்கையில் உட்கார்ந்தேன்.கைப்போனை அடைத்து மீண்டும் பத்திரப் படுத்தி விட்டு படுக்கலாமா என்று யோசித்த வேளையில் கதவு தட்டப் பட்டது.எழுந்து போய் திறந்தேன்.

டாக்டரின் பெண்.

“உள்ளே வா” என்று நகர்ந்து வழியை விட்டேன்.உள்ளே வந்தவள் சுவாதீனமாய் படுகையில் உட்கார்ந்தாள்.

“சொல்லு வந்தனா..”

“தொந்தரவு பண்ணிட்டேனா..”

“அதெல்லாம் இல்லே..”

“அப்பா என்னை இங்க அழைச்சிட்டு வரும் போதே முதல்ல சொன்னது இதுதான்..வந்தனா இது நம்ப வீடு இல்லே..கோட்டை வீடு ..அறையோட கதவை தாழ்ப்பாள் போட கூடாதுன்னு ...நாம சின்னப் பொண்ணுங்க நாம அது மாதிரி இருக்க முடியுமா?”

அவள் சுற்றி எங்கு வருகிறாள் எனக்கு புரியாமல் இல்லை.ஆனாலும் நான் எந்த பதிலும் சொல்லவில்லை.

அவள் வந்த நோக்கத்தை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

“நிலா அப்பா மருந்து வாங்க திருநெல்வேலி கிளம்ப போறாரு...நான் மெயில் செக் பண்ண போறேன்...நீங்களும் வரீங்களான்னு கேட்கதான் வந்தேன்...உங்களுக்கும் எதாவது வேலை இருக்கும் இல்ல..”

“வேலை இருக்குதான்..ஆனா நான் உன்னை மாதிரி பொட்டுன்னு கிளம்பிட முடியாது..அம்மாகிட்டே முதல்ல அனுமதி கேட்கணும்...என்னால புது பிரச்சனை வேற கிளம்பியிருக்கு இல்ல..”

‘‘உங்க தீர்மானம் சரிதான்..அவங்க இழ்டபடி நாம கல்யாணம் பண்ணிக்க முடியுமா..ஆனாலும் உங்க அத்தை என்னை சம்பந்தப் படுத்தி பேசுனது எனக்கு பிடிக்கலை..’’

‘‘அவங்க குணமே அப்படிதான் ..வெடுக்கு வெடுக்குன்னுதான் பேசுவாங்க..அவங்களுக்காக நான் மன்னிப்பு கேட்டுக்கறேன்..’’

‘‘அட என்ன நிலா நான் சின்ன பொண்ணு உங்க கிட்ட என் மனசுல இருந்ததை சொன்னேன்..அதுக்கு போய் நீங்க மன்னிப்பு கேட்டுட்டு..எங்க கூட வரதா இருந்தா சீக்கிரம் அம்மாகிட்ட சொல்லிட்டு வாங்க’’

அவள் போவதும் சரிதான்.மாமாவோடு கிளம்பினால் அத்தையின் கோபம் இன்னும் அதிகமாகி விடும்.

‘ஒரு நிமிஷம் இரு ’என்று அம்மாவின் அறைக்குள் சென்றேன்.

‘என்ன?’என்றாள் அம்மா என்னை பார்த்ததுமே!

‘‘டாக்டர் திருநெல்வேலி போறாரு....எனக்கும் கொஞ்சம் வேலை இருக்கு ..கூட போயிட்டு வந்துடறேன்’’

‘‘அவர் பொண்ணும் வருது இல்ல?’’

‘‘ஆமாம்..’’

‘‘போயிட்டு வா’’வேறு ஏதும் பேசவில்லை.கண்களை மூடி கொண்டார்.

டாக்டரின் கார் பழைய அம்பாசிடர் கார்.

மின்னல் மாதிரி பறந்தது.வந்தனா முன்னால் உட்கார்ந்து கொண்டாள்.என்னை தான் முதலில் அங்கு உட்கார சொன்னாள்.நான் தான் ‘பரவாயில்லை ..நீயே உட்காரு‘என்று சொல்லி விட்டு பின்னால் வந்து விட்டேன்.காரணம் இல்லாமல் இல்லை.டாக்டருடன் பேசுவதை தவிர்க்கதான் அப்படி செய்தேன்.தேவையில்லாத பேச்சில் நான் ஏதும் உளறி விட கூடாது என்பதில் கவனமாக இருந்தேன்.இருந்தாலும் கார் மெயின் ரோடு வந்த உடன் ஆரம்பித்து விட்டார்.

‘‘சொல்லு நிலா..எப்படிதான் இருக்கு உன்னோட சென்னை படிப்பு ..வாசம்..நண்பர்கள்..ஒவ்வொரு மாசமும் நினைச்சுகுவேன்..உன்னை பார்க்கணும்ன்னு சொல்லிட்டு இங்கிருந்து கிளம்பணும்ன்னு ..முடியலை..கோட்டை வீட்டோட ராசி அப்படி ..உள்ள வரவங்க யாரையும் உடனே வெளியில் போக விடாது.....’’சொல்லி விட்டு கொஞ்சம் நிறுத்தினார்.

நான் எந்த பதிலும் சொல்லவில்லை.பதிலில் இருந்து இன்னொரு கேள்வி பிறக்கும்..எந்த பதிலிலும் நான் சிக்கி கொண்டு விட கூடாது என்பதில் கோட்டை வீட்டுக்கு திரும்பியதில் இருந்தே கவனமாக இருக்கிறேன்.ஆனாலும் அவர் நிறுத்துகிறார் போல் தெரியவில்லை.அடுத்த கேள்வியை வீசி விட்டார்.

‘‘நிலா உன்னோட கூட படிக்கறவங்களை வர சொல்லேன்..அடுத்த வாரம் நாலஞ்சு நாள் சேர்ந்தார் போல் அரசு விடுமுறை வருதே..உனக்கும் அவங்களை மிஸ் பண்ணறோம்ங்கற எண்ணம் இருக்காது இல்ல..’’

‘‘நானும் அப்படிதான் நினைச்சேன்..இப்ப அம்மா இருக்கற நிலைமையில அது சரி பட்டு வராதுன்னுதான் விட்டுட்டேன்..எனக்கு ஒரு ஆச்சர்யம் என்னண்ணா ரொம்ப மாடர்னா இருக்கற வந்தனா எப்படி இந்த வனாந்திரத்துல தாக்குப் பிடிக்கறான்னுதான்’’

‘‘சின்ன வயசுலேந்தே அவளுக்கு இது மாதிரி  ரொம்ப பிடிக்கும்...சின்ன வயசுலுந்தே ஹாஸ்டல்ல வளர்ந்த பொண்ணு..அண்ணனும் ஹாஸ்டல் தான் ...இவளை விட பெரியவன்..மேல் படிப்புன்னு வெளி நாடு போயிட்டான்..இன்னும் ஒரு வருஷம் முடிஞ்சுடும் ...அடுத்து என்ன யோசனை வச்சிருக்கான்னு தெரியலை..’’& டாக்டரும் புத்திசாலிதான்.வந்தனா பக்கம் திருப்பிய கேள்வியை வேறு திசைக்கு திருப்பி விட்டார்.

அத்தியாயம் பதினொன்று

‘‘மரத்தை எல்லாம் வெட்டிடாங்க போல’&’நான் வெளியில் பார்த்தபடி சொன்னேன்.

‘‘ரொம்ப வெட்டலை..நீ வரதுக்கு மூணு நாள் முன்னாடி பெரிய மழை ...ரெண்டு மரம் ரொம்ப பழைய மரம் சாய்ஞ்சிடுச்சு..அதை தான் வெட்டி எடுத்தாங்க..ரொம்ப வருஷமான மரம் ரொம்ப பெருசு..அதுவே பெரிய வெற்று இடத்தை காட்டுது’’என்றார்.

வந்தனா ஒன்றும் பேசாமல் வந்தது எனக்கு பெரிய ஆச்சர்யத்தினை தந்தது.

திருநெல்வேலி வந்து விட்டது.

‘‘நீங்க ரெண்டு பேரும் நெட் சென்டர் போகணும் இல்லே’’

‘‘ஆமாம்..’’

‘‘ஸ்டுடியோ டிஜிடல் பார்க் பக்கம் ஒன்னு இருக்கு ..அங்க இறக்கி விடறேன்..ஒரு மணி நேரம் போதுமா..’’

‘‘ம்’’என்றோம்.

‘‘மருந்து வாங்கிட்டு ஜங்ஷன் உள்ள போயிட்டு வந்துடறேன்..ஒரு மணி நேரத்துகுள்ள வந்துடுவேன்..’’என்றவர் எங்கள் இருவரையும் டிஜிடல் பார்க் வாசலில் இறக்கி விட்டார்.

நாங்கள் இருவரும் நெட் சென்டர் அடைந்தோம்.நான் திரும்பி பார்த்தேன்.டாக்டர் காரினை கிளப்பாமல் எங்கள் இருவரையும் பார்த்தபடியே உட்கார்ந்து இருந்தார்.

நானும் வந்தனாவும் ஆளுக்கொரு சிஸ்டத்தில் உட்கார்ந்தோம்.பத்து நிமிடம் ஆகியிருக்கும்.

நான் வெளியில் வந்ததன் நோக்கமே ரமேஷ்§டன் பேசி விட வேண்டும் என்றுதான்.சும்மா கொஞ்ச நேரம்

பாவ்லா காட்டி கொண்டு இருந்த நான் திரும்பி பார்த்தேன்.அவள் கண்களை மூடி ஏதோ ரசித்து கொண்டு இருந்தாள்.

நான் எழுந்து வெளியில் வந்தேன்.மேஜையில் இருந்த பெண் ‘‘என்னங்க..ஏதாவது பிரச்சனையா..சிஸ்டம் ஒர்க் பண்ணுது இல்ல’’என்று கேட்டாள்.

‘‘அதுல ஒரு பிரச்சனையும் இல்ல ..டாய்லெட் எங்க இருகு ?’’

‘‘சாரிங்க இங்க இல்லையே..வெளியில போனதும் வலது பக்கம் ஒட்டல் இருக்கு பாருங்க ..அங்க இருக்கு ..ரொம்ப அவசரம்ன்னா அங்க தான் போவோம்’’என்றாள்.

‘‘சிஸ்டம் ஆன்லயே இருக்கு ..வேற யாரையும் உட்கார வச்சுடாதீங்க..வந்துடறேன்..என் கூட வந்தவங்க கேட்டா சொல்லுங்க’’என்று வெளியில் வந்தேன்.எதிர் சாரியில் இருந்தது அந்த தொலைபேசி நிலையம்.ரமேஷ் அவன் கை போனை அடைத்து வைத்து இருக்க கூடாது என்று வேண்டி கொண்டே தொலைபேசி நிலையம் உள்ளே சென்றேன்.

அங்கும் ஒரு பெண்தான் உட்கார்ந்து இருந்தாள்.

‘‘போன் பண்ணனும் ’’

‘‘ லான்ட் லைனா ..செல்லா..’’

‘‘செல்லுதான்..’’

‘‘அதுக்குள்ள போய் பேசுங்க’’

அந்த கூண்டுக்குள் சென்று கதவை மூடி கொண்டேன்.

ரமேஷின் எண்களை சுழற்றினேன்.

முதல் ரிங்கிலேயே எடுத்தான்.

‘‘ஹலோ...’’என்று மட்டும்தான் சொன்னேன்.

‘‘எங்கம்மா போனே..போய் இறங்கின உடனே போன் பண்றேன்னு சொன்னே..நான் ரெண்டு நாலா தவிச்சு போயிட்டேன்..உன் நம்பரைப் போட்டு போட்டு டென்ஷன் ஆயிட்டேன்...ஸ்விட்ச் ஆப்ன்னு வருது..நிலா நான் உன்னை ரொம்ப மிஸ் பண்றேன்ம்மா..’’

“இங்க பெரிய பிரச்சனை ரமேஷ்..அம்மாவிற்கு  உடம்பு சரியில்லைங்கறது ஒரு பக்கம். எனக்கு கல்யாணம் வேற நிச்சயம் பண்ணி வச்சிருந்தாங்க..அதை நிறுத்தறதே பெரிய விஷயம் ஆயிடுச்சு..”

“என்ன சொல்றே நிலா?..”மறு முனையில் அதிர்ந்து போய் கேட்டான் ரமேஷ்.

நடந்த விஷயங்களை தெளிவாக சொன்னேன்.

“நிலா வாழ்க்கையில் எதை வேணும்ன்னாலும் இழக்க தயாரா இருக்கேன்..நிலாவை தவிர..நிலாவுக்காக நான் உயிரை கூட தருவேன்..சொல்லு நிலா..வேணும்ன்னா இப்பவே கிளம்பி வந்துடறேன்..”

“அதெல்லாம் வேண்டாம் ரமேஷ் ...கொஞ்சம் பொறுத்துக்கோ..நான் சொல்லும் போது நீ கிளம்பி வந்தா போதும்..நான் கிளம்பறேன்..திரும்ப நானே கூப்பிடறேன்..இப்ப நான் கட் பண்றேன்..”

“என்னப்பா அதுக்குள்ள போறேன்னு சொல்றே?”

“புரிஞ்சுக்கோ ரமேஷ் என்னோட சூழ் நிலை அப்படி..நான் இப்ப எங்க குடும்ப டாக்டர் கூட வந்திருக்கேன்..திரும்ப சந்தர்ப்பம் வாய்க்கும் போது கூப்பிடறேன்..தப்பா நினைச்சுகாதே ரமேஷ் ” போனை கத்தரித்து விட்டு வெளியில் வந்தேன்.காசை கொடுத்து விட்டு நெட் சென்டர் திரும்ப ரோடை கடந்தேன்.

டிஜிடல் பார்க் பையன் “மேடம் மேடம் ”என்று கூப்பிட்டான்.பக்கத்தில் போய் “என்னப்பா”என்று கேட்டேன்.

“சார் பிரிண்ட் போட கொடுத்தாரு..ரெடிஆயிடுச்சு..நீங்க வாங்கிக்கீறீங்களா?”கவர் ஒன்றை நீட்டினான்.வாங்கிப் பார்த்தேன்.

கவரின் உள்ளிருந்து எடுத்துப் பார்த்து அதிர்ந்தேன்.

அதன் உள்ளே இருந்தது நான் வைத்து இருந்த ரமேஷின் படம்.அதை வைத்து போடப் பட்ட பிரிண்ட்.

என் உடம்பு நடுங்கியது.

கவரை அவனிடமே திரும்ப தந்தேன்.

“அவர் கிட்டயே தந்துடுப்பா”என்று வேகமாய் நெட் சென்டருக்கு வந்தேன்.எனக்கு இன்னமும் திகில் அடங்கவில்லை.புகைப்படத்தை எடுத்தது டாக்டர் தானா..?

அப்படியானால்..?

திரும்பி வந்தனாவைப் பார்த்தேன்.அவள் காதில் ஹெட் போன் மாட்டி கொண்டு பாட்டு கேட்கும் சுவாரஸ்யத்தில் இருந்தாள்.

டாக்டர் என் இதை செய்ய வேண்டும் .அவருடைய உண்மையான நோக்கம் என்ன ?

அவர் தனியாளா..இல்லை அவருடன் வேறு யாராவது என்னை பற்றி தெரிந்து கொள்வதில் ஆர்வத்துடன் உள்ளார்களா?

பல வித சிந்தனைகளுடன்  கை போன போக்கில் எதை எதையோ நெட்டில் மேய்ந்தேன்.

டாக்டர் வந்து விட்டார்.வந்தனா எழுந்திருக்க மனம் இல்லாமல் எழுந்திருந்தாள்.

நெட்டிற்கு பணம் கொடுத்து விட்டு வெளியில் வந்தோம்.

டாக்டர் “காபி ,ஜுஸ் ஏதாவது சாப்பிடலாமா?”என்று கேட்டார்.

வந்தனா “ஜுஸே குடிக்கலாம்”என்றாள்.

அந்த பிரபல ஜுஸ் கடையில் மூவருமே சப்போட்டா மில்க் ஷேக் குடித்தோம்.

டாக்டரே கேட்டார்,“என்ன நிலா ஒரு மாதிரி இருக்கே..கிளம்பும் போது நல்லாதான இருந்த..என்ன ஆச்சு..?”

“அதெல்லாம் ஒண்ணும் இல்லே”

காரில் திரும்பும் போது வந்தானாவும் என்னுடன் பின் பக்கமே வந்து உட்கார்ந்து கொண்டாள்.

நான் என்னை சகஜமாக்கி கொள்ள ‘‘வந்தனா உனக்கு மியூசிக்ன்னா ரொம்ப பிடிகும் போல?’’

‘‘ம் ..பிடிக்கும்ன்னு கூட சொல்ல முடியாது..வெறின்னுதான் சொல்லனும்...’’என்றாள் கண்களில் ஆர்வம் மின்ன.

ஆனால் என்னால் என்னை கட்டுப் படுத்திக் கொள்ள முடியவில்லை.

ஆனால் டாக்டரிடம் நேரிடையாக கேட்க தயக்கம்.

இன்னும் தூரம் இருக்கிறதே..?

போய் சேர்வதற்குள் கேட்டு விட வேண்டியதுதான் என்கிற முடிவுக்கு என் மனதை தயார் செய்து விட்டேன்.

அதிகம் பேசாமல் காரை ஓட்டி கொண்டிருந்த டாக்டர் ‘திடுப்‘பென்று அந்த கவரை பின் பக்கம் நீட்டினார்.வந்தனா அதை வாங்கினாள்.

டாக்டர் ‘‘வந்தனா அந்த கவரை நிலா கிட்ட கொடு’’ என்றார்.

அது டிஜிடல் பார்க் கவர்.

எனக்கு ஒரு நிமிடம் ஒன்றும் புரியவில்லை.

கடைக்காரப் பையன் என்னிடம் நீட்டிய அதே கவர்!

இப்பொழுது இன்னும் திகில் எனக்கு அதிகமாகியது.

என்னதான் நடக்கிறது என்னை சுற்றி..?

‘‘என்ன டாக்டர் இது?’’

‘‘போட்டோ நிலா ..கிளம்பும் போது உங்க அம்மா திடீர்ன்னு உள்ள கூப்பிட்டாங்க ..இதுல இருக்கற போட்டாவை ரெண்டு நகல் போட்டுட்டு வாங்கன்னு தந்தாங்க..கோட்டை வீட்டில முன்னே பின்னே பார்க்காத முகம் ..அதுல இருக்கறது யாருன்னு உனக்கு தெரியுதா பாரு.?’’

எனக்கு அடுத்த அதிர்ச்சி!

அம்மாவா ?

இந்த போட்டோ எப்படி அம்மா கைக்குப் போனது..?

“யாரு நிலா அது போட்டோவில் இருக்கறது?”

“இன்னும் பார்க்கலை அங்கிள்”

“பார்க்கதானே கொடுத்தேன்…உனக்கு தெரியுதா பாரு..யாருக்கும் தெரியாம கொண்டு போயிட்டு கொண்டு வாங்கன்னு சொன்னாங்க”என்றார் அடுத்து.

நான் கவரைப் பிரித்து அதில் ஏற்கனவே நான் பார்த்த என் அறையில் இருந்து எடுக்கப்பட்ட ரமேஷின் படத்தைப் பார்த்து விட்டு சொன்னேன்.

“டாக்டர் இது என்னோட கணவர் போட்டோ..”

டாக்டர் அதிர்ந்து காரை பிரேக் போட்டு நிறுத்தினார்.

## அத்தியாயம் பன்னிரெண்டு

காரை ஒரமாய் நிறுத்திய டாக்டர் கண்களில் பல கேள்வி குறிகளுடன் என்னைப் பார்த்தார்.

நான் முகத்தை மிகவும் சாதரணமாக எந்தவித சலனமோ பயமோ இல்லாமல் வைத்து கொண்டு “ஆமாம் டாக்டர் இது என்னோட கணவர் ரமேஷ் …இவரை நான் கல்யாணம் பண்ணிட்டு மூணு மாசம் ஆகப்போகுது”

“என்ன சொல்றே நிலா..உங்க அம்மா உன்னை வாரிசாக்கி பார்க்க ஆசைபடற நேரத்துல இப்படி ஒரு அதிர்ச்சியான விஷயத்தை ரொம்ப சாதரணமா சொல்றே..”

“சில நேரங்கள்ல்ல உண்மை அதிர்ச்சியாத்தான் இருக்கும் டாக்டர் ”

“இருந்தாலும் …வேற யாருக்கும் இது தெரியுமா ?”

மாமாவிற்கு தெரியும் என்று நான் சொல்ல விரும்பவில்லை.

‘‘இல்ல டாக்டர் யாருக்கும் தெரியாது..உங்களுக்குதான் இப்ப சொல்லியிருக்கேன்..’’

‘‘அம்மாகிட்டே ஏன் சொல்லலை?’’

‘‘அம்மாக்கு உடம்பு சரியில்லன்னுதான் வந்தேன்..நேரம் பார்த்து பக்குவமா உண்மையை சொல்லிடலாம்ன்னு நினைச்சுதா இங்க வந்தேன்..அம்மா என் கல்யாணத்தை தீர்மானிச்சு வச்சிருப்பாங்கன்னு தெரியாது..’’

‘‘இது தெரியாம உங்க மாமா வேறே தன்னோட பையனுக்குதான் நீன்னு சொல்லி அத்தை பையனை சோகமாக்கிட்டாரு’’

‘‘அதுக்கு நான் என்ன பண்ண முடியும்ன்னு எனக்கு தெரியலை ..எல்லாருக்கும் ஆசை இருக்கும் இல்ல..மத்தவங்களை ஆசைப் பட கூடாதுன்னு நான் எப்படி சொல்ல முடியும்..டாக்டர் எனக்கு ஒரு உண்மை தெரியணும்.. இந்த போட்டாவை யாரு என் ரூம்ல்ல இருந்து திருடி அம்மாகிட்டே கொண்டு தந்திருப்பாங்க?’’

‘‘எனக்கு தெரியாது நிலா..மருந்து வாங்க கிளம்பும் போது உங்க அம்மாகிட்ட சொல்லப் போனேன் அப்பதான் இதை கொடுத்தாங்க..’’

‘‘யாருக்கும் தெரியாமன்னு அம்மா சொன்ன பிறகும் நீங்க ஏன் என்கிட்ட காண்பிச்சிங்க?’’

‘‘ஒரு வேளை உன் ரூம்ல்ல இருந்து தான் இது வந்திருக்குன்னு தெரிஞ்சிருந்தா உன்கிட்டே காண்பிச்சிருக்க மாட்டேன்’’

டாக்டர் சொன்னதை நான் நம்பவில்லை.

நான் நம்பவில்லை என அவரும் என் முகத்தினைப் பார்த்து புரிந்து கொண்டு இருப்பார் என்று நினைக்கிறேன்.போட்டோ கவரை வாங்கி தன் பக்கத்தில் வைத்து கொண்டு காரினை கிளப்பினார்.

இவ்வளவு நேரம் பேசாமல் இருந்த டாக்டரின் பெண் வந்தனா ‘‘நிலா உங்களுக்கு கல்யாணம்

ஆயிடுச்சுன்னு என்னாலே நம்பவே முடியலை’’என்றாள்.

‘‘டாக்டர் அம்மாகிட்ட சொல்ல நல்ல சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து இருக்கேன்’’

‘‘கவலைப்படாதே நிலா..என் வாயில் இருந்து எதுவும் போகாது..வந்தனாவும் எதுவும் சொல்ல மாட்டா..உங்க அம்மா முன்னாடி நிக்கவே அவ பயப்படுவா..’’

‘‘ஆமாம் நிலா எனக்கென்னமோ அவங்களை பார்த்தாலே பயம்...பயம்ன்னு மட்டும் சொல்ல முடியாது..மரியாதைன்னு கூட சொல்லலாம்..’’

‘‘ஒண்ணு நிலா ..உங்கம்மாவை சாதரணமா நினைச்சிடாதே..நாம யாரும் சொல்லாமலேயே கண்டு பிடிச்சுடுவாங்க..உங்கப்பா திருநெல்வேலி விஷயத்தை எவ்வளவு ரகசியமா வச்சிருந்தாரு..ஒரு நாள் பட்டுன்னு சாப்பாட்டு டேபிள்ல்ல போட்டு உடைச்சிட்டாங்களே’’

வந்தானவின் முன் அவர் அப்பாவின் தொடர்பை பற்றி பேசியது எனக்கு பிடிக்கவில்லை.

‘‘டாக்டர் அதைப்பத்தி எல்லாம் இப்ப பேச வேண்டாமே..’’டாக்டர் நான் சொன்னதும் தன் பேச்சை நிறுத்தி விட்டார்.

கோட்டை வீடு திரும்பும் வரை அவர் பேசவேயில்லை.ஆனால் கேட்டின் முன்னால் காரினை நிறுத்தி காத்திருந்த போது ‘‘போட்டோ உன் கிட்டே காண்பிச்சதை மறந்துடு ’’என்றார்.

‘’அங்கிள் இதை எப்படி சொல்லி நான் எப்படி உங்களையும் என்னையும் சேர்த்து சிக்கல்ல விடுவேன்?’’ உள்ளே நுழைந்ததும் நேரே மாடி அறைக்கு சென்று படுக்கையில் உட்கார்ந்தேன்.

‘‘என்ன நிலா...ஹால்ல யார் இருக்காங்கன்னு கூடப் பார்க்காம மேல வந்துட்டே..’’என்ற படியே சித்தி உள்ளே நுழைந்தாள்.

‘‘ரொம்ப டயர்டா இருந்தது.....உங்க கால் வலி எப்படி இருக்கு சித்தி..?’’

‘‘பரவாயில்லை நிலா..ராத்திரியில தான் வலி கொஞ்சம் தலையை தூக்குது..’’

‘‘சித்தி அன்னைக்கு லைப்ரரியில பார்த்தது கையால எழுதி இருந்த புத்தகத்தைப் பார்த்த போதுதான கருப்பு உருவம் வந்துச்சுன்னு சொன்னீங்க..அந்த புத்தகத்தை நானும் பார்த்தேன்..என’கென்னமோ அந்த புத்தகத்துலதான் இந்த கோட்டை வீட்டு மர்மங்களோட பதில் இருக்குன்னு நினைக்கிறேன்..’’

‘‘அந்த புத்தகத்தை தான் பதட்டதுல தூக்கிப் போட்டு வந்துட்டேனே’’

‘‘சித்தி அதை நான் எடுத்துப் பார்க்கும் போதுதான் யாரோ உள்ள இருக்காங்கற உணர்வு வந்து அதை ஒரு அடுக்குல ஒளிச்சு வச்சுட்டேன்..அப்ப தான் டாக்டர் அங்க வந்தார்..டாக்டரைப் பத்தி நீங்க என்னை நினைக்கறீங்க சித்தி?’’

‘‘ரொம்ப வருஷமா நம்ம கோட்டை வீட்டோட ஐக்கியம் ஆயிட்டவர்..அதிகமா ஆசையில்லாதவர்...எதுக்கு நிலா திடீர்னு கேட்கற?’’

‘‘சும்மாதான் கேட்டேன்..’’

‘‘இல்ல நிலா உனக்கு டாக்டர் மேல ஏதாவது சந்தேகம் இருக்கா?’’

‘‘இல்ல..’’

‘‘ஆனா எனக்கு இருக்கு நிலா’’என்றாள் சித்தி ‘பொட்‘டென்று.

’’என்ன சித்தி இப்பதான் அதிகமா ஆசை இல்லாதவர்ன்னு சொன்னீங்க’’

‘‘இல்ல அவர் பத்தி கொஞ்சம் உறுத்தல் இருக்கு குடும்பத்துக்கு வேண்டியவர் தான்..நல்ல திறமை வசதி இருந்தும் அவர் இங்கே முடங்கினது ஏன்?’’

‘‘உங்களுக்கு தான் தெரியுமே சித்தி..அப்பா திருநெல்வேலி சமாச்சாரம்..அந்த சின்னம்மாக்கு இந்த டாக்டர் சொந்தம்..’’

‘‘இருந்தாலும் ரொம்ப யோசிச்சா குழம்புது நிலா’’

‘‘இதுல குழம்ப ஒண்ணும் இல்ல..கோட்டை வீட்டோட நிலவறை சொத்து ,பரம்பரை சொத்து மேல ஆசை இருக்கும்ன்னு எனக்கு தோணுது..’’

‘‘எனக்கு என்னமோ அப்படி தெரியலை..நிலா இந்த வீட்டோட பொறுப்பை நீ ஏத்துகிட்டதும் அக்கா முதல்ல அந்த அறைக்குதான் உன்னை அழைச்சிட்டு போவாங்க..அதுக்கப்புறம் என்னை பண்ணனும்ன்னு உனக்கு தெரியுமே..’’

சித்தி சொன்னதும் நான் அதிர்ந்து உறைந்து போனேன்.இதை ஏன் சித்தி இப்பொழுது நினைவு படுத்தினாள்.

அம்மாவிற்கு முன் கோட்டை வீட்டின் பொறுப்பில் இருந்த பெரியம்மா முடியாமல் போன போது எனக்கு ஏழு வயசு.என்னவென்றே புரியாத வயசு.

திடீர் என்று வீடு விழா கோலம் பூண்டது..எனக்கு பட்டுப் பாவாடை போட்டு விட்டிருந்தாள் அம்மா.அம்மாவும் பட்டுப் புடவை கட்டி இருந்தாள் சமையல் அறையில் இருந்து வாசனை பிய்த்து கொண்டு வெளியில் வந்தது.சமையல் அறை சமையல் அறையில் இருந்து வாசனை பிய்த்து கொண்டு வெளியில் வந்தது.சமையலறைக்குள் ஓடினேன்.

பெரிய கடாயில் நெய்யில் பூ பூவாய் ஜாங்கிரி மிதந்து கொண்டிருந்தது.

அம்மா பின்னாலேயே தொடர்ந்து வந்தாள்.

‘‘நிலா ,நிலவறை பூஜைக்கு கீழே போய் போயிட்டு வந்தப் பிறகுதான் இதெல்லாம்’’என்று என்னை பிடித்து அழைத்து கொண்டு ஹாலுக்குள் வந்தாள்.

ஹாலில் என்னை எல்லோருடனும் உட்கார வைத்தாள்.அன்றும் இப்பொழுது இங்கே இருக்கும் எல்லாரும் இருந்தார்கள்.அத்தைப் பையன் சுரேஷ் கையில் ஒரு பொம்மை ரயிலை வைத்து தரையில் தேய்த்து கொண்டிருந்தான்.

திருநெல்வேலி ஜோதிடர் குறித்து கொடுத்திருந்த நேரத்தில் அம்மா கையில் பூஜை சாமான்கள் மற்றும் நிலவறை சாவியுடன் கிளம்பினாள்.பெரியம்மாவின்

கையில் ஒரு பெரியப் பாத்திரத்தில் சத்து  மாவு உருண்டை.

‘‘இது எதுக்குப்பா கொண்டு போறாங்க?’’அப்பாவை கேட்க மாமா ‘உஸ்’என்று என்னை அடக்கினார்.

அம்மா போய் திரும்பிய போது பெரியம்மா திரும்பி வரவில்லை.

அத்தியாயம் பதிமூன்று

உடன் தள்ளாடி கொண்டே வந்தது இப்பொழுது இருக்கும் அத்தை!

ஹாலுக்குள் வந்ததும் கண்களை திறந்து திறந்து மூடினாள்.

அந்த சிவப்பான முழிகளையும் அதில்  தெரிந்த தீட்சண்யத்தையும்  , இப்போது நினைத்தாலும் மெல்ல எனக்கு நடுங்க தான் செய்தது.

"என்ன நிலா உடம்பு நடுங்குது?"

"சித்தி இப்ப தான் எனக்கு சில வலிகள் புரியுது..அம்மா பெரியம்மாவை கீழே கூட்டிடு போய் விட்டுட்டு திரும்பி வரும் போது அத்தையை கூட்டிட்டு வந்தா மாதிரி இப்ப கோட்டை வீட்டுப் பொறுப்பை ஏத்துகறவங்க அம்மாவை கொண்டு விட்டுட்டு வரும் போது பெரியம்மாவை திரும்ப அழைச்சுட்டு வரணும் இல்ல"

"ஆமாம் நிலா நீ சொல்றது சரி..உள்ள அந்த சத்து மாவு உருண்டையை மட்டும் சாப்பிட்டு உயிரோட இருந்தா"

நான் திகிலில் இருந்தேன்.

சித்தி"அது பல பரம்பரையா நடக்கிற விஷயம்..பயப்பட வேண்டிய விஷயம் இல்லை.."

"என்ன ரெண்டு பேரும் ஏதோ  பெரிய விஷயத்தை ஆராய்ச்சி பண்றா மாதிரி இருக்கு"மாமா அறைக்குள்

நுழைந்தார்.

"அதெல்லாம் ஒண்ணும் இல்ல சும்மாதான் பேசிட்டு இருந்தோம்"என்ற எனக்கு திடீர் என்று மாமா மேலும் சந்தேகம் வந்தது.

ஒரு வேளை மாமா தான் என் அறையில் இருந்து போட்டோவை எடுத்து அம்மாவிடம் கொடுத்திருப்பாரோ?

"என்ன நிலா என்னை அப்படி பார்க்கறே..என் மேல எந்த விஷயத்திலாவது சந்தேகம் வந்துடுச்சா?"

"ம்ஹ§ம்..நான் சந்தேகப் படறா மாதிரி ஏதாவது இருக்கா?"

"என்ன நிலா ரொம்ப கோத்து வாங்கற..அப்படியெல்லாம் ஒண்ணும் இல்ல..அப்படி என்னதான் தீவிரமா பேசிட்டு இருந்தீங்க..சொல்லுங்க தெரிஞ்சுக்கறேன்"

சித்தி"கோட்டை வீட்டில புதுசா பொறுப்பு ஏற்கறவங்க முதல்ல பொறுப்புல இருந்தவங்களை கீழே நிலவறையில விட்டுட்டு வர பரம்பரை பழக்கத்தைப் பத்தி பேசிட்டு இருந்தோம்.."என்றாள்.

"என்ன நிலா பொறுப்பை ஏற்கறதைப் பத்தி சிந்திக்க ஆரம்பிச்சிட்டியா?"

"சத்தியமா இல்ல மாமா...எனக்குதான் விருப்பம் இல்லேன்னு உங்களுக்கே தெரியுமே?"

"அது நம்ப பரம்பரை பழக்கம்..என்னோட சின்ன வயசுல பெரிய அக்கா உள்ளே போன போது பார்த்து இருக்கேன்..இத்தனைக்கும் அவளுக்கு அவ்வளவு வயசும் இல்லே....உங்க அம்மா என்னோட சின்ன அக்கா உள்ளே பெரிய அக்காவை கொண்டு விட்டுட்டு வரும் போது இராத்திரி முழுக்க நான் தூங்கவே இல்லை...பெரிய அக்கா ஒண்ணும் வயசு ஆனவ இல்லை ..அது ஏனோ நிகழ்ந்து போச்சு..அப்படியரு அழகு அவ!"மாமா கொஞ்ச நேரம் நிறுத்தினார்.

மாமா கொஞ்சம் கலங்கிதான் போனார் என்றே அவர் குரல் தழு தழுத்து நிறுத்தியதில் இருந்து தெரிந்தது.

"மாமா பெரியப்பா என்னை ஆனாரு..பெரியம்மா பத்தி நினைச்சுட்டே இருந்ததுல அவரை பத்தி மறந்தே போயிட்டேன்..."

"அவருக்கு பெரியம்மா  பரம்பரை பழக்க படி உள்ளே அனுப்பறது பிடிக்கலை ..ஆரம்பத்துல இருந்தே எதிர்த்தாரு..அவரால ஒரு அளவுக்கு மேலே முடியலை...வெளியில் இருந்து வீட்டு மாப்பிள்ளையா வந்தவரு.."

"அவருக்கு என்ன ஆச்சு...ஊருக்கு போனவரு..தற்கொலை பண்ணிட்டதா தகவல் வந்தது..நம்ப குடும்பத்தை சேர்ந்தவங்க யாரையும் அவங்க உள்ளே விடலை..திரும்பி வந்துட்டாங்க"

மாமா கொஞ்ச நேரம் அமைதியானார்.

எனக்கு பெரியப்பா பற்றிய தகவல் புதியது!

"மாமா அப்படி என்னதான் பெரிசா இருக்கு அந்த நிலவறையில?"

"என்ன அவ்வளவு சாதரணமா கேட்ட நிலா ..எனக்கு தெரிஞ்சு இன்னைக்கு மதிப்புக்கு இருபதாயிரம் கோடிக்கு மேல மதிப்புள்ள பரம்பரை நகைகள்,தங்கம் ,வைரம்,வைடூரியம்ன்னு இருக்கும்"

"நீங்க பார்த்திருக்கீங்களா?"

"உள்ள என்ன என்ன இருக்குங்கற பட்டியல் உங்கம்மா கையில இருக்கு ,அவங்க பொறுப்பை யார் கிட்ட மாத்தி ஒப்படைகறாங்களோ அப்ப அந்த விவர ஏட்டையும் தருவாங்க.."

"இந்த விஷயம் வெளியூர்ல்ல இருக்கற நம்ப சொந்தகாரங்களுக்கு தெரியாதா?"

‘‘\நிலா..முதல்ல உன்னை பட்டணத்துக்கு உன்னை படிக்க வைக்க அக்கா தயங்கினதுக்கு காரணமே இந்த கோட்டை வீட்டோட பெரும் சொத்துதான்..விஷயம் தெரிந்த யாரும் உன்னை அதுக்காக கடத்திடப் போறாங்கன்னு கூட பயந்தா...நீ பிடிவாதமா நின்னு போயிட்டே.. ஆமாம் ஏன் சொத்து பத்தியே அதிகம் கேட்கறே?’’

சமையல் கார அம்மா வந்தார்.

மாமாவைப் பார்த்து“அம்மா வந்து கூப்பிடுறாங்க”என்றார்.

சித்தி “நான் என்னோட அறைக்கு போறேன்” என்று எழுந்தாள்.

மாமா போன் வேகத்தில் திரும்பி வந்தார்.

“நிலா..ஸ்டேஷன்ல்ல பார்சல் எடுக்கணும்..கிளம்பு”

“நான் எதுக்கு மாமா”

“உன்னை அழைச்சிட்டு போக எங்கக்கா அதான் உங்கம்மா உத்தரவு..”

எனக்கும் மாமாவிடம் தனியாக பேச வேண்டியிருந்ததால் கிளம்பினேன்.

மாமா காரை வெளியில் எடுக்கும் வரை காத்திருந்தேன்.

“நான் இனிமே எங்க அதிகம் போகப் போறேன்..அதானாலதான் நீங்க சொன்னதும் உடனே கிளம்பிட்டேன்...”

“கோட்டை வீட்டுப் பொறுப்பை ஏத்துகலாம்ன்னு முடிவு பண்ணிட்டே போலிருக்கு”

“வேற ஏதும் எனக்கு யோசனை பண்ண முடியலை மாமா”

“எனக்கு என்னமோ நீ உண்மையை அம்மாகிட்டே இப்பவே சொல்லிட்டா நல்லா இருக்கும்ன்னு தோணுது..பிரச்சனையைப் பெரிசு ஆ’கிட்டே போறது எல்லாருக்கும் சிக்கலாயிடும்”

“எல்லாவே மண்டைக்குள்ளே ஒடிட்டே இருக்கு மாமா”மாமாவிடம் லைப்ரரி விஷயத்தினை புத்தகம் தவிர சொன்னேன்.

“அதுல என்ன இருகு நிலா..அவ ஏதோ கற்பனை பண்ணிட்டு பயந்து தான் விழுந்திருக்கா..அதே சிந்தனையோட அங்க போன உனக்கு கற்பனையா என்ன என்னமோ தோணியிருக்கு”

‘‘இல்ல மாமா நம்ம சொத்து விவரம் தெரிஞ்சவங்க யாரோ உள்ளே நமக்கெல்லாம் தெரியாம வந்துட்டு போறாங்கன்னு நினைக்கறேன்’’

‘‘ரொம்ப அதீதமா கற்பனை பண்றேன்னு நினைக்கறேன்..உங்கம்மா மதியம் ஒரு குண்டு போட்டா..உன் பையன் கிட்டே லைனைப் போட்டு கொடு..நான் போன்லேயே சொல்லிடறேன்..எப்ப லீவ் கிடைக்கும்ன்னு தெரிஞ்சுட்டு தேதியை நிச்சயம் பண்ணிடலாம்ன்னு சொல்றா’’

மாமா காரை நிதானமாக செலுத்திக் கொண்டிருந்தார்.

நான் வெளிப் புறம் வேடிக்கைப் பார்த்த படியே கேட்டேன்.

‘‘நீங்க என்ன பதில் சொன்னீங்க..?‘‘

‘‘இந்த வார முடிவுல போன் பண்றேன்னு சொல்லியிருக்கேன்..’’

நான் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தேன்.

‘‘நிலா..’’

‘‘என்ன?’’

‘‘ரொம்ப தீவிரமா சிந்தனை பண்றே?’’

‘‘நீ என்ன முடிவு வேணும்ன்னாலும் எடு..சிக்கல்களை அதிகம் ஆக்கிக்காதே’’

ரயில்வே நிலையத்தில் பார்சலை எடுத்து கொண்டு திரும்பும் வரை ஸ்டேஷன் மாஸ்டர் என்னை ஒரு ஏக்க பார்வை பார்த்தவாறு இருந்தார்.அவர் தவிப்பை நான் ரசித்தேன்.எந்த பேச்சும் கொடுகவிலலை.

வீடு திரும்பியதும் அம்மா என்னை கூப்பிட்டாள்.

தன்னுடைய நகைப் பெட்டியை என்னிடம் வந்தாள்.

‘‘நிலா எல்லா நகையையும் போட்டு பாரு..ஒட்டியாணம் சரியா இருக்கான்னு பார்க்கணும் ‘‘என்றாள்.

அம்மா சொன்ன தொணியே நான் மறுப்பு ஏதும் சொல்ல முடியாதது போல் இருந்தது.

அத்தியாயம் பதினான்கு

ஒவ்வொரு நகையாக பார்த்து பார்த்து எடுத்து தந்தாள்.
நான் அணிந்து கொண்டேன்.
ஒட்டியாணத்தை எடுத்துப் பார்த்தவள் 'கிட்ட வா நிலா' என்று அழைத்தாள்.
அருகில் போனதும் அமமாவே மாட்டி விட்டாள்.
'கொஞ்சம் தள்ளி நில்லு'என்றாள்.
தள்ளி நின்றேன்.
'உன்னோட இடுப்புக்கே செஞ்சது மாதிரி இருக்கு'என்றாள்.
எனக்கு அம்மா என்றாலும் ஏனோ வெட்கம் இயல்பாய் வந்தது.
"ரொம்ப அழகா இருக்கே நிலா ...இப்படி வந்து என் பக்கத்தில் உட்கார்"என்று தன் பக்கத்தில் கட்டிலில் தட்டிக் காட்டினார்.
பக்கத்தில் போய் உட்கார்ந்தேன்.
"சொல்லு நிலா..இந்த நகைகளை எந்த மறுப்பும் இல்லாம நீ வாங்கி
மாட்டிட்டததுமே எனக்கு நம்பிக்கை வந்துடுச்சு..இது உன்னோட வீடு
நிலா...உன் விருப்பத்தை மீறி யாரும் ஒண்ணும் பண்ண முடியாது..உன்னை
எதுக்குமே நான் வற்புறுத்த மாட்டேன்..அந்த வாசல் கதவை ஒரு நிமிடம்
மூடு"என்றாள்.
எழுந்து மூடி விட்டு மீண்டும் அம்மாவின் பக்கத்தில் உட்கார்ந்தேன்.
அம்மா தலையணையின் அடியில் கையை விட்டு அதை எடுத்து என் முன் நீட்டினாள்.
நான் அதிர்ந்து போனேன்.
"இதுல இருக்கறது யாரு..?"
நிலா ஒன்றும் பதில் சொல்லவில்லை.
அம்மாவிடம் பொய் சொல்ல முடியாது.
மாமா நிச்சயம் அம்மாவிடம் எந்த விவரத்தையும் சொல்லியிருக்க மாட்டார்.
அம்மாவிடம் போட்டோ வந்து விட்டது,இனிமேலும் உண்மையை மறைக்க முடியாது.
"என் ,மேல உனக்கு நம்பிக்கை போயிடுச்சா..உன் ஆசைக்கு மீறி நான்
என்னைக்காவது நடந்துட்டு இருக்கேனா..ஏன் என் கிட்ட மறைக்க முயற்சி
பண்றே?"
அம்மா மிகவும் தன்மையாய் கேட்டதும் நான் உடைந்து போனேன்.
கண்களில் நீர் குளமாய் கட்டிக் கொள்ள அப்படியே அம்மாவின் மடியில் சாய்ந்தேன்.

திருமணம் நடந்த விஷயத்தை சொல்லவில்லை.
"இவரதான் எனக்கு பிடிச்சிருக்கு"- அழுதுக் கொண்டே சொன்னேன்.
"நிலா உன்னோட ஆசைகள் எதுக்குமேள நான் தடை சொன்னது இல்லே..அதுவும் உனக்கு
வாழ் நாள் துணையா வரப் போறவர்..இதுக்கு தடை சொல்வேன்னு நினைக்கறியா?"
"இல்லம்மா"
"அவருக்கு போன் பண்ணி அவர் குடும்பத்தோட வரச் சொல்லு..நம்ம கோட்டை
வீட்டு சம்பிரதாயம் பத்தி அவருக்கு ஏதாவது தெரியுமா? நீ ஏதாவது
சொல்லியிருக்கியா?"
"முழுசா சொல்லலை..கொஞ்சம் சொல்லியிருக்கேன்.."
"உன் கூட இங்கயே இருக்க சம்மதிப்பாரா?"
"என்னை அவருக்கு பிடிக்கும்..எனக்காக என்ன வேணும்ன்னாலும் செய்வார்..""
"அவர்கிட்ட போன்ல பேசு..அவரோட அம்மா,அப்பா ரெண்டு பேரையும் அழைச்சிட்டு
வரச் சொல்லு""
"சரிம்மா"
"நீயா யார்கிட்டயும் சொல்ல வேண்டாம் நிலா...நான் நாளைக்கு விஷயத்தை
சொல்றேன்..இப்ப போய் ஆக வேண்டிய வேலையைப் பாரு.."
நான் எழுந்து சென்றேன்.
என் அறையில் நான் எதிர்பார்க்காமல் சித்தி அங்கே காத்திருந்தாள்.
"என்ன நிலா..கீழே வரலாம்ன்னு நினைச்சேன்..இப்படியும் நேர இங்கதான்
வருவேன்னு தெரியும்..அதான் காத்திருக்கேன்..எதுக்கு கூப்பிட்டாங்க.."-
அம்மா சொன்னது ஞாபகம் வந்தது.
'நீயா யார்கிட்டயும் சொல்ல வேண்டாம்'
அம்மா காரணம் இல்லாமல் சொல்லியிருக்க மாட்டாள்.
"ஒன்னும் முக்கிய விஷயம் இல்ல ...எப்பதான் முடிவு எடுப்பேன்னு
கேட்டாங்க..வேற ஏதும் சொல்லலை"
கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்த சித்தி போய் விட்டாள்.
ரமேஷிடம் பேசி இந்த சந்தோஷமான விஷயத்தை பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று
துடிப்பாய் தான் இருந்தது.
கோட்டை வீட்டின் மொட்டை மாடியில் போய் முயற்சி செய்து பார்க்கலாம்..அம்மாவின் அறை தொலைப்பேசியில் இருந்து அதிகம் பேச முடியாது.

கைப் பேசியை எடுத்துக் கொண்டு மேல் மாடி கடந்து
மொட்டை மாடிப் படிக்கு சென்றேன்.
அந்த கதவு உள்புறம் பூட்டியிருந்தது.அவசரத்தில் ஹாலில்
மாட்டியிருக்கும்
சாவியை எடுக்காமல் வந்து விட்டேன்.
திரும்ப கீழே போய் சாவியை எடுத்து வர வேண்டும்
மீண்டும் படியில் இறங்க ஆரம்பித்தேன்.
லைப்ரரி தளம் வந்ததும் என்னையும் அறியாமல் லைப்ரரி
உள்ளே போனேன்.
நான் பத்திரப் படுத்தியிருந்த இடத்தில் அந்த
புத்தகம்,கையெழுத்துப்
புத்தகம் காணோம்.
அதற்குள் யார் இதை கொண்டு போய் விட்டார்கள் என்று
யோசித்த படியே தேட
இரண்டு புத்தகம் தள்ளி அது இருந்தது.
அதை எடுத்துக் கொண்டு அறைக்கு திரும்பினேன்.
கதவை உள்புறம் தாழிட்டுக் கொண்டு புத்தகத்தை
புரட்டினேன்.
முதலில் பார்த்தபோது ஒரு பிரசுரம் செய்யப் படாத
புத்தகத்தின் எழுத்து
பிரதி என்பதையும் மீறீ ஏனோ ஒரு வித பீதி!அந்த புத்தகத்தில்
அணைத்து
வாரிசு படங்களும்,ஆனால் என் படத்தோடு முடிந்தது தான்
எனக்கு பீதி வர
காரணம்.!
இரவு சாப்பாடு முடிந்ததும் அம்மா மீண்டும் தன் அறைக்கு
அழைத்தாள்.
போனேன்.
"நிலா நாளைக்கு நீ மாமாவை அழைச்சிட்டு ஸ்டேஷன் போய்
போன் பண்ணி அவரை
உடனே வரச் சொல்லு...இங்க இருந்து பேச உனக்கு ஒரு
தயக்கம் இருக்கும்
"என்றார் சிரித்தபடியே.
"நாளைக்கு சாப்பிட்டு போகலாம்..தேவையில்லாம மொட்டை
மாடியில எல்லாம்
தனியா போய் நிக்காதே.."
எனக்கு பகீர் என்று இருந்தது.
"அம்மா இந்த வீட்டில என்னதான் நடக்குது."
"ஒண்ணும் நடக்கலை பயப்படாம போய் தூங்கு..எல்லாம்
நாளைக்குப் பார்த்துக்கலாம்"
நான் என் அறைக்கு திரும்பினேன்.
உள் மனசு அமைதியாய் இல்லை.
அம்மா சாதாரணமாய் இருப்பது போல் தோன்றினாலும் ஏனோ
ஏதோ நெருடியது.

இரவு தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தேன்.
அப்படியே உறங்கி விட்டேன்.
திடீர் என்று முழிப்பு!
படுக்கையை ஒட்டி நின்று கொண்டிருந்தது அந்த கருப்பு அங்கி அணிந்த
உருவம்.பயத்தில் நடுங்கிப் போனேன்.
கத்த வேண்டும் என்று எத்தணித்தேன்.
வார்த்தைகள் வெளி வராமல் தொண்டைக்குள்ளேயே சிக்கிக் கொண்டன.
நான் கண்களை மூடிக் கொண்டேன் இறுக்கமாக.
அந்த உருவம் குனிந்து தன் முகத்தை என் முகத்தருகே கொண்டு வந்திருப்பது
அதன் மூச்சுக் காற்றிலிருந்து தெரிந்தது.
பயம்,பீதி இரண்டின் உச்சத்திலும் இருந்தேன் நான்.
அந்த வெப்ப மூச்சுக் காற்று விலக-
மெல்ல கண்களை திறந்தேன்.
அந்த அங்கி உருவம் இப்பொழுது என் அலமாரி அருகே நின்று இருந்தது.
அதன் கையில் இருந்த சிறிய டார்ச்சால் உள்ளே ஒளி வெள்ளத்தைப்
பாய்ச்சுவதைப் பார்த்தேன்.
நான் முனகிய படியே வேண்டும் என்றே புரண்டு படுத்தேன்.
அந்த உருவம் சட்டென்று என் பக்கம் திரும்பி பார்த்தது.
நான் கண்களை மெல்ல திறந்து கொஞ்சம் தைரியத்துடன் பார்த்தேன்.
அந்த உருவம் வேகமாய் நகர்ந்து வெளியில் சென்றது.
நான் அப்படியே அசையாமல் படுத்திருந்தேன்.
எழுந்து போய் பார்க்கவும் பயம்.
இந்த நட்ட நடு ராத்திரியில் கருப்பு அங்கி உருவம் என் அறையில் அப்படி
என்ன செய்கிறது..எதை தேடுகிறது.
விடியும் வரை அரைகுறை தூக்கத்திலேயே கிடந்தேன்.
காலையில் காபி குடிக்கத் தயாராகி டைனிங் ஹாலுக்கு போன போது மாமா தயாராய் இருந்தார்.
"நிலா என்ன ஏதோ போன் பண்ணனும்ன்னு சொன்னியாம்..உங்கம்மா காலையில
எழுந்ததுமே சொல்லிட்டா..இன்னும் கொஞ்ச நேரத்துல டிபன் தயார்
ஆயிடும்,,சாப்பிட்டுட்டு கிளம்பலாம்.."என்றார்.
"அப்ப வெய்ட் பண்ணுங்க இதோ வந்துடறேன்.." என்று வேகமாய் மேலே போனேன்..
கைப்பேசியில் தான் ரமேஷ் நம்பர் இருக்கிறது.
நான் பதுக்கி வைத்து இருந்த இடத்தில் அது பத்திரமாய் இருந்தது.

எடுத்து கொண்டு கீழே வந்தேன்.
எல்லோரும் மேஜையில் எனக்காக காத்திருந்தார்கள்.
யாரும் யாருடனும் அதிகம் பேசவில்லை.
சாப்பிட்டவுடன் கிளம்பி விட்டோம்.
மாமா சிரித்து கொண்டே காரை செலுத்தினார்.
"நான் போட்ட டிராமாவுக்கே தேவையில்லாம போயிடும் போல இருக்கு,,,என்னதான்
சொல்லி உங்கம்மாவை சமாளிச்சே?"
"நீங்க வேற மாமா..அம்மா கைக்கு எப்படி என் பெட்டியில இருந்த ரமேஷ்
போட்டோ போச்சுன்னு தெரியலை.."
காரை வேகமாய் செலுத்திக் கொண்டே"உங்கம்மாவுக்கு சேவகம் செய்ய தான் பல
பேரு காத்திருக்காங்களே..ஆனா என் மேல நீ சந்தேகப் படாதே..நான் அந்த
வேலையை செய்ய மாட்டேன்..."என்றார்.
"மாமா உங்க மேல நான் சந்தேகப் படலை.."என்று நிறுத்திய நான் முதல் நாள்
இரவு அறைக்குள் வந்து போன கருப்பு அங்கி உருவம் பற்றி சொன்னேன்.
மாமா சிரித்துக் கொண்டே"நிலா நீ ஏதாவது கனவு கினவு கண்டியா?"
'என்ன அங்கிள் இவ்வளவு சீரியஸாய் சொல்றேன்..நீங்க தமாஷ் பண்றீங்க "
"அப்படி இல்ல நிலா..உனக்கு கற்பனை ரொம்ப அதிககா இருக்குன்னு தோணுது.."
ஸ்டேஷன் போய் சேர்ந்த போது ஸ்டேஷன் மாஸ்டர் அங்கு இல்லை.அறை திறந்து கிடந்தது.
மேஜை மீது இருந்த போனை பார்த்தவர்"நீ போய் பேசு..நான் இங்க
இருக்கேன்...ரயில் வந்துட்டு போனதும் அவர் பக்கத்துல இருக்கற அவர்
வீட்டுக்கு போயிருப்பாரு"என்றார்.
நான் நாற்காலியில் உட்கார்ந்து ரீஸீவரை எடுத்து காதில் பொருத்திக் கொண்டு
கைப்பேசியில் இருந்து ரமேஷின் எண்ணை எடுக்க காண்டாக்ட்டை அழுத்தினேன்.
ரமேஷ் நம்பர் இல்லை.
பதட்டத்துடன்  மீண்டும் பார்த்தேன்.
ரமேஷ் எண்னை காணோம்.
கால் ஹிஸ்டரியும் எரேஸ் செய்யப் பட்டிருந்தது.

அத்தியாயம் பதினைந்து

யார் இந்த வேலையினை செய்திருப்பார்கள்..?

முதல் நாள் இரவு அறைக்குள் வந்த உருவம் தான் இந்த வேலையைப் பார்த்து இருக்க வேண்டும்.ஆனால் தான் மெல்ல அசைந்த உடனேயே அது வெளியில் சென்று விட்டது.அப்படியே ஏரேஸ் செய்தாலும் குறிப்பிட்ட அந்த பெயரை அறிந்தவர்தான் இந்த வேலையை செய்து இருக்க வேண்டும்.

மனதில் இருந்த ரமேஷின் எண்ணை நினைவில் கொண்டு வந்து அந்த சுழற்றும் தொலைப் பேசியில் எண்களை சுழற்றினேன்.

முதல் ரிங்கிலேயே எடுத்தான் ரமேஷ் எடுக்க -

நான் முதலில் அந்த சந்தோஷ  செய்தியை சொல்லி விட துடித்தேன்.

ரமேஷ் "என்னதான் ஆச்சு நிலா..ஏன் உன் போன் கிடைக்கவே மாட்டேங்குது.."

"சுத்தமா டவர் இல்ல..இப்ப நான் ஸ்டேஷனுக்கு வந்துதான் பேசறேன்..அம்மாகிட்ட நம்பளைப் பத்தி சொல்லிட்டேன்.."

"என்ன சொன்னாங்க..?"

"உடனே அவரோட அப்பா அம்மாவை வரச் சொல்லு..கல்யாணத்தைப் பேசி முடிவு பண்ணிடலாம்ன்னு சொல்றாங்க.."

"ஓ..கிரேட்...எப்ப வரணும்.."

"இன்னைக்கே நீங்க கிளம்பி வந்தா ரொம்ப நல்லாதான் இருக்கும்..உங்க மீசையை நோண்டி

ரொம்ப நாள் ஆகுது..கை பரபரன்னு இருக்கு..இன்னொரு விஷயம்.."

"என்ன வரும் போது உனக்கு பிடிச்ச கஸாட்டா ஐஸ் க்ரீம் கொண்டு வரணுமா..அங்க வரும் போது தண்ணியா ஆயிடும்.."

"போதும் நான் ரொம்ப டென்ஷன்ல இருக்கேன்..இப்ப காமடியா?ஒரு முக்கியமான விஷயம் ..அதை உங்ககிட்ட இருந்து நான் மறைச்சிருக்கேன்..."

"என்னது அது..?"

"நேர வரும் போது சொல்றேன்.."

"நீயே ஆரம்பிச்சிட்டு நேரம் வரும் போது சொல்றேன்னு சொல்ற?"

"ஆமாம்..இப்பவே சொல்லிட்டா ரொம்ப குழம்பி போயிடுவே ரமேஷ்.."

"அதெல்லாம் குழம்ப மாட்டேன்..இப்ப நீ சொல்றது தான் குழப்பமா இருக்கு..சரி நான் எப்ப கிளம்பணும் சொல்லு?"

"உடனே கிளம்பி வாங்க.."

"சரிடா செல்லம்..ஒண்ணும் இல்லையா?"

"நான் ரயில்வே ஸ்டேஷன் போன்ல இருந்து பேசறேன்..அதிகம் பேச முடியாது..உங்களுக்கு தகவல் சொல்லனும்ன்னுதான் மாமாவை அழைச்சிட்டு வந்தேன்..இங்க ரொம்ப சிக்கல்ல நான் இருக்கேன்..உங்க கிட்டே கேட்காம இங்க ஒரு விஷயத்துக்கு ஒத்துகிட்டேன்.."

"என்ன சொல்ற..உன்னோட குரல்ல ஒரு பயம் தெரியது.."

"ரமேஷ் எதையும் ரொம்ப நாள் தள்ளிப் போட முடியாது..வந்துடுங்க,,நேர்ல்ல விவரமா சொல்றேன்.."

ரீஸீவரை வைத்து விட்டாள் நிலா.

மாமா உள்ளே நுழைந்தார்.

பின்னாலேயே ஸ்டேஷன் மாஸ்டரும் வந்தார்.

"எப்ப வந்தீங்க..இன்னைக்கு எதும் பார்ஸல் வரலையே..""

"வீட்டீலே போன் ஒர்க் பண்ணலை..நிலா ரொம்ப அவசரமா ஒரு போன் பண்ணனும்ன்னு சொன்னா அதுக்குதான் வந்தேன்." - மாமா பட்டென்று ஒரு பொய்யை சொன்னார்.

"நம்ப ஊர்ல்ல மொத்தமே மூணு போனுதான்..இரண்டு இங்க..ஒண்ணு உங்க வீட்டிலே..ரெண்டுமே திருநெல்வேலி எக்ஸ்சேஞ்சுதான்..நான் போன் பண்ணி கம்ப்ளைண்ட் பண்ணிடறேன்.."

"சரி நாங்க கிளம்பறோம் .."என்றார் மாமா.

நானும் மாமாவும் வெளியில் வர -

கார் வரை வந்த ஸ்டேஷன் மாஸ்டர் நான் ஊருக்கு வந்த போது பார்த்த அதேப் பார்வையில் பார்த்துக் கொண்டிருந்தார்.

"எப்படியோ என்னை பெரிய சிக்கல்ல விடாம நீயே பிரச்சனையை முற்றுப் புள்ளி ஆக்குனது எனக்கு நிம்மதியை தந்துடுச்சு..ஆனா எனக்கு என்னமோ தோணிடுச்சு..இப்படிதான் விஷயம் முடியும்ன்னு.."

மாமா காரை வழக்கத்தை விட வேகமாக செலுத்த ஆரம்பித்திருந்தார் .

"மாமா எல்லாம் சரிதான் ..நானும் ஏதோ ஒரு வேகத்துல அம்மாகிட்ட பொறுப்பை ஏத்துக்கறேன்னு சொல்லிட்டேன்..அவர் வந்தப்புறம் என்ன என்ன புதுப் பிரச்சனை வெடிக்கப் போகுதுன்னு தெரியலை"

"அதை அவர் வந்த உடனே எதிர்க்கொள்ளலாம்..இப்பவே அதை யோசிச்சு ஏன் மண்டையை உடைச்சுக்கணும்?'

"அதுவும் சரிதான்..இருந்தாலும் அவர் வேலையை விட்டு இங்க என் கூட இருப்பாருன்னு எனக்கு தோணலை..அதுதான் பயமா இருக்கு"

"ஆரம்பிச்சு வச்சுட்டே..நடக்கறது நடக்கட்டும்.."

பேசாமல் வந்த நான் மீண்டும் ரமேஷின் எண்ணை எனது கைப்போனில் பதிவு செய்து கொண்டேன்.

மதியம் சாப்பாட்டு மேஜையில் அம்மா என் விஷயத்தைப் போட்டு உடைத்து விட்டாள்.

"நிலா படிக்கப் போன இடத்துல ஒருத்தரோட சினேகிதமா ஆயிட்டா..அவரை கல்யாணம் பண்ணிக்க ஆசைப் பட்டு என் கிட்ட உண்மைய சொல்லிட்டா..அவரை அப்பா,அம்மாவோட கிளம்பி வரச் சொல்லிட்டேன்.."

அத்தை முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

"சரிதான்..இது தெரிஞ்சுதான் எல்லாம் அவன் பையனுக்கு நிலாவை கேட்கறான்னு ஒரு டிராமா போட்டீங்களா?"

"அப்படியெல்லாம் இல்ல..இதுல டிராமா போட என்ன இருக்கு..?"

"அவரு கல்யாணமே பண்ணிக்கலை ,,திருநெல்வேலி ஸ்டேஷன்ல்ல பிச்சை எடுத்துட்டு இருந்த பையனை வளர்த்தார்ன்னு எல்லோருக்கும் தெரியும்..முதல்ல என் பையனுக்கு  நிலான்னு நிச்சயம் பண்ணீங்க ..அப்புறம் அந்த பயலுக்கு நிலான்னு சொன்னீங்க ..இப்ப புது கதை சொல்றீங்க"

அம்மாவுக்கு கோபம் வந்து விட்டது.

"அந்த பயன்னு மரியாதை இல்லாம சொல்லாதே..அவன் நல்லா படிச்சு இப்ப வெளி நாட்டுல பெரிய போஸ்ட்ல்ல இருக்கான்..""

என்னாலும் சும்மா இருக்க முடியவில்லை.

"அத்தே நான் உங்களை விட சின்னவதான்..நான் சொல்றதை கேளுங்க ..மாமா கல்யாணமே வேண்டாம்ன்னு கோட்டை வீடே கதின்னு கிடக்கறாரு..அவரு ஒரு பையனை எடுத்து வளர்த்து இந்த அளவுக்கு கொண்டு வந்தது உங்களுக்கும் தெரியும்..அதை போய் கொச்சைப் படுத்தறீங்களே அத்தை""

"நிலா நீ சின்ன பொண்ணு நீ இந்த பேச்சுல எல்லாம் தலையிட கூடாது..."

அத்தை அப்படி சொன்னது அம்மாவை கோபம் கொள்ள வைத்து விட்டது.

"என்ன மூளையில் எதும் பிசகிப் போச்சா? அவ கோட்டை வீட்டு பொறுப்பை இன்னும் கொஞ்ச நாள்ல ஏற்கப் போறவ...தப்பு செஞ்சா இந்த கோட்டை வீட்டுல யாரு வேணும்ன்னாலும் சுட்டிக்

காட்டலாம்...ஆனா இப்படி சின்னப் பொண்ணுன்னு மட்டம் தட்டிப் பேச யாருக்கும் அனுமதி கிடையாது."

"ஆமாம்...."என்று முனகிய அத்தை தொடர்ந்து சாப்பாட்டில் கவனம் செலுத்த ஆரம்பித்து விட்டாள்.

அத்தை மீது கோபத்தை விட எனக்கு பரிதாபமே ஏற்பட்டது.பாவம் நான் மருமகள் இல்லை என்று முடிவாகி விட்டதால் வரும் ஆதங்கம்தான்.

அம்மா தொடர்ந்து சொன்னாள்.

"நிலா அவளோட பேராசிரியர் ரமேஷை ரொம்ப விரும்பறா..அவர் தன்னோட குடும்பத்தோட வறார்...சீக்கிரம் திருமணத்தை முடிக்கணும்ன்னு விரும்பறேன்..இது தான் கடைசி முடிவு..இதுல விருப்பம் இல்லாதவங்க யாரும் இருக்க கூடாதுன்னு நான் நினைக்கறேன்..."

அண்ணன் திடிர் என்று வாயைத் திறந்தான்.

"கோட்டை வீட்டுக்கு வெளி ஆம்பளைங்க யாரும் மாப்பிள்ளையா வரக்கூடாதுன்னு கொஞ்ச நாள் முன்னாடி நீங்க சொன்னதா எனக்கு ஞாபகம்..."

"ஆமாம் ..ஆனா சில நேரங்கள்ல எல்லாத்துக்குமே விதி விலக்கு உண்டு ..உன்னோட காதல் போல.." -அவ்வளவுதான் அண்ணன் கப்சிப் ஆகி விட்டான்.

அம்மாவுக்கு தெரியும் யாரை எப்படி பேசி சமாளிக்க வேண்டும் என்று.

அம்மா பேசுவதை சித்தியும் ரசித்துக் கொண்டிருந்தாள்.

எனக்கு திடீர் என்று அந்த எண்ணம் வந்தது.

ரமேஷ் வந்ததும் இங்கேயே திருமணத்திற்கு பிறகு தங்க வேண்டும் என்று தெரிய வரும்போது எப்படி அதை எடுத்துக் கொள்வான்?

நான் சொல்லி புரிய வைக்க வேண்டும்...

அப்படி விருப்பம் இல்லை என்றால் அடுத்து என்ன செய்வது என்ற எண்ணம் எழுந்தது.

ரமேஷின் கோணத்தில் இருந்து யோசிக்க ஆரம்பித்து விட்டேன்.

சாப்பிட்டு விட்டு அறைக்கு திரும்பிய என் பின்னால் சித்தி வந்து விட்டாள்.

வந்ததுமே பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டாள்.

"என்ன  நிலா.. என் கிட்ட கூட நீ சொல்லவே இல்லை ..."

எனக்கு திடீர் என்று முகத்தில் வெட்கம் வந்து ஒட்டிக் கொண்டது.

"ஆமாம் என்  கிட்ட பேசும் போது வெட்கப் படு ..ரொம்ப நல்லா இருக்கு...அவர் போட்டோ இருக்கா?"

"இருக்கு.."

பத்திரப் படுத்தியிருந்த போட்டோவை எடுத்து காண்பித்தேன்.

"சூப்பரா கதா நாயகன் மாதிரி இருக்காரு.."

"சித்தி ரொம்ப ஓட்டாதீங்க..இந்த போட்டோவைத்தான் யாரோ எனக்கு தெரியாம இங்கிருந்து கொண்டு போய் அம்மாக்கிட்ட கொடுத்து இருக்காங்க ..அதை காப்பி போட்டு தன் கிட்ட அதை வச்சிட்டு இத திருப்பிட்டாங்க .."

"அப்படியா?"

"ஆமாம் இன்னொரு விஷயம் .." நான் சொல்லிக் கொண்டு இருக்கும் போது அறை வாசலில் நிழல் ஆடியது.

## அத்தியாயம் பதினாறு

நான் பேசுவதை நிறுத்தி விட்டு வெளியில் பார்த்தேன்.

டாக்டரின் பெண் உள்ளே வந்தாள்.

"வா வந்தனா" என்றேன்.

உள்ளே வந்து சித்தியின் பக்கத்தில் சுவாதீனமாய் உட்கார்ந்த வந்தனா "நிலா உங்கம்மா உங்களோட பெரிய அத்தையைப் பார்க்க போயிருக்காங்க"என்றாள்.

"அது எப்போ?"

"இப்பதான் அவங்களுக்கு ஏதோ உடம்பு முடியலையாம்..சாப்பாடு கொடுக்கப் போன வேலைக்காரம்மா சொன்னாங்கன்னு உங்கம்மா,எங்கப்பா இரண்டு பேரும் போயிருக்காங்க இப்ப"

எனக்கு பெரிய அத்தையின் அறையில் ஒரு வேலை இருக்கிறது.

ஏதேதோ வேலைகளில் அதை மறந்து இருந்தேன்

இப்பொழுது டாக்டரின் பெண் சொன்னதும் அது நினைவுக்கு வந்து விட்டது.

முக்கியமாக இப்பொழுது யார் படத்தினை பெரிய அத்தை வரைந்து கொண்டிருக்கிறாள் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

சித்தியுடன் பேச ஆரம்பித்த வேளையில் வந்தனா வந்து விட்டதால் வேறு பொதுவான விஷயங்களை பேசி விட்டு வந்தனா போனதும் ஆரம்பித்தேன்.

"சித்தி இவர் கிட்ட நம்ம வீட்டு வழக்கங்கள் பற்றி அதிகம் சொல்லலை..குறிப்பா திருமணம் முடிஞ்சதும் இங்கயே தங்கணும்ங்கறதை...அதை அவர் எப்படி எடுத்துப்பார்ன்னு

தெரியலை..அந்த ஒரு விஷயம் தான் சின்ன பயமாவே இருக்கு.."

"என்ன நிலா..இவ்வளவு தெளிவா இருக்கற நீ அதைப் பத்தி முக்கியமா சொல்லியிருக்க வேண்டாமா?ஆனா எனக்கு ஒரு விஷயம் நல்ல தெளிவா விளங்குது "

"என்ன ?"

"அவர் திடீர்ன்னு இப்படி ஒரு இடத்துல தன் வாழ்க்கை பூரா தங்க மாட்டாரு..இதை நான் உன்னை மனசு வருத்தப்பட வைக்க சொல்றேன்னு நினைக்காதே..இந்த போட்டோவைப் பார்த்தாலே அவரு ரொம்ப சுதந்திரமா இருக்க விரும்பறவர் மாதிரின்னு தெரியுது..எந்த அளவுக்கு அவர் உன்னை நேசிக்கறார் நிலா"

"எனக்காக என்னை வேணும்ன்னாலும் செய்வேன்னு சொல்லியிருக்கார் பல தடவை.."

" உனக்காக உயிரை விடுவாரா?"

சித்தி இப்படி கேட்பாள் என்று நான் கொஞ்சமும் நினைக்கவில்லை.

அவள் கேட்பது ஒன்றும் தவறில்லை.

உயிருக்கு உயிராய் காதலிப்பவர்கள் நமக்காக உயிரை விடுவார்களா?

ஆனாலும் மனதில் இருந்த எதையும் காட்டிக் கொள்ளாமல்,"சித்தி கொஞ்சம் தெளிவா இருந்தேன்..குழப்பிட்டீங்க "என்றேன்.

"குழப்பலை நிலா..எனக்கு மனசுல தோணுன விஷயங்களை உன் கிட்ட சொன்னேன்...ஆனா அவரு இங்க தங்க சம்மதிச்சா..நம்ப கோட்டை வீட்டுக்கு ஒரு அழகான் ஆம்பிள்ளை கிடைப்பாரு.."சித்தி என்னை சகஜமாக்க சிரித்தாள்.

"சரிதான்...நானே கல்யாணம் எந்த பிரச்சனையும் இல்லாம நடக்கணும்ன்னு நினைக்கறேன்.."

"எல்லாம் நிச்சயம் நடக்கும்.."

"சித்தி நான் ஒண்ணு கேட்பேன்..தப்பா நினைக்க மாட்டீங்களே?"

"என்ன நிலா ..ஏன் தப்பா நினைக்கப் போறேன்...."

"'நீங்க ஏன் கல்யாணம் பண்ணிக்கலை?"

"எனக்கு ..எனக்கு .." சித்தி இழுத்தாள்.

"விடுங்க சித்தி ..உங்களுக்கு எப்ப சொல்லணும்ன்னு தோணுதோ அப்ப சொல்லுங்க"

"அப்படி இல்ல நிலா..உன் கிட்ட ஒரு முக்கியமான் விஷயத்தைப் பத்தி சொல்லணும்..இந்த கோட்டை வீட்டோட பொறுப்பை ஏத்துக்க போற உனக்கு அது கட்டாயம் தெரிஞ்சு இருக்கணும்...இன்னைக்கு ராத்திரி எல்லாம் தூங்கினதும் நான் உன் அறைக்கு வர்றேன்"

"சரி சித்தி " என்றேன்.

மாலை வரை சித்தி என்னுடன் தான் இருந்தாள்.

இருட்டியதும் நான் சமையல் அறை போய் டீ குடித்து விட்டு வந்தேன்.

அங்கு இருந்த வந்தனா,"அத்தையை அப்பா திருநெல்வேலிக்கு அழைச்சிட்டு போயிருக்காங்க...பெரிய டாக்டர் கிட்ட காண்பிச்சுட்டு வரப் போயிருக்காரு"என்கிற தகவலை சொன்னாள்.

என்னையும் அறியாமல் என் கால்கள் பெரிய அத்தையின் அறையை நோக்கி நடந்தன.

அத்தையின் அறை கதவு சும்மா மூடி இருந்தது.

மெல்ல அறைக் கதவை திறந்து உள்ளே நுழைந்தேன்.

உள்ளே நுழைந்ததும் கதவை உள்புறம் தாழ் இட்டுக் கொண்டேன்.

என் கண்கள் முதலில் அந்த நிறுத்தி வைக்கப் பட்டிருந்த ஓவிய பலகையின் மீது தான் சென்றது.

கோட்டை வீட்டில் துர் மரணங்கள் நிகழும் போதெல்லாம் அத்தை இதில் வரைந்து வைத்து இருப்பாள்.

மனதுக்குள் மெல்லிய பயம் எழுந்தது.

மெல்ல பலகையில் மறைத்து தொங்கி கொண்டிருந்த சீலையை விளக்கினேன்.

அதில் அத்தை ஓவியத்தை வரைந்து முடித்திருந்தாள்.

அதில் இருந்தது சித்தி.

எனக்கு பயம் உச்சத்திற்குப் போனது.

பயத்தில் சீலையை மூடி விட்டு திரும்பியவள் அதிர்ந்து போனேன்.

அத்தையின் துணிகளை வைக்கும் பீரோ அரைகுறையாய் திறந்து கிடந்ததில் தொங்கி கொண்டிருந்த அது கண்ணில் பட்டது.

அது மூன்று நாள் முன்னால் நட்ட நடு இராத்திரி அந்த உருவம் அணிந்து வந்த கருப்பு அங்கி.!

நான் மிரண்டுதான் போனேன்.

ஓவிய பலகையில் சித்தியின் படம் பார்த்த அதிர்ச்சி முதலாவது ,இரண்டாவது இந்த அதிர்ச்சி.நடமாட முடியாத அத்தையின் அறையில் கருப்பு அங்கி.எனக்கு மெல்லிய பயமும் ,குழப்பமும் சேர்ந்தே வந்தது.

அறையை ஒரு நோட்டம் இட்டேன்.

இந்த அறையில் நான் அதிகம் புழங்கியதில்லை.

திறந்து இருந்த மரப் பீரோவை அணுகினேன்.

பெரிய அத்தையின் இரவு உடைகளும் அந்த அங்கியோடு தொங்கி கொண்டிருந்தது.

மெல்ல அந்த உடைகளை பார்த்தேன்.

உடைகளின் பின்னால் ஏதோ உருத்த -

கைகளால் தட்டிப் பார்த்தேன்.

மரம் தான்.

ஆனால் 'தொம் தொம்' என்று சப்தம்.

துணிகளை மெல்ல விலக்கிப் பார்த்தேன்.

உள்ளே ஒரு கதவு போல் தெரிந்தது.

கைகளை வைத்துப் பார்த்தேன்.

மெல்ல தடவ-

கையில் தட்டுப் பட்டது அந்த சின்னத் தாழ்ப்பாள்.

அதைத் திறந்து பார்த்தேன்.

என் கண்கள் ஆச்சர்யத்தில் விரிந்தன.

உள்ளே படிகள் கீழ் நோக்கி சென்றன.

காரிடாரில் யாரோ நடமாடும் சப்தம்.

வேகமாய் அதை மூடி கதவருகில் வந்து தாழ்ப்பாளை மெல்ல திறந்து விட்டு கதவின் பின்னால் ஒளிந்து கொண்டேன்.

என் இதயம் வேகமாய் துடிக்க ஆரம்பித்தது.

யாரும் வரவில்லை.

இனிமேல் இங்கிருந்தால் ஆபத்து என்று தோன்றவே கதவை விலக்கி வெளியில் பார்த்தேன்.

யாரும் இல்லை என்பதை உறுதி செய்து கொண்டு வெளியில் வந்தேன்.

மனது படபடத்தது.

நேரே என் அறைக்கு சென்றேன்.

அங்கு உள்ளிருந்து மாமா வந்து கொண்டு இருந்தார்.

"எங்க போன நிலா ....உன்னைப் பார்க்கதான் வந்தேன்..." என்றார்.

"மேலே லைப்ரரியில இருந்தேன்...சொல்லுங்க மாமா"

"அம்மா அடுத்த வாரமே எல்லா பொறுப்பையும் உன் கிட்ட ஒப்படைக்க முடிவு பண்ணிட்டா...ரமேஷ் வந்த உடனேயே கல்யாணம் அடுத்த வாரம் வியாழக்கிழமை...அன்னைகு நல்ல முகூர்த்தம்ன்னு சொன்னா..."

"என்ன மாமா சொல்றீங்க"

"ஆமாம்..எல்லா சொந்த காரங்களுக்கும் சொல்லியாச்சு..பாதி பேர் முக்கியமானவங்க இருக்காங்க...மற்றவங்க வந்து சேர்ந்துடுவாங்க ரெண்டு நாள்குள்ள.."

"ஏன் மாமா அம்மாக்கு இந்த வேகம்"

'உன் மனசு மாறிடக் கூடாதுங்கற எண்ணம் கூட வந்திருக்கலாம்..."

"மாமா நான் உடனே ரமேஷ் கூடப் பேசணும்.."

"அம்மா ரூம்ல்ல இருக்கற போன்ல்ல இருந்தே பேசு..அதுதான் அம்மாக்கு சொல்லி எல்லாருக்கும் சொல்லியாச்சு இல்ல"

"அதுவும் சரிதான்..ஆனா பெர்ஸனலா பேச முடியாதே..."

"நாளைக்கு காலையில் தூத்துக்குடி சித்தப்பாவை கூட்டிட்டு வர போறேன்..நீயும் கூட வா..உன்னோட கைபேசியையும்

எடுத்துட்டு வா...தூத்துக்குடி நுழையறதுக்கு முன்னாடியே டவர் இருக்கு.."

"என்ன சொல்லிட்டு வர,,,,"

"முக்கியமான பொருள் ஏதாவது வாங்கணும்ன்னு சொல்லிட்டு வா...உன்னை இன்னும் கொஞ்ச நாளைக்கு உன்னை ரொம்ப நெருக்க மாட்டாங்க"

எனக்கு மாமா சொன்னதும் சிரிப்புதான் வந்தது.

"ஏன் சிரிக்கிறே..?"

"நான் அம்மாவை மீறி என்னதான் செஞ்சிருக்கேன் மாமா சொல்லுங்க..என்னை நெருக்க"

"அதுவும் சரிதான்..நான் ஒரு பேச்சுக்கு சொன்னேன்.."

"நிலா உன்னோட செல் போனை எடுத்துட்டு மொட்டை மாடிக்கு போய் முயற்சி செஞ்சு பார்த்தா என்ன?"

"இதுவும் நல்ல ஐடியா தான்...""

கைப்பேசியை எடுத்துக் கொண்டு மாமாவுடன் மொட்டை மாடிக்கு போனேன்.

அவர் சொன்னது சரிதான்.

கைப் பேசியை எடுத்து ஆன் செய்து பார்க்க ஒரு பார் காட்டியது.

ரமேஷின் எண்களை போட்டேன்.

ரிங் போகாமலே ரமேஷ் எடுக்க -

"ரமேஷ் ..எப்ப கிளம்பறீங்க?"

"கிளம்பியாச்சு...ரயில் ஏறியாச்சு நிலா"

ரமேஷ் சொல்ல எனக்கு சந்தோஷம் பீறிட்டது.

சொல்லி வைத்தாற் போல் கைப்பேசி அணைந்து விட்டது.

நான் மாமாவை சோகமாக பார்த்தேன்.

"என்ன நிலா?"

"மாமா அவர் கிளம்பிட்டார்...ரயில்ல தான் இருக்காராம்""

"சரிதான் உங்கம்மாவை விட அவர் பயங்கர ஸ்பீடா இருப்பார் போல் இருக்கே?" - மாமா சிரித்தார்.

அத்தியாயம் பதினேழு

"ஆமாம் நாளைக்கு தூத்துக்குடி வேற போகணும்...இங்க ஸ்டேஷனுக்கு யார் போவா..?"

"அது ஒண்ணும் பிரச்சனை இல்லே..முதல்ல நம்ப வீட்டு மாப்பிள்ளையை கூட்டிட்டு வந்து விட்டுட்டு அப்புறம் தான் தூத்துக்குடி போகணும்.."

"நானும் வர்றேன்...வரும் போதே நிறைய விஷயங்கள் பேசிடலாம்.."

"நீ இல்லாமலா ..."

"நிலா...நிலா.."என்று குரல் .

தொடர்ந்து ஓடி வரும் ஓசை.

மொட்டை மாடியின் கதவைத் திறந்து கொண்டு வந்தாள் டாக்டரின் பெண்.

"உங்களை எங்க எல்லாம் தேடறது..கீழே ஒரே அமர்க்களம்"

அவளுக்கு ஓடி வந்ததில் மூச்சு இறைத்தது.

"என்ன ஆச்சு.?"

"உங்கப்பாவுக்கும் உங்க அத்தைக்கும் ஏதோ வாக்குவதம்..நடுவில உங்கப்பாகிட்ட வேகமா பேச வந்த சுரேஷை உங்க அண்ண கையை நீட்டி அடிச்சிட்டான்.."

"அண்ணனா  அவனுக்கு கோபமே வராதே "

நானும் மாமாவும் அவளுடன் கீழே விரைந்தோம்.

சோபாவில் ஆளுக்கொரு சோபா மூலையில் உட்கார்ந்து இருந்தார்கள்.

அத்தை அழுதுக் கொண்டிருந்தாள்.

சித்தி அத்தை அருகில் உட்கார்ந்து இருந்தாள்.

மாமா தலையைப் பார்த்ததும் அத்தை "வாடா..என் அடிச்சி அவமானப் படுத்ததான் கூப்பிட்டீங்களா?"என்று குரலெடுத்து பேச ஆரம்பித்தாள்.

மாமா "என்ன ஆச்சு...ஏன் இப்படி ..அக்கா எங்க?"

"ம் இங்க குண்டே வெடிச்சா கூட என்னன்னு கேட்க மாட்டாங்க"

அம்மாவின் அறை கதவு படாலென்று திறந்தது.

"எல்லா வாயை மூடிட்டு சும்மா இருங்க..எனக்கும் எல்லாம் காதுல விழுந்துட்டுதான் இருக்கு..சுரேஷ் அப்படி கேட்டது தப்பாதான்..அதனால தான் என் பையன் அடிச்சான்...அவன் அடிக்காம இருந்தாதான் ஆச்சர்யம்.."

எல்லாரும் அம்மாவின் குரல் கேட்டதும் ஸ்விட்ச் போட்டாற் போல் ஆகி விட்டார்கள்.

நான் சித்தியை அழைத்துக் கொண்டு என் அறைக்கு வந்தேன்.

"என்னாச்சு சித்தி..?"

"சுரேஷுக்கு கொழுப்புதான்...அவன் உங்கப்பா கிட்ட உங்க இரண்டாவது மனைவிக்கும் நிலா வயசுல ஒரு பொண்ணு இருக்கு இல்ல ..அதை எனக்கு கட்டி கொடுங்க..நான் அவளை வாரிசு ஆக்குங்கன்னு இப்ப

வற்புறுத்த மாட்டேன்னு நக்கலா சொன்னான்..அதுதான் உங்கண்ணனுக்கு கோபம் வந்துச்சு...அடிச்சான்..அவன் கேட்டதுல என்ன தப்புன்னு உங்கத்தை கேட்டாங்க..அதுக்கு அப்புறம் தான் உங்கண்ணன் அடிச்சான்.."

எனக்கு 'சட்'டென்று பெரிய அத்தையின் அறையில் ஓவியத்தில் சிறைப்பட்டிருந்த சித்தியும் உருவம் நினைவில் வந்தது.சித்தியிடம் அதை சொல்லலாமா? யோசித்தபடியே பார்த்ததும் சித்தி "யேய் நிலா என்னை ஏன் இப்படி எப்பவும் இல்லாத மாதிரி பார்க்கறே..அப்படி என்ன என் முகத்துல இருக்கு புதுசா?"என்று கேட்க-

நான் அதற்கு மேலும் கட்டுப் படுத்த முடியாமல் நான் பெரிய அத்தையின் ஓவியப் பலகை விஷயத்தினைச் சொல்ல சித்தி முதலில் அதிர்ச்சிதான் அடைந்தாள்.

சித்தி முதலில் திடுக்கிட்டாள்.

"என்ன சொல்றே நிலா..என் படமா...என் படத்தையா அத்தை வரைஞ்சிருக்காங்க...?"

"ஆமாம்...அதனாலதான் நான் அதிர்ச்சியானேன்..அவங்க அன்பா கூப்பிட்டாலே மனசுல பீதியோட தான் நான் போவேன்.."

சித்தி,"நிலா உனக்கு இதுல எல்லாம் நம்பிக்கை இருக்கா..அவங்க படம் வரைஞ்சா நமக்கு ஆபத்து வந்துடுமா...?"

"இது நாள் வரைக்கும் கோட்டை வீட்டிலே அப்படித்தான் நடந்துட்டு வருது..அவங்க ஒருத்தர் படத்தை வரையறது ஏதேச்சையா இல்லை திட்டமிட்ட செயலா இல்லையான்னு எனக்கு தெரியாது..ஆனா இது நாள் வரைக்கும் நடந்த உண்மையை யாரும் மறைக்க முடியாது இல்ல..."

கலகலப்பாக இருக்கும் சித்தி கொஞ்சம் தளர்ந்தாள்.

அவள் முகத்தில் முதன் முறையாக பயத்தின் ரேகைகள் ஓட ஆரம்பித்தன.

"என்ன பண்ணலாம் நிலா..?"

"ஜாக்கிரதையா இருந்தா போதும்...அன்னைக்கு நான் கேட்டதுக்கு சரியாவே பதில் சொல்லலையே ..?"

"எதைப் பத்தி நீ கேட்டு நான் பதில் சொல்லாம இருந்தேன்."

"உங்க கல்யாணம் பத்தி"

சித்தியின் முகம் வாடிப் போனது.

"சித்தி யாரையாவது காதலிச்சீங்களா?""

"இல்லை நிலா அப்படியெல்லாம் எதுவும் கிடையாது..அப்படி இருந்திருந்தா அன்னைக்கே உன் கிட்ட சொல்லியிருப்பேனே "

"இன்னொரு கேள்வி கேட்கலாமா சித்தி "

"என்ன? நான் ஏன் இந்த கோட்டை வீட்டு வாரிசா பொறுப்பு ஏத்துக்க ஆசைப்படலைன்னுதான் கேட்கப் போறே?"

"சித்தி நீங்க புத்திசாலிதான்..அதுல சந்தேகம் இல்ல.."

"எனக்கு அந்த ஆசை இல்லாம இல்ல..ஏனோ பெரிய அத்தை அதை விரும்பலை"

சித்தி சாதாரணமாக சொன்னாலும் எனக்கு சித்திக்கு ஆயுசு குறைவு என்பதால் தான் அத்தை அவள் வாரிசு ஆவதை தடுத்து இருப்பாளோ என்கிற எண்ணம்

எழுந்தது.என் எண்ணத்தினை உறுதி செய்யும் வண்ணம் சித்தி"எனக்கு ஆயுசு கம்மின்னு பெரிய அத்தைக்கு தெரியும் போல " என்றாள்.

கொஞ்ச நேரம் மௌனமாய் இருந்த சித்தி "நிலா நான் என்னோட அறைக்குப் போறேன்"என்று கிளம்பி விட்டாள்.

நான் அப்பொழுதே ஒரு முடிவு எடுத்து இருந்தேன்.

பெரிய அத்தையின் அறைக்கு மீண்டும் இரவில் செல்வது என்று.

இரவு-

கோட்டை வீடு அடங்கும் வரை காத்திருந்தேன்.

நிசப்தம்.

இரவே செத்து விட்டது போல் ஒரு அமைதி!

மெல்ல என் அறையை விட்டு வெளியில் வந்தேன்.

என் கண்கள் இருட்டில் விழித்துக் கொண்டன.

மெல்ல நடந்தேன்.

நான் நடந்தேனா என்பது எனக்கே தெரியாதது போல் மெல்ல நடந்து படியிறங்கினேன்.

பல்லியின் சப்தம் கூட கேட்காத கோட்டை வீட்டு இரவின் நிசப்தம்.

அத்தையின் அறையை நெருங்கும் போது மெல்லியப் பேச்சுக் குரல்?

எங்கிருந்து வருகிறது ?

உன்னிப்பாய் கேட்க அத்தையின் அறையில் இருந்து தான் வந்து கொண்டிருந்தது.

அறையைத் தாண்டி நின்று கொண்டேன்.

சுவரோரமாய் காதுகளைப் பதிக்க அது பேச்சுக் குரல் இல்லை.,வாக்குவாதம் என்பது புரிந்தது.

ஒரு குரல் வயதின் தளர்வில் நொறுங்கித் தெறிக்கும் குரல்.இன்னொன்று சித்தியுடையது.

நான் அதிர்ந்தேன்.

பெரிய அத்தையை எதிர்த்து யாரும் மூச்சுக் கூட மாட்டார்கள் கோட்டை வீட்டில்.

ஆனால் இங்கு சித்தியின் குரலே அதிகாரமாய் இருந்தது.

பேச்சு நிற்க-

நான் இருட்டில் சுவரோரம் பதுங்கினேன்.

மெல்ல கதவு திறக்க-

இருட்டில் வெளி வந்தது சித்தியாய் தான் இருக்கும்.

வேகமாய் வராண்டாவில் இருட்டுக்கு சினேகிதி மாதிரி நடந்து போய் கொண்டிருந்தாள்.

பெரிய அத்தை இன்னும் உறங்கவில்லை.

இப்பொழுது போனால் எந்த வேலைக்கும் ஆவாது.

மெல்ல பதுக்க நடந்து என் அறைக்குத் திரும்பினேன்.

மறு நாள் -

காலை அனைத்து குழப்பங்களையும் மீறி உற்சாகம் என்னைப் பற்றிக் கொண்டது.

ரமேஷை வரவேற்க நான் மாமாவுடன் காரில் கிளம்பினேன்.

மாமா வழக்கத்தை விட மிக அமைதியாக காரினை ஒட்டிக் கொண்டிருந்தார்.

"என்ன மாமா என்ன ஆச்சு...ரொம்ப அமைதியா இருக்கீங்க? ஏதாவது புதியப் பிரச்சனையா ?"

"ஆமாம் நிலா..உன்னோட சித்திதான் கிளப்பியிருக்கா?"

"என்ன சொல்றீங்க?"

"எனக்கே அதிர்ச்சியா இருக்கு நிலா..சித்தி அதான் என் தங்கை ..அவளுக்கும் வாரிசாக உரிமை இருக்குன்னு பேச ஆரம்பிச்சுட்டா"

எனக்கு அதிர்ச்சியாகத்தான் இருந்தது.

சித்தி என்னிடம் பேசும் போதெல்லாம் தனக்கு அப்படி ஒரு எண்ணம் இருப்பதாய் சொல்லவேயில்லையே?

"எனக்கு பயம் எல்லாம்..உன்னை வாரிசா கொண்டு வரப் போற நேரத்துல அவளுக்கு எதும் ஆகிட கூடாதுன்னு தான் "

மாமா அப்படி சொன்னது எனக்குள் திகிலை ஏற்படுத்தாமல் இல்லை.

"என்ன மாமா சொல்றீங்க..?'"

"அவ ஆயுசு அற்பமா முடிஞ்சுடக் கூடாதுன்னு நினைக்கறேன்..அவ்வளவுதான் "

மாமா சாதாரணமாய் சொல்லி விட்டு நிதானமாய் சொல்லி விட்டு காரை வேகம் எடுத்தார்.

"மாமா..."

"ம்"

"சித்தி பாவம் ..சில விஷயங்கள்ல ரொம்ப வெகுளி"

"அதுக்கு என்ன பண்ண முடியம்? அவ வெகுளின்னு சொல்றதை என்னால ஏத்துக்க முடியாது..சில நேரங்கள்ல உன்னோட கோபக்கார அத்தை மாதிரிதான் நடந்துக்குவா..அவ விதி "

அதன் பின் ஸ்டேஷன் வரும் வரை ஒன்றும் பேசவில்லை.

ஸ்டேஷன் மாஸ்டர் வழக்கம் போல் என்னை பிரேமை விலகாமல் பார்த்து கொண்டேயிருந்தார்.

"அரை மணி நேரம் லேட் "என்றார்.

"இன்னைக்கு யாரு வரா?"

மாமா சிரித்தார்.

"எங்க வீட்டு புது மாப்பிள்ளை ..நிலாவோட வருங்கால கணவர் வரார்.."

"அப்படியா.. ரொம்ப சந்தோஷம்..நிலா மாதிரியே ஒரு அழகான ஒரு பெண் குழந்தை கோட்டை வீட்டுக்கு கிடைச்சிடும்.."

"சரிதான்..இன்னும் கல்யாணமே முடியலை..அதுக்குள்ளே நீங்க குழந்தை வரைக்கும் போயிட்டீங்களா?"

"எல்லாம் நடக்கும்தானே"என்றார் ஸ்டேஷன் மாஸ்டர் கொஞ்சம் அபத்தமாய் சிரித்தபடியே.

நான் பேச்சை மாற்ற "இன்னைக்கு காலையில என்ன சாப்பிட்டீங்க?"என்று கேட்டேன்.

"வழக்கம் போல தோசைதான்..என்னோட இடத்துல எல்லாமே இருக்கு இல்ல ...ஒரு தடவை மாவு அரைச்சு வச்சுகிட்டேன்னா அது ப்ரிட்ஜுல ஒரு வாரத்துக்கு கிடக்கும்"

மாமா "ரயில் லேட் ஆனா டீ போட்டுத்தர மாட்டீங்க..?"என்று கேட்க-

"அதுக்கு என்ன ரயில் லேட் வரணும்ன்னு இல்ல..இப்பவே பிளாஸ்க்ல்ல இருக்கு.."என்றவர் அவர் மாஸ்டர் அறைக்கு ஓடாத குறையாக நடந்தார்.

வந்தவர் கையில் பிளாஸ்க் மூன்று எவர்சில்வர் டம்ப்ளர்கள்.

கொடியை கஷ்கத்தில் இறுக்கிப் பிடித்து இருந்தார்.

டீயை எங்கள் இருவருக்கும் ஊற்றிக் கொடுத்து விட்டு தானும் ஊற்றிக் கொண்டார்.

நான் ரசித்துக் குடித்தேன்.

"ரொம்ப நல்லா இருக்கு ..இஞ்சியெல்லாம் போட்டு இருக்கீங்க?"

"எல்லாம் விருது நகர் ஸ்டேஷன் மாஸ்டர் உபயம்..வாராவாரம் காய்கறி வாங்கி

அனுப்புவார்..இஞ்சி கட்டாயம் இருக்கும்..நான் நல்லா சமைப்பேன்.."ஸ்டேஷன் மாஸ்டர் தன் சுயத் தம்பட்டம் ஆரம்பித்த வேளையில் அறையின் உள்ளே குண்டு கிளிக் என்று சப்தம் வந்தது.

"ரயில் வருது.."உள்ளே வேகமாய் ஓடியவர் வேகமாய் திரும்பி வந்தார்.

சிக்னல் நின்றது.

தூரத்தில் கைக் காட்டி மாறியது.

ரயில் புள்ளியாய் உள்ளே நுழைந்து கொண்டிருந்தது.

ஸ்டேஷன் மாஸ்டர் கை உயர்ந்தது.

பச்சை ஆடியது.

அத்தியாயம் பதினெட்டு

நான் அனிச்சையாய் ஸ்டேஷன் மாஸ்டரைப் பார்த்தேன்.

பச்சை சிகப்பாய் மாறி ஆடிக் கொண்டிருந்தது.

மெல்ல வண்டி உள்ளே நுழைந்தது.மெல்ல உறுமிக் கொண்டு தண்டவாளத்தினை திமிரோடு உரசிக் கொண்டு நிற்க ரமேஷ் பொட்டியோடு இறங்க நான் ஆவலாய்ப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

பிளாட்பாரத்தில் இறங்கிய வேகத்தில் ரமேஷ் உள்ளே படியருகில் வைத்து இருந்த இன்னொரு பெட்டியையும் எடுக்க நான் ஓடாத குறையாக பக்கத்தில் போனேன்.ஒரு பெட்டியைத் தூக்கியப் படியே உள்ளே பார்க்க வேறு யாரும் இறங்குகிறார் போல் தெரியவில்லை.

ஸ்டேஷன் மாஸ்டர் விசில் அடிக்க மீண்டும் ரயில் கிளம்பியது.ஸ்டேஷன் மாஸ்டர் கொடிகளை சுருட்டிய

படி எங்கள் அருகில் வந்தார்.நான் ரமேஷிடம் மாமாவை அறிமுகப் படுத்தி வைத்தேன்.

மாமா ரமேஷின் கைகளைப் பற்றி குலுக்கினார்.

"என்ன வேற யாரும் வரலையா?"

"ம்ஹும்..சொல்றேன்.."

ரமேஷ் சொன்ன விதமே அவர் வீட்டில் ஏதோ பிரச்சனை என்று சொன்னது.

"கிளம்பலாம்" மாமா சொல்லியபடியே ரமேஷின் கையில் இருந்த சூட்கேசை வாங்கி கொண்டார்.ஸ்டேஷன் மாஸ்டர் அதை பலவந்தமாக வாங்கி கொண்டார்.வழக்கம் போல கார் வரை வந்தார்.

ரமேஷ் பின்னால் ஏறிக் கொள்ள மாமா,"நிலா நீயும் பின்னாடியே ஏறிக்க..அவர் கிட்ட பேச உனக்கு வசதியா இருக்கும்.."என்றார்.

கார் கிளம்பும் வரை ரமேஷைப் பார்த்தபடியே இருந்தார்.

கார் ஸ்டேஷன் விட்டு ரோடில் இறங்கியதும் நான் கேட்டேன் என் பக்கத்தில் உட்கார்ந்து இருந்த ரமேஷை கேட்டேன்.

"என்ன ஆச்சி ரமேஷ்..ஏன் உங்க அம்மா வரலையா...?"

"நிலா நீ என்னதான கல்யாணம் பண்ணிக்க விரும்பறே..எங்கம்மாவை இல்லையே?"

ரமேஷின் குரலில் கோபம் இல்லை.அது வருத்தத்துடன் தான் வந்து விழுந்தது.

"சாரிப்பா..எல்லாரும் சேர்ந்து வரீங்கன்னு நினைச்சேன்..இங்க பிரச்சனை பெரிசு ஆயிடுச்சு..கல்யாணத்தை உடனே முடிக்கணும்ன்னு அம்மா நினைக்கிறாங்க"

"நிலா எல்லாம் நல்லபடி நடக்கும்"

"ரமேஷ் உண்மையைச் சொல்லுங்க...அம்மா அப்பா யாரும் வரலையா..இல்ல வரவே மாட்டாங்களா?"

"வரமாட்டாங்க நிலா.."

"என்ன சொல்றீங்க..அப்ப கல்யாணம் ?"

"அவங்களுக்கு விருப்பம் இல்லை.."

"கடவுளே அடுத்த முகூர்த்ததிலேயே கல்யாணம் பண்ணமுன்னு அம்மா துடிச்சிட்டு இருக்காங்க..இப்ப இது மாதிரி சொல்றீங்களே.."

"கல்யாணத்துல அவங்களுக்குதான் விருப்பம் இல்லேன்னு சொன்னேன்..எனக்கு விருப்பம் இல்லைன்னு சொல்லலையே..உன்னோட விருப்ப படியும் ,உங்கம்மா ஆசைப்படியும் கல்யாணம் நிச்சயம் நடக்கும்.."

"இருந்தாலும் உங்கப் பக்கத்துல இருந்து யாருமே இல்லாம எப்படி கல்யாணம் "

மாமா,"நிலா அந்த கவலையை விடு ...உங்கம்மாவை சமாளிக்க வேண்டியது என் பொறுப்பு.."என்றார்.எனக்கு மாமாவின் பேச்சு எனக்கு நம்பிக்கையை ஊட்டியது.மாமா பற்றி எனக்கு நன்றாகத் தெரியும்.அவர் நினைத்ததை நிச்சயம் அம்மாவிடம் எந்த தயக்கமும் இல்லாமல் சொல்லி சம்மதிக்க வைத்து விடுவார் என்கிற உறுதியான நம்பிக்கை என்னுள் ஒளிர ஆரம்பித்தது.

ரமேஷ் கோட்டை வீட்டிற்குள் நுழைந்த போது அனைவருமே வைத்த கண்ணை எடுக்காமல் அவரைப் பார்த்தார்கள்.மாமா அவரை மாடி அறைக்கு அழைத்துக் கொண்டு சென்று விட்டு விட்டு வந்தார்.வந்த வேகத்தில் அம்மாவின் அறைக்கு சென்றார்.

சித்தி என் காதுகளில்,"நிலா உன்னோட ரமேஷ் உனக்கு ஏத்த சரியான ஜோடிதான்..நல்ல உயரம்..நல்ல கலர்"என்றாள்.எனக்கு இயல்பாய் வெட்கமாகவும் பெருமையாகவும் இருந்தது.

ரமேஷுடன் சாப்பிட வேண்டும் என்று நானும் சாப்பிடாமல் இருந்தேன்.ரமேஷ் வந்ததும் ஹாலில் இருந்த எல்லோருக்கும் சம்பிரதாயமாய் அறிமுகப்

படுத்தி விட்டு சாப்பாட்டு மேஜைக்கு அழைத்துப் போனேன்.

ஆவிப் பறக்க இட்லியும் வெங்காயச்சட்டினியும் சாம்பாரும்.ரமேஷ் ரசித்து சாப்பிடுவதை ரசித்தப் படி நான் சாப்பிட்டேன்.நாங்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதே உள்ளே வந்த மாமா,"நிலா சாப்பிட்டு முடிச்சதும் இவரை அழைச்சிட்டு வரச் சொன்னா அக்கா..நான் கிளம்பறேன்..தூத்துக் குடிக்கு " என்று சொல்லி விட்டு கிளம்பினார் மாமா.

சாப்பிட்டு முடிந்ததும் ரமேஷை அழைத்துக் கொண்டு அம்மாவின் அறைக்குப் போனேன்.அறையில் போடப் பட்டிருந்த சோபாவில் அவரை உட்காரச் சொன்ன அம்மா நேரே விஷயத்திற்கு வந்து விட்டாள்.

"தம்பி விவரமா சொன்னான்..உங்க அம்மா ,அப்பா ரெண்டு பேருக்கும் இந்த கல்யாணத்துல விருப்பம் இல்லேன்னு...உங்களுக்கு நிலாவை இது மாதிரி சூழ் நிலையில் கல்யாணம் பண்ணிக்க எந்த ஆட்சேபணையும் இல்லையே.."

ரமேஷ் முகம் எல்லாம் சிரிப்புடன்,'எனக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை..இப்பவே நீங்க தாலியை கட்டச் சொன்னா கூட நான் கட்டிடுவேன்"என்றார்.

அம்மா சிரித்துக் கொண்டே,"நிலா மேலே அவ்வளவு ஆசையா ?"என்று சிரித்துக் கொண்டே கேட்க-

ரமேஷ் தலையாட்டினார்.

"ஆமாம்..."

"இன்னொரு விஷயம்.ரொம்ப முக்கியமான விஷயம்...நிலா சொன்னாலா இல்லையான்னு எனக்கு தெரியலை.."அம்மா ஆரம்பிக்க எனக்குப் புரிந்தது.

அம்மா,"எங்க குடும்பத்துல ஒரு பழக்கம்..எங்க வீட்டுப் பொண்ணை கல்யாணம் பண்ணிக்கறவங்க..வீட்டு மாப்பிள்ளையாய் இங்கயே தங்கணும்..அவங்க எவ்வளவு பெரிய ஆளாய் இருந்தாலும்..."அம்மா நிறுத்த ரமேஷ் கொஞ்சமும்  தயங்காமல் "எனக்கு ஆட்சேபணை இல்லை..ஆனா கல்யாணம் முடிஞ்சதும் நான் நிலாவோட வெளி நாட்டுக்கு தேன் நிலவுக்கு

போய்ட்டு வரலாமான்னு நினைக்கறேன்.."என்றார்.அவருக்கு இப்படி ஒரு எண்ணம் இருப்பது எனக்கும் தெரியாது.நான் எப்படி ஆச்சர்யத்துடன் அவரைப் பார்த்தேனோ அப்படிதான் அம்மாவும் அவரைப் பார்த்தார்.

அம்மா இதை எதிர்பார்க்கவில்லைப் போல.

"அவளுக்கு கல்யாணம் பண்ணி வச்சு இந்த கோட்டை வீட்டோட பொறுப்பை ஒப்படைக்கிற விஷயத்துல மட்டும் தான் இப்ப நான் கவனமா இருக்கேன்...வேற எந்த சிந்தனையும் இல்ல.."என்றாள் அம்மா.

ரமேஷின் முகம் கொஞ்சம் மாற தொடங்கியது.

அம்மா,"நான் உங்க உணர்ச்சிகளுக்கும் உணர்வுகளுக்கும் மரியாதை கொடுக்கறேன்.. இந்த கோட்டை வீட்டுக்கு என்று சில கட்டுப் பாடுகள் இருக்கு..அதை திடிர்ன்னு மாற்ற முடியாது.."

ரமேஷ்,"உங்க  விருப்ப படி செய்யுங்க.."என்று சொல்லி விட்டு எழுந்தார்.

அப்பொழுதுதான் அந்த அலறல் சப்தம் கேட்டது கோட்டை வீட்டின் அமைதியைக் கிழித்துக் கொண்டு.

நான் திடுக்கிட்டு எழுந்தேன்.

அது சித்தியின் குரல் அல்லவா?

நான் வேகமாய் ஒடி ஹாலை கடக்க எனக்கு முன்னால் எல்லோரும் வாசல் நோக்கி ஒடிக் கொண்டிருந்தார்கள்.

நானும் ஓட பின்னால் ரமேஷும் ஒடி வந்தார்.

சரியாய் வாசலில் கோட்டை வீட்டுக்கு ஏழு அடி தள்ளி ரத்த வெள்ளத்தில் கிடந்தாள் சித்தி.

நான் பக்கத்தில் போக அவள் என்னைப் பார்த்ததும் வழிந்த ரத்த முகத்தில் லேசான பயத்துடன் ஏதோ சொல்ல முயன்றாள்.

உதடுகள் சிக்கின.கண்கள் சொருகின.அவள் உடல் லேசாய் துடித்தது.

சட்டென்று அடங்கினாள்.

எனக்கு 'திக்'கென்று இருந்தது.

மரணம்.நான் நேரே பார்க்கும் துர் மரணம்.

நான் அனிச்சையாக நிமிர்ந்துப் பார்த்தேன்.

கோட்டை வீட்டின் உச்சி எனக்குள் மெல்லிய கிலியை ஏற்படுத்தியது.

கடவுளே ரமேஷ் வந்த தினத்தில் தானா இது நடக்க வேண்டும்?

சித்தியின் உடல் என்னை நடுங்க வைத்தது.

மெல்ல என் கைகளைப் பற்றிய ரமேஷ் என்னை உள்ளே நகர்த்த முயல் நான் அவரை உதறி விட்டு நின்றேன்.

அம்மா சமையல் கார அம்மாளின் தோள் பற்றி வந்தாள்.

சித்தியின் உடலைப் பார்த்தவள்,"பைத்தியக்காரி"என்று பெரும் குரலில் சொன்னாள்.

அப்பாவைப் பார்த்தேன்.

அவரின் கண்கள் கலங்கிதான் இருந்தது.

அப்பாவின் முகத்தில் உணர்ச்சிகளை நான் பார்ப்பது இதுதான் முதல் முறை.

'நிலா உன்னோட ரமேஷ் உனக்கு ஏத்த சரியான ஜோடிதான்..நல்ல உயரம்..நல்ல கலர்' கொஞ்ச நேரம் முன்னால் சொன்னவள் இப்படி ரத்த வெள்ளத்தில் எனக்கு கண்கள் தட்டாமாலை ஆடியது.

அத்தியாயம் பத்தொன்பது

நான் கண் முழித்த போது படுக்கையில் இருந்தேன்.டாக்டரின் பெண் படுக்கைப் பக்கத்தில் நாற்காலிப் போட்டு உட்கார்ந்திருந்தாள்.கண்களைச் சுற்றிப் பார்த்த போது நான் என் அறையின் படுக்கையில் இருப்பதைப் பார்த்தேன்.

வந்தனா,"கடவுளே எங்க அவங்க உடலை எடுக்கறத்துக்கு முன்னாடி எழுந்திருக்காமலே போயிடுவீங்களோன்னு நினைச்சேன்" எனறதும் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தேன்.

"வந்தனா நான் எவ்வளவு நேரமா தூங்கறேன்..?"

"'கிட்டத்தட்ட ஆறு மணி நேரம்..மயங்கி விழுந்த உடனேயே இங்க கொண்டு வந்துட்டோம்..அப்பாதான் ஊசிப் போட்டுட்டு ..நீ பக்கத்துலயே உட்கார்ந்து பார்த்துக்கன்னு சொல்லி விட்டுட்டுப் போனார்.."

"கீழே போகலாம் வந்தனா...சித்தியை கொண்டு போகறதுக்கு முன்னால நான் பார்க்கணும்...எனக்கு ரத்த அழுத்தக் குறைவு இருக்குன்னு நினைக்கறேன்.."

"ஆமாம் அப்பாவும் கண்ணன் மாமா கிட்ட அதைதான் சொன்னாரு..." நான் வந்தனாவுடன் கீழே போகும் போது கேட்டேன்."என்ன யாரு மேல தூக்கிட்டு வந்தது..?"

"வேற யாரு அப்பா,மாமா அப்புறம் நானு..நீங்க பார்க்கத்தான் கொஞ்சம் ஒல்லியா தெரியறீங்க ஆனா நல்ல எலும்பு வெய்ட்" ஹாலில் சித்தியை கிடத்தியிருந்தார்கள்.

அம்மாவும் தன் நாற்காலியை ஹாலில் ஒரு மூலையில் போட்டு உட்கார்ந்திருந்தாள்.ஹாலில் அத்தனை பேரும் காத்திருந்தார்கள்.அத்தையின் முகத்தில் ஒரு எள்ளல் இருந்தது.

அம்மாவும் என்னைப் பார்த்து விட்டாள்.

"அதோ நிலாவும் வந்துட்டா,இனிமே யாருக்கும் காத்திருக்க வேண்டாம்.."அம்மா மாமாவைப் பார்த்து சொல்ல அவர் வெளியில் இருந்த ஐயரை உள்ளே அழைத்தார்.நான் கீழே போனதும் அப்பாவின் பக்கத்தில் நின்றேன்.

அப்பாவின் முகத்தில் அசாத்திய சோகம் இருந்தது.இதுவரை இவ்வளவு சோகமாக நான் பார்த்தது இல்லை.அப்பா சட்டையை கழட்டி விட்டு வேட்டியுடன் இருந்தார்.அவர்தான் காரியம் எல்லாம் செய்யப் போகிறார் என்பதை புரிந்து கொண்டேன்.

அம்மா மாமாவைப் பார்த்து,"கண்ணா..நிலா கிட்ட போலீஸிடம்  இருந்து வாங்கிட்டு வந்த லெட்டரை காண்பிச்சுடு.."என்றார்.அம்மா இப்பொழுதே என்னிடம் பொறுப்புகளை பகிர்ந்து கொள்வதாகவே நான் உணர்ந்தேன்.மாமா கர்ம சிரத்தையாய் என்னிடம் வந்து கடித நகலை காட்டினார்.மேலே சுவரின் மேல் உட்கார்ந்து இருந்த சித்தி பேலண்ஸ் தவறி கீழே விழுந்து இறந்ததாக இருந்தது.

உயர் அதிகாரி எங்கள் குடும்பத்தைப் பற்றி அதிகம் தெரிந்தவர்தான்.கூட அவர் அப்பாவின் பள்ளித் தோழர்.அவர் நான் மயக்கத்தில் இருந்த போது, தூத்துக் குடியில் இருந்து வந்து சித்தியைப்  பார்த்து விட்டுப் போனதாக அறிந்தேன்.

ரமேஷ் சோபாவின் ஒரு பக்கம் முடங்கியிருந்தார் என்றே சொல்ல வேண்டும்.அவ்வளவு அமைதியாக உட்கார்ந்து இருந்தார்.தான் வந்த அன்றே கோட்டை வீட்டில் ஒரு துர்மரணம் அவரை நிச்சயம் உலுக்கியிருக்க வேண்டும்.

அப்பா சட்டையில்லாமல் வேட்டி உடன் உட்கார்ந்திருந்தார்.வெளியில் மூங்கில் குருத்து ,கம்பங்களுடன் இரண்டு பேர் முடுக்கும் வேலையில் இருந்தார்கள்.ஐயர் ஒரு பக்கம் ஜெபித்த படி.அம்மா 'சீக்கிரம் ஆகட்டும் ஐயரே...எல்லாம் வந்தாச்சு...இனிமேலும் காத்திருக்க வேண்டாம்'என்றாள்.

ஐயரின் குரல் அந்த நிசப்தமான கோட்டை வீட்டின் கணீரென்று ஒலித்தது.

திடீர் என்று பெருங்குரல் காற்றைக் கிழித்துக் கொண்டு ஒலத்துடன் கூடிய அழுகை -

அத்தையின் குரல் தான் நாராசமாய் பயமுறுத்தும் வகையில் இருந்தது.

அம்மா,"நிலா போ அந்த கிழவியை அழுகையை நிறுத்தச் சொல்லு "என்றாள்.அம்மா அத்தை விழயத்தில் கடுமையாய் பேசி நான் பார்ப்பது இதுதான் முதல் முறை.

நான் விரைந்து போனேன்.அத்தையின் அறைக் கதவு திறந்து தான் இருந்தது.அத்தை கட்டிலில் சரிந்து உட்கார்ந்து இருந்தாள்.கண்களில் நீர் கொட்டிக் கொண்டிருந்தது.சித்தியை அதிகம் பிடிக்கும் என்பது அவளின் இந்த உணர்ச்சிகளிலேயே தெரிந்தது.

என்னைப் பார்த்ததும் இன்னும் பெருங்குரல் எடுத்து அழ ஆரம்பித்தாள்.அவளின் தோற்றமும் அழுகையும் எனக்கே பயத்தைத் தான் ஏற்படுத்தியது.

"சித்தியை எல்லோருக்கும் பிடிக்கும்...விடுங்க...உங்க உடம்பு ஏற்கனவே சரியாயில்லை.."ஆதரவாய் உணரட்டும் என்று அத்தையின் கைகளைப் பற்றினேன்.

படீர் என்று உதறினாள்.

"போ நிலா போயிடு,இது உனக்கு வச்ச குறி,அவ சிக்கிட்டா...நிக்காதே..போ என்னைப் பார்க்க இந்த அறைக்குள்ளே வராதே"என்றாள் நடுங்கிய குரலில்.ஆனால் அழுகையை நிறுத்தியிருந்தாள்.நான் வேகமாய் வெளியில் வந்தேன்.அத்தை சொன்னது மீண்டும் மீண்டும் மண்டைக்குள் சுற்றி சுற்றி குடைந்தது.

முன்னறைக்குத் திரும்பினேன்.

அப்பொழுதுதான் கவனித்தேன்.சித்தி போட்டிருந்தது என் சுரிதார்.எனக்குள் மெல்ல பீதி பற்றிக் கொள்ள ஆரம்பித்தது.நேற்று நான் பார்த்த பொழுது கூட அவள் வேறு உடைதானே போட்டு இருந்தாள்.அப்படியானால் பெரிய அத்தை அவள் படத்தை வரைந்து வைத்து இருந்தாளே?ஏதேதோ எண்ணங்கள்.மாமாவின் பக்கத்தில் போனேன்.மாமா அருகில் நான் வந்ததுமே நான் ஏதோ அவசரமாய் பேச வந்து இருக்கிறேன் என்று புரிந்து கொண்டவாராய் என் பக்கம் கழுத்தை சாய்த்தார்.

"மாமா சித்தி போட்டு இருக்கறது என்னோட சுரிதார்.."

மாமா ஒரு முறை திரும்பி கிடத்தியிருந்த சித்தியைப் பார்த்தார்.

"ஆமாம்..அப்படின்னா"

"மாமா இங்க ஏதோ பெரிய சதி நடந்துட்டு இருக்கு..எனக்கு கொஞ்சம் பயமா இருக்கு"

மாமா என் தோளைத் தட்டினார்.

"நிலா அப்புறம் பேசலாம் உனக்கு ஒண்ணும் ஆகாது"

சித்தியின் பாடை வெளியேறதுமே நான் அங்கு இருக்க பிடிக்காமல் என் அறைக்கு ஓடினேன்.சுடு தண்ணீர் கீஸரைப் போட்டு குளித்தேன்.நான் கிளம்பி கீழே போன போது கீழே கழுவி விடப் பட்டிருந்தது.தூத்துக்குடி பெரிய ஐயர் உட்கார்ந்து இருந்தார்.அம்மா பேசிக் கொண்டிருந்தாள்.பெரிய ஐயர் என்னைப் பார்த்ததும்,"வா நிலா என்னமா வளர்ந்துட்டே நீ..முன்னாலேயே உன்னை வந்து பார்க்கணும்ன்னு நினைச்சுண்டு இருந்தேன் நேரம் கிடைக்கலை,இது மாதிரி நேரத்துல அதை விடு அவ நேரம் முடிஞ்சப்புறம் யாரால புடிச்சு நிறுத்த முடியும்...அம்மா சொன்னா...நீதான் அடுத்த பொறுப்பை ஏத்துக்க போறேன்னு ..சந்தோஷம் ..உங்க சித்தி தனிதானே பதிமூனாம் நாள் நடை முடிஞ்சதும் என்ன வேணும்ன்னா பண்ணலாம்,வேற முகூர்த்தம் குறிச்சு கொடுத்து இருக்கேன்"என்றார் மூச்சு விடாமல்.

ஐயர் பேசிய போது தான் கவனித்தேன்.முன் அறையில் ரமேஷையும் காணோம்,மாமாவையும் காணோம்.அப்பாவைப் பார்த்தேன்.அவர் வழக்கம் போல் எந்த வித சலனமும் இல்லாமல் உட்கார்ந்து இருந்தார்.ரமேஷும் திருமணத்திற்குப் பின் இப்படித் தான் முடங்கி விடுவாரோ?என்னுள் ஏனோ அந்த எண்ணம் எழுந்தது.

அம்மாவைப் பார்த்தேன்.

அவர்,"என்ன மாப்பிள்ளையைத்தேடறயா,மாமாவை அழைச்சிட்டு தூத்துக்குடி போயிருக்கார்.ஏதோ முக்கிய தபால் அனுப்பணும்ன்னு சொன்னார்..நீ காலியில இருந்தே ஒண்ணும் சாப்பிடலை நிலா ,போய் சாப்பிடு "என்றாள்.

"எல்லோரும் சாப்பிட்டாச்சா?"

"இப்பதான் உட்கார்ந்தாங்க..அப்பாவை அழைச்சிட்டுப் போ "என்றார்.

நான் ஐயரைப் பார்த்தேன்.

"மாமா நான் வர்றேன்.."

"சரிம்மா குழந்தை"என்றார்.

நான் அப்பாவைப் பார்க்க அவர் எழுந்தார்.சாப்பாட்டு மேஜை மிகுந்த நிசப்தத்துடன் இருந்தது.யாரும் யார் முகத்தினையும் பார்க்கவில்லை.யாருடனும் பேசவும் இல்லை.நான் அப்பாவை உட்கார வைத்து விட்டு நானும் உட்கார்ந்தேன்.சாப்பிட்டு முடித்து அறைக்குத் திரும்பிய எனக்கு திடீர் என்று அந்த எண்ணம் தோன்றியது.சித்தியின் அறையினை நோக்கி என் கால்கள் அனிச்சையாக நடக்க ஆரம்பித்தன.

சித்தியின் அறைக்குள் நுழைந்தேன்.அறை அலங்கோலமாய் கிடந்தது.இது சித்தியின் அறைதானா என்கிற சந்தேகமே எனக்கு வந்து விட்டது.காரணம் சித்தி தன் அறையை எப்பொழுதும் மிக சுத்தமாக வைத்திருப்பாள்.இப்படி அவள் அறையை போட்டு வைத்து இருக்கவே மாட்டாள்.அலமாரியைப் பார்த்தேன்.எனக்கு எதும் செய்தி வைக்காமல் சித்தி போயிருக்க மாட்டாள் என்கிற எண்ணம் மட்டும் என் மனதில் மிக வலுவாக தோன்றிக் கொண்டே இருந்தது.

அலமாரியிலும் ஒரு ஒழுங்கு இல்லாமல் எல்லாம் களைந்து கிடந்தன.எனக்கு ஒன்று புரிந்தது.சித்தியின் மரணம் துர்மரணம் இல்லை.கொலை.

கோட்டை வீட்டின் மொட்டை மாடி சுவறின் மீது உட்கார்ந்து இருந்த சித்தியை யாரோ பலவந்தமாய் தள்ளி விட்டு இருக்க வேண்டும்.அந்த எண்ணமும் வலுப்பெற வலுப்பெற பயமும் பீதியும் அதிகமாகியது.

கட்டிலைப் பார்த்தேன்.கட்டிலில் மெத்தை அடியில் கையினை விட்டுப் பார்த்தேன்.எதும் தட்டுப் படவில்லை.மெத்தையைப் புரட்டிப் பார்க்க ரப்பர் பேண்ட் போட்ட பண்டல் ஒன்று.எடுத்தேன்.ரப்பர் பேண்டை உருவிப் பார்த்தேன்.எல்லாமே கடிதங்கள்.ஆணின் கையெழுத்து.சித்தியின்

வாழ்க்கையில் எந்த ஆணும் இல்லை என்று நினைத்திருந்த எனக்கு மிகப் பெரிய அதிர்ச்சி.காரிடாரில் யாரோ நடந்து வரும் சப்தம்.நான் அமைதியாக கவனிக்க அதுவும் நின்றது.அந்த கடிதப் பண்டலைத் தூக்கிக் கொண்டு நான் வெளியில் வந்தேன்.

நேரே என் அறைக்குள் நுழைந்து கதவை மூடிக் கொண்டு கட்டிலில் உட்கார்ந்து கடிதங்களை படிக்க ஆரம்பித்தேன்.

'தடதட'ன்று என் அறையின் கதவை யாரோ தட்டினார்கள்.

அத்தியாயம் இருபது

கைக்கு எட்டிய தூரத்தில் கடிதங்களை மறைத்து வைத்தேன்.எழுந்து போய் கதவைத் திறந்தேன்.வந்தனா.அவள் முகம் படபடப்பாய் இருந்தது.என்னைப் பார்த்ததும்'அக்கா'என்றவாறு அணைத்துக் கொண்டாள்.கதவை மூடித் தாளிட்டேன்.அவளை கட்டிலில் உட்கார வைத்தேன்.

"என்ன ஆச்சு வந்தனா,பயப்படமா சொல்லு"என்றேன்.

"என்னோட ரூம்ல்ல யாரோ இருக்காங்க,பயமா இருக்கு"

"பயப்படாதே வந்தனா நீ சித்தி மரணத்தை பார்த்ததுல குழம்பியிருப்ப"

"இல்ல எனக்கு நல்லா தெரியும்,நான் பயத்துல சொல்லலை,நீங்க இப்ப என்னோட அறைக்கு வந்து பாருங்க.."

"போலாம்ம,முதல்ல ரிலாக்ஸ் இரு...ரொம்ப படபடப்பா இருக்க..."

"நிலா சித்தி என்னைதான் கடைசியா பார்த்தாங்க?"என்றாள்.

"என்ன சொல்ற வந்தனா?"

"ஆமாம்,உங்களோட சுரிதாரைப் போட்டுடு என்னோட அறைக்கு வந்தாங்க,அவங்க முகம் எல்லாம் ரொம்ப சந்தோஷமா இருந்தது...எனக்கு இந்த சுரிதார் ரொம்ப அழகா இருக்கு இல்ல,நான் நிலா கிட்ட சொல்லிட்டு எனக்கே வச்சுக்கப் போறேன்னு சின்னக் குழந்தை மாதிரி சொன்னாங்க..அப்புறம் எங்க போனாங்கன்னு தெரியலை..பிணமாதான் பார்த்தேன்" கண்களில் பீதியுடன் சொன்னாள் வந்தனா.

"வந்தனா வா உன்னோட ரூமுக்குப் போய் பார்ப்போம் "

வந்தனாவை அழைத்துக் கொண்டு அவள் தங்கியிருந்த அறைக்குள் நுழைந்தேன்.

இருட்டி விட்டிருந்ததால் விளக்கைப் போட்டேன்.

'பளீர்' என்று அறையில் வெளிச்சம் .

வந்தனா தான் தங்கியிருந்த அறையை மிகவும் சுத்தமாக வைத்திருந்தாள்.

அவள் அறையின் ஜன்னல் வழியேப் பார்த்தேன்.

தூரத்தில் இருளில் கடற்கரை தெரிந்தது.

இன்னும் பூரண இருட்டு வரவில்லை.

கடலை ஒட்டி சின்னதாய் ஒரு உருவம் அசைந்தது.

வழக்கமாய் இந்த கடற்கரை ஓரம் யாருமே வர மாட்டார்கள்.அதுவே எனக்கு முதல் தடவையாய் தோன்றியது.அந்த உருவம் அசைந்தது.நான் அசையாமல் "வந்தனா விளக்கை அணை"என்றேன்.

வந்தனா விளக்கை அணைத்தாள்.

"ஒரு நிமிஷம் இரு..வந்துடறேன்.."

"ஐயோ நிலா நானும் வர்றேன்.."

லைப்ரரிக்குச் சென்று அங்கே அலமாரியில் இருந்த தொலை நோக்கியை எடுத்துக் கொண்டு வந்தனாவின் அறைக்குச் சென்றேன்.அவளும் என்னைத் தொடர்ந்து வந்தாள்.

தொலை நோக்கியை முழசாய் விரித்துப் பார்க்க கடற்கரையில் நின்று இருந்தவன் கையில் ஒரு தொலை நோக்கி!அது கோட்டை வீட்டை நோக்கித்தான் இருந்தது.நான் மிரண்டு போய் தொலை நோக்கியை கீழ் இறக்கினேன்.

இந்த நேரத்தில் யாருமே வரத் துணியாத கடற்கரையில் நின்று கொண்டு யார் கோட்டை வீட்டை நோட்டம் விடுவது.மாமா வந்த பின் சொல்ல வேண்டும்.

"வந்தனா பயப்படாதே..உனக்கு ரொம்ப பயமா இருந்தா இன்னைக்கு மட்டும் நீ என்னோட அறையில படுத்துக்கலாம்..அதுவும் அம்மா சம்மதிச்சா?"

இரவு சாப்பாட்டு நேரம் வரை வந்தனா என்னை விடாமல் கூடவே இருந்தாள்.

இரவில் கீழே சாப்பாட்டு மேஜைக்கு போன போது அங்கே ரமேஷ் மாமாவிடம் பேசிக் கொண்டிருந்தார்.

"நீங்க இரண்டு பேரும் எப்ப வந்தீங்க?"

"இப்ப தான் வந்தோம்..ரொம்ப பசி கை,கால் கழுவிட்டு நேர இங்க வந்துட்டோம்.."என்றார் மாமா.

ஒவ்வொருவராய் வர ஆரம்பித்து விட்டார்கள்.

அம்மாவின் நாற்காலியை வேலைக்கார அம்மாள் கொண்டு வந்து மாமாவின் இருக்கை அருகில் போட்டாள்.

அம்மா மெல்ல நடந்து வந்து உட்கார்ந்தாள்.

தட்டுகள் அவரவர் முன் கவிழ்த்து வைக்கப் பட்டிருந்தது.

அம்மா தன் தட்டைத் திருப்பிப் போட்டவாறு "சரியா நாலு நாள் கழிந்ததும் நிலா கையில பொறுப்பை ஒப்படைச்சிடப் போறேன்..கல்யாணத்துக்கு நான் இருக்க மாட்டேன்..நம்ம கோட்டை வீட்டு சம்பிரதாயப் படி நிலா என்னை கீழே கொண்டு போய் விட்டுட்டு என்னோட அக்காவை அழைச்சிட்டு

மேல வந்துடுவா..அவ கல்யாணத்தை முன் நின்று நடத்தி வைப்பா உயிரோட இருந்தா...அப்படி அவ இல்லைன்னா தூத்துகுடி சித்தி நடத்தட்டும் "அம்மா சொன்னதும் எனக்கு 'திக்'கென்று இருந்தது.

எல்லோரும் தட்டைத் திரும்ப வைத்து சொல்லி வைத்தாற் போல் அம்மாவை அதிர்ச்சியுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.நான் நான் கொஞ்சம் வருத்தத்துடனேயே அம்மாவை கேட்டேன்,"அம்மா என்ன சொல்றீங்க ,நீங்க இல்லாம என்னோட கல்யாணம் நீங்க இல்லாம நடக்கணுமா? எனக்கு அதுல இஷ்டம் இல்ல"

"புரியாம பேசாதே நிலா..நான் விரும்பாத விஷயம் எல்லாம் நடக்குது..என்னைப் பத்தி நீ அதிகம் யோசிக்க வேண்டாம்...இனிமே நீ யோசிக்க வேண்டியது இந்த கோட்டை வீட்டைப் பத்திதான்...நான் கல்யாணம் முடிச்சுட்டு பொறுப்பை ஒப்படைக்கலாம்ன்னுதான் இருந்தேன்..ஆனா இப்ப இதுதான்னு முடிவு பண்ணிட்டேன்.."சொன்ன அம்மா சமையல் கார அம்மாவைப் பார்த்தாள்.

"வழக்கமா என்ன செய்வீங்களோ அத்தனை பலகாரமும் இருக்கட்டும்..எதையும் நிறுத்த வேண்டாம் அவ தற்கொலையை நினைச்சிட்டு.."என்றார்,யாரும் வாயைத் திறக்கவில்லை.அம்மாவின் பேச்சினை யார்தான் மறுக்க முடியும்.?

ஆனாலும் என் கல்யாணத்திற்கு அம்மா இல்லை என்பது எனக்கு வருத்தமாய்தான் இருந்தது.எல்லார் தட்டிலும் சப்பாத்தியும் சாகும் பரிமாறப் பட்டது.அம்மா ரசித்து சாப்பிட்டாள்.அம்மாவுக்கு சாகு ரொம்ப பிடிக்கும்.கீழே போனதும் இதெல்லாம் இனி எங்குப் பார்க்கப் போகிறாள்.? வெறும் சத்து மாவு உருண்டைதானே?

அம்மா சாப்பிட்டு தன் அறைக்குள் நுழையும் முன் எல்லோரையும் பார்த்து ,"நான் இல்லேன்னு நினைச்சுட்டு நிலா கல்யாணத்துல யாரும் பிரச்சனை பண்ணலாம்ன்னு நினைச்சீங்கன்னா தொலைச்சிடுவேன்"என்று சொல்லி விட்டு நிற்காமல் தன் அறைக்குள் நுழைந்து கதவை மூடிக் கொண்டாள்.

நான் சாப்பிட்டு கை கழுவி அம்மாவின் அறைக்கருகில் போனேன்.கதவை மெல்ல தட்ட 'யாரது'என்றாள்.

"நாந்தாமா நிலா"

"உள்ளே வா கதவு திறந்து தான் இருக்கு"

கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனேன்.

"என்ன..முதல்ல கதவை மூடு"என்றாள்.

கதவை மூடினேன்.

"சொல்லு நிலா "

"வந்தனா ரொம்ப பயப்படறா..அவ ரூம்ல்ல யாரோ நடமாடராங்கன்னு பயப்படறா..இன்னைக்கு ஒரு ராத்திரி மட்டும் என் கூட படுத்துக்கலாமான்னு கேட்கறா?"

அம்மா சிரித்தாள்.

"பட்டணத்துல படிச்சப் பொண்ணு,இது மாதிரி வீடுகளை எங்கப் பார்த்து இருக்கப் போவுது..பெரிய அறை..அமைதி..இது எல்லாமே மனசுல பயத்தை உண்டு பண்றது சகஜம் தான் ..எவ்வளவு நாள் நீ உன் கூட படுக்க வைப்பே..ஒரு நாள் இரண்டு நாள் அப்புறம்..இந்த புதுப் பழக்கம் எல்லாம் வேண்டாம்"என்றாள்.

நான் அம்மாவிடம் விடைப் பெற்று வெளியில் வந்தேன்.

ரமேஷ்,வந்தனா தவிர யாரும் இல்லை.எல்லோரும் அவரவர் அறைக்குப் போய் விட்டார்கள் போல.

நான் ,"வந்தனா உன்னோட அறையில் இரு..நான் வர்றேன்"என்றேன்.

என்னையும் ரமேஷயையும் மாறி மாறிப் பார்த்த வந்தனா தயங்கியபடியேப் போனாள்.

நான் சோபாவில் உட்கார ரமேஷ் என் பக்கத்தில் உட்கார்ந்தார்.

"என்ன நிலா ..வந்ததுலேந்து எங்கிட்ட நீ சரியாவே பேசலை"என்றபடியே என் கைகளைப் பற்றினார்.

"அட சும்மா இருங்க..யாராவது வந்துடப் போறாங்க"

"ஆமாம் எல்லோரும்தான் போயிட்டாங்களே..இன்னைக்கு உன்னோட அறைக்கு வரவா?"

"ம்.உதை விழும்..போய் தலையணியைக் கட்டிப் பிடிச்சிட்டு தூங்குங்க"

"உனக்கு இரக்கமே கிடையாதா..?'

"இரக்கமா எனக்கு..ம்ஹூம் கிடையாது...நான் சாதாரண ஆளில்லை..இந்த கோட்டை வீட்டோட எஜமானி..புரியுதா?"

"ம் நல்லா புரியுது..எங்க போயிட்டு வந்தேன்னு கேட்க மாட்டியா?"

"போஸ்ட் ஆபிஸ்..என்னோட ராஜினாமாவை தபால்ல அனுப்பிட்டேன்..உங்க மாமா தூத்துகுடியில இருக்கற ஒரு ஸ்பெஷலிஸ்ட் கிட்டயிருந்து ஒரு லெட்டர் வாங்கித் தந்தார்..மெடிகல் கிரௌண்ட்ஸ்ல இப்ப நான் ஒய்வு எடுக்கணும்ன்னு சொல்லி அதையும் அட்டாச் பண்ணி அனுப்பிட்டேன்..இனிமே உங்கூட தான் என்னோட வாழ்க்கை"

ரமேஷ் சொல்ல சொல்ல எனக்கு கண்கள் கலங்கியது.

அம்மா,அப்பா சொந்தக் காரங்க எல்லாத்தையும் உதறிட்டு எனக்காக -

மெல்ல கண்கள் கலங்கியது.

"ஹேய் லூஸூ எதுக்கு இப்ப அழறே?"

"இல்ல ரமேஷ் நீங்க நினைச்சா எத்தனையோ பேர் பொண்ணு கொடுப்பாங்க..எல்லாத்தையும் விட்டுட்டு..இந்த பொட்டல் காட்டுல"

"உனக்காக நான் என்ன வேணும்ன்னாலும் செய்வேன் நிலா"

நான் ரமேஷை இழுத்து அணைத்து முத்தம் இட்டேன்.

அவரும் என்னைத் தழுவிக் கொண்டார்.

கொஞ்ச நேரம் தான்.

"நீங்க ரெண்டு பேரும் தூங்கப் போகலையா?"

அம்மாவின் குரல்.

அணைப்பிலிருந்து விலகினோம்.

திரும்பிப் பார்த்தேன்.

அம்மா முன்னறைக்கும் சமையல் அறைக்கும் நடுவில் நின்றிருந்தாள்.

"இதோ "

இருவரும் அங்கிருந்து நகர்ந்தோம்.

எனக்கு ஒரு புறம் வெட்கமாயும் அம்மா இவ்வளவு நேரம் பார்த்து கொண்டிருந்தாள் என்கிற எண்ணமும் வெளி வர முகம் சிவந்தது.

மாடிப் படியேறியது என் அறைக்கு செல்லும் முன் முத்தம் இட்டு ரமேஷ் நகர -

நான் வந்தனாவின் அறையை நோக்கி நடந்தேன்.

கதவு திறந்தே இருந்தது.

அறையின் விளக்கை எரிய விட்டு குறுக்கும் நெடுக்கும் நடந்த படி இருந்தாள்.

என்னைப் பார்த்ததும்,"நிலா அம்மா என்ன சொன்னாங்க..?" என்று கேட்டாள்.

"ம்ஹூம் இது மாதிரி புதுப் பழக்கம் எல்லாம் வேண்டாம்ன்னு சொல்லிட்டாங்க..வந்தனா நீ தப்பா நினைச்சுக்காதே..அம்மாவின் பேச்சை மீறி நான் எந்த முடிவும் எடுக்க முடியாது.."

நான் சொன்னதும் வந்தனாவின் கண்களில் ஏமாற்றம் மின்னலிட்டது.

"சாரி வந்தனா ...உனக்குப் பிடிச்ச கடவுள் பேரை மனசுக்குள்ளே சொல்லிட்டே கண்ணை மூடிக்கோ ...தன்னால தூக்கம் வந்துடும்...எதாவது பிரச்சனைன்னா நீ என்ன எப்ப வேணும்ன்னாலும் எழுப்பலாம்,குட் நைட்"என்றபடியே வெளியில் வந்தேன்.

என் அறைக்குத் திரும்பியதும் அறையின் கதவை உள் புறம் தாளிட்டேன்.

பாத்ரும் போய் விட்டு முகத்தை கழுவி விட்டு வரலாம் என்று துண்டுடன் நுழைந்தேன்.

சித்தி விட்டுப் போன கடிதங்கள் நினைவில் வர-

அதை வைத்த இடத்தில் பார்த்தேன்.

அப்படியே வைத்து விட்டு பாத்ரூமில் நுழைந்தவள் எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு முகத்தினை துவாலையால் துடைத்தபடி வெளியில் வந்தேன்.

துவாலையை நாற்காலி மேல் வீசி விட்டு கடிதங்களை கையில் எடுத்துக் கொண்டு கட்டிலில் உட்கார்ந்தேன்.

'பொட்'டென்று சொல்லி வைத்தாற் போல் மின்சாரம் நின்றது.

எங்கள் கோட்டை வீட்டில் மின்சாரம் போவது என்பது மிகவும் அறிது.

தனி ட்ரான்ஸ்பார்மர்.புயல் சின்னம் வந்து மழை , காற்று வீசினால் அணைப்பார்கள்.

இருந்தாலும் ஜெனரேட்டர் இருக்கிறது.

பத்து நிமிடங்களுக்குள் வராவிட்டால் யாராவது போட்டு விடுவார்கள்..

கொஞ்ச நேரம் அப்படியே உட்கார்ந்து இருந்தேன்.

கரெண்ட் வரவில்லை.

கடிதக் கற்றையை தலையணியடியில் வைத்து விட்டு படுத்துக் கொண்டேன்.கண்களை மூட தூக்கம் என்னைத் தழுவ ஆரம்பித்தது.

அத்தியாயம் இருபத்து ஒன்று

கதவை யாரும் சுரண்டுகிறார்களோ ?

தூக்கம் கலைய கண்களைத் திறந்தேன்.

அறையில் விளக்கு 'பளீர்' என்று எரிந்து கொண்டிருந்தது.

கரெண்ட் போன போது அப்படியே தூங்கியிருக்கிறேன்.

எழுந்தேன்.

கதவுக்கு வெளியில் யாரோ நிற்பது போல்,நடப்பது போல்,ப்ரமையா?

விளக்கை அணைத்து விட்டு மெல்ல இருட்டில் நடந்து கதவருகில் போனேன்.

கொஞ்சமும் சப்தம் ஏற்படுத்தாமல் நின்றேன்.

கதவுக்கு மறுபுறம் யாரோ மூச்சு விடும் சப்தம் துல்லியமாக கேட்டது.

ரமேஷாய் இருக்குமோ?வாய்ப்பு இல்லை.ரமேஷாய் இருந்தால் ஒன்று கதவைத் தட்டியிருப்பார் அல்லது என் பெயரைச் சொல்லியாவது கூப்பிட்டிருப்பார்.பயந்து கொண்டே இருந்தால் நடக்கப் போவது ஒன்றும் இல்லை.மெல்ல தாழ்ப்பாளை நீக்கினேன்.

வேகமாய் யாரோ அங்கிருந்து வேகமாய் நடந்து செல்வது காலடி சப்தத்தில் கேட்டது.

கதவைத் திறந்து எட்டிப் பார்த்தேன்.வெளியில் வந்து வராண்டாவைப் பார்க்க மாடிப் படியருகே அந்த உருவம் மறைந்தது.எனக்குள் பயம் எட்டிப் பார்த்தாலும் யார் அது என்று பார்த்து விட வேண்டும் என்ற உறுதியோடு வேகமாய்

போக அந்த உருவம் வேகம் எடுத்தது.நான் தடதடவென்று ஓட அது லைப்ரரியின் கதவைத் திறந்து கொண்டு

உள்ளே பாய்ந்தது.நானும் விடாமல் இருட்டாய் இருந்த லைப்ரரிக்குள் நுழைந்தேன்.

இருட்டு.

'யாரது,வெளியில் வந்து விடுங்கள்'நான் வேகமாய் குரல் கொடுக்க "என்ன நிலா என்ன ஆச்சு?"என்று மாமாவின் குரல் எனக்குப் பின் பக்கம் கேட்டது.திரும்பிப் பார்த்தேன்.படியில் மாமா ஏறி வந்து கொண்டிருந்தார்.

"யாரோ என்னோட அறைக்கு வெளியில் நின்னுட்டு இருந்தாங்க..நான் எழுந்து வந்ததும் ஓடி இங்க வந்து பூந்துட்டாங்க.."

மாமா என்னைத் தாண்டிப் போய் விளக்கைப் போட்டார்.பளீர் என்று அறையில் ஒளி வெள்ளம் பாய்ந்தது.நீண்ட புத்தக அலமாரிகள்.அறை முழுக்க வீசிய புத்தக வாசனை.மாமா என் கையைப் பிடித்து உள்ளே அழைத்துப் போனார்.வெகமாய் புத்தக அடுக்குகளைக் கடந்தார்.அத்தனை அடுக்குகளின் ஊடேயும் புகுந்து வெளியில் அழைத்து வந்தார்.

"இல்லை யாரும் இல்லை பாரு,நிலா வர வர நீ ரொம்ப கற்பனை அதிகமாயிடுச்சுன்னு நினைக்கிறேன்"

"மாமா நான் சொல்றதை நம்புங்க,நான் தொடர்ந்து வந்தது ஆணா பெண்ணான்னு எனக்கு தெரியாது,ஆனா நிச்சயம் ஒரு உருவத்தைத் தொடர்ந்து வந்தது உண்மை,மர்மமா இருக்கு,எப்படி அந்த உருவம் மாயமா போகும்..என்னோட கண் பொய் சொல்லாது மாமா"

மாமா சிரித்தார்.

"நிலா நீ சொல்றா மாதிரியே வச்சுக்கலாம்..உன்னோட அறை வாசல்ல அர்த்த ராத்திரியிலே நின்னுட்டிருந்த உருவத்தை நீ துரத்திட்டு வந்தே ,அது இந்த லைப்ரரிக்குள்ளே நுழைஞ்சதுன்னு சொன்னே இப்ப அது எங்கே ,காத்துல கரைஞ்சிடுச்சா?"

"மாமா அந்த உருவம் ஏன் நீங்களா இருக்க கூடாது,இந்த லைப்ரரியில ரகசிய வழி இருந்து நீங்க அது வழியா ஓடி

திரும்ப முன் பக்கமா 'என்ன நிலா ஆச்சுன்னு' ஏன் கேட்டுட்டு வந்திருக்க கூடாது.?"

ஒரு நிமிடம் மாமா ஆடித்தான் போனார்.

பின் சிரித்துக் கொண்டே,"சரிதான் நிலா ,இந்த கோட்டை வீட்டுல நடக்கற மர்மமான நடவடிக்கைகள்,துர் மரணங்கள் எல்லாத்துக்கும் நான் தான் காரணம்ன்னு சொல்லாம விடியே"

"ஏன் அப்படி இருக்க கூடாது..?"

"நிலா போதும் நீ ரொம்ப குழம்பி போயிருக்கே,போய் படு,காலையில பேசிக்கலாம்..இந்த லைப்ரரிக்கு நாம ரெண்டு பேருமே வந்து ஏதாவது ரகசிய அறை இருக்கான்னு பார்த்துடலாம்"என்றார்.

என் அறை வாசல் வரை வந்தவர்,"தூங்கு நிலா,உன்னோட சந்தேக மூட்டைகளையெல்லாம் ஓரமா இறக்கி வச்சிட்டு தூங்கு"என்று சொல்லி விட்டு மாமா வேகமாய் தன் அறை நோக்கி சென்று விட்டார்.

அவரது அறைக்குள் செல்வது வரை நின்று பார்த்துக் கொண்டே இருந்தேன்.அறை வாசலில் நின்றவர் அங்கிருந்தே 'குட் நைட் நிலா"என்றபடியே தன் அறைக்குள் நுழைந்தார்.அவர் உள்ளே தாழ் போடும் ஓசை துல்லியமாய் கேட்டது.

நான் அறைக்குள் நுழைந்து கதவை உள்ளே தாழிட்டு கட்டிலில் வந்து உட்கார்ந்தேன்.

சித்தி எனக்கு என்று எழுதி வைத்துப் போன கடிதங்களைப் படித்து விடலாம் என்கிற எண்ணத்தில் தலையணை அடியில் கை வைத்துப் பார்த்தேன்.இல்லை.நான் உறக்கம் என்னைத் தொட்டப் போது அங்கே வைத்த கடிதங்களை காணோம்.தலையணியைத் தூக்கிப் பார்த்தேன்.ம்ஹூம்.காணோம்.என்னைத் திசை திருப்பி விட்டு யாரோ இந்த கடிதங்களை கொண்டு போய் விட்டார்கள்.அப்படியென்றால் சித்தியின் மரணம் எதிர்பாரமல் நிகழ்ந்தது இல்லை.நிகழ்த்தப் பட்டது.சித்திக்கும் மர்மமாய் இந்த கோட்டை வீட்டில் நடமாடுபவர் பற்றி தெரிந்து தான் இருந்திருக்கிறது.அதுவே கூட சித்தியை மரணம் வரை கொண்டு சென்று இருக்கலாம்.

குழப்பத்துடன் உறக்கம் சூழ்ந்தது.

மறு நாள் காலை எழுந்ததும் கீழேப் போனேன்.

அம்மா தன் அறைக்கு அழைத்தார்.

உள்ளேப் போனேன்.

"நிலா மாமாவை அழைச்சிட்டு திரு நெல் வேலி போயிட்டு வா..உன்னோட சித்தியோட காரியத்துக்கும் நீ பொறுப்பு ஏற்கறத்துக்கும் ஜவுளி எடுக்க வேண்டியிருக்கு ,யார் யாருக்கு என்ன வாங்கணும் லிஸ்ட் போட்டு வச்சிருக்கேன்,செலக்ஷன் நீயே பண்ணிக்க டிபன் சாப்பிட்டு கிளம்பிடுங்க,தள்ளிப் போட வேண்டாம்"என்றார்.

டிபன் முடித்ததும் அறைக்குள் மீண்டும் அழைத்த அம்மா சாவிக் கொத்தைக் கொடுத்து "பீரோவைத் திற"என்றாள்.சாவிக் கொத்திலிருந்து பீரோவின் சாவியை உத்தேசித்து சொருக திறந்து கொண்டது.

"நடு லாக்கரைத் திற"என்றாள்.

திறந்தேன்.உள்ளே கட்டு கட்டாய் ஆயிரம் ரூபாய் பண்டல்கள்.

"இரண்டு லட்சம் எடுத்துக்கோ,மாமாவை கூட்டிட்டுப் போ,சாப்பாட்டு டைம்குள்ள திரும்பிடுவீங்க இல்லே"

அம்மா அப்படிக் கேட்டாள் சாப்பாடு நேரத்திற்குள் திரும்பி விட வேண்டும் என்று அர்த்தம்.

லிஸ்டை என்னிடம் கொடுத்தாள்.

படித்துப் பார்த்தேன்.அதில் சித்தி பெயரும் இருந்தது.என்னை சட்டென்று சித்தியின் நினைவு தொற்றிக் கொள்ள அம்மா,"செத்தவ பேரு லிஸ்டுல இருக்குன்னு பார்க்கறயா,முதல்ல உன்னோட பொறுப்பு ஏற்கற அன்னைக்கு அவளுக்கும் ஒரு பட்டுப் புடவை வாங்கித் தரலான்னு போட்டேன்,இப்ப இல்லைன்னு ஆயிடுச்சி,வாங்கிடு பரவாயில்லை,ஐயர் கிட்ட கொடுத்து யாராது கன்னிப் பொண்ணுக்கு வஸ்திர தானம் பண்ணிடலாம்"என்றாள்.

'சரி'என்று தலையாட்டினேன்.

அம்மா வேலைக்காரியை அழைத்து மாமாவை கூப்பிடச் சொன்னாள்.

மாமா உள்ளே வந்ததும்,"கண்ணா இவளை திருநெல்வேலி ஜவுளிக் கடலுக்கு கூட்டிட்டுப் போ,விவரம் எல்லாம் சொல்லியிருக்ககேன்"என்றாள்.

கிளம்பும் முன்னால் ரமேஷை கேட்டேன்,"நானும் மாமாவும் திருநெல்வேலி போறோம் ஜவுளி எடுக்க நீங்களும் வரீங்களா?"என்று கேட்டேன்.

"இல்ல நிலா நீங்க போயிட்டு வாங்க"என்று சொல்லி விட்டு படியில் ஏற ஆரம்பித்து விட்டார்.

ஜவுளிக் கடல் முதலாளி எங்கள் இருவரையும் பார்த்ததும் கல்லாவை விட்டு எழுந்து வாங்க வாங்க' முகமெல்லாம் பல்லாக.

அனைத்து ஜவுளிகளையும் தேர்ந்து எடுத்து முடிக்க மணி இரண்டாகி விட்டது.

முதலாளி,"ரெண்டு பேரும் என் கூட வீட்டுக்கு சாப்பிட வரலாமே "என்றார்.

"இல்ல சாப்பிட வர்றோம்ன்னு சொல்லிட்டோம்,நீங்க வேணும்ன்னா போயிட்டு வாங்க "என்றதும் அவர்,"இல்ல இல்ல உங்களை அனுப்பிட்டுப் போறேன்"என்று ஊழியர்கள் நான் தேர்வு செய்ததை பில் செக்ஷனுக்கு கொண்டு வரச் சொல்லி விட்டு தானும் கையில் கொஞ்சம் சுமந்த படி கணிப்பொறி அருகே போனார்.

நான் மாமாவிடம்,"எல்லாத்தையும் எடுத்தாச்சு,அம்மா தனியா ஒரு ஐம்பது ஜாக்கெட் பீஸ் போட்டு இருந்தாங்க,அதை விட்டுட்டேன்,பேஸ்மெண்ட் போயிட்டு வந்துடறேன்"என்று ஜாக்கெட் பீஸ்களுக்கு என்று இருந்த பேஸ்மெண்டிற்கு மறுபடியும் போனேன்.நான் நுழைவதைப் பார்த்த ஊழியர்,"மேட்சிங் பிளவுஸ் எல்லாம் அனுப்பிட்டேனே மேலே "என்றார்.

"இல்ல இது வேற ஐம்பது ஜாக்கெட் பீஸ் தனியா வேணும் ,ஒரே வெரைட்டியா கொடுங்க "என்றேன்.

"தரேம்மா'என்று அவர் சொல்லிக் கொண்டிருந்த போதே என் பார்வை செக்ஷன் உள்ளே விரிந்தது.

சித்தி ஒரு கவுண்டரில் நின்று ஏதோ செலெக்ட் செய்து கொண்டிருந்தாள்.

நான் ஒரு நிமிடம் பயத்தில் உறைந்தேன்.

"சித்தி" என்று நான் கூப்பிட அவள் திரும்பி என்னைப் பார்த்தாள்.

அவள் கண்களிலும் பீதி!

சித்தியேதான்!

என் உடல் நடுங்க ஆரம்பித்தது.

## அத்தியாயம் இருபத்தியிரண்டு

'மாமா'என்று என்னையும் அறியாமல் கத்தினேன்.கடையில் இருந்த அத்தனைப் பேரும் என்னைப் பார்த்தார்கள்.நான் வேகமாக மேலே ஓடினேன்.நான் ஓடி வருவதினைப் பார்த்த முதலாளி பதறிப் போனார்.பக்கத்தில் இருந்த மாமாவின் கையைப் பிடித்து திரும்ப வைத்தார்.மாமாவும் மிரண்டு தான் போனார்.

"என்னாச்சு நிலா"என்றபடியே என்னைப் பார்த்து ஓடிவந்தார்.நான் நின்றேன்.மூச்சு வாங்கியது.என்னால் உடனே பேச முடியவில்லை.அப்படியே நின்றேன்.மாமா என் தோள்கள் இரண்டையும் பற்றி உலுக்கினார்.

"என்ன நிலா?"

"மாமா..சித்தி,சித்தியைக் கீழேப் பார்த்தேன்?"

"என்ன உள்ர்றே நிலா,சித்தியை எப்படி நீ பார்த்திருக்க முடியும்?

எல்லோரும் என்னையும் மாமாவையும் பார்ப்பதை உணர்ந்தவராய் முதலாளி எங்கள் இருவரையும்"என்னோட அறைக்கு வாங்க"என்ற படியே தன் அறையை நோக்கி நடந்தார்.மாமா என் கையைப் பிடித்து இழுத்துப் போனார் என்றே சொல்லலாம்.அவரின் அறைக்குள் நுழைந்ததும் என்னை உட்கார வைத்தார்.கடை முதலாளி அறையின் வாசலுக்கு போய் யாரையோ கூப்பிட்டு ஏதோ சொன்னார்.

மாமா,"நிலா நீ ரொம்ப அதிர்ச்சியில இருக்கே,அவகிட்ட உனக்கு ரொம்ப ஒட்டுதல்,அதனால வேற யாரையோ அவளோட சாயல்ல பார்த்ததும் உனக்கு அவளை மாதிரி தெரிஞ்சிருக்கு,வேற ஒண்ணும் இல்ல"என்றார்.

"மாமா என் கண்கள் பொய் சொல்லாது,நான் பார்த்தது சித்தியைதான்,என்னை நம்புங்க,என்னை முட்டாளாகாதீங்க"என்று கோபத்துடன் சொன்னேன்.

ஒரு பையன் கையில் லெமனேட் எடுத்து வந்தான்.மாமா அதை வாங்கி,"நிலா முதல்ல இதை குடி"பாட்டிலை என்னிடம் கொடுத்தார்.நான் குடித்தவாறே எழுந்தேன்.

"மாமா நீங்க என் கூட வாங்க"என்று பேஸ்மெண்ட் படிகளை நோக்கி நடந்தேன்.மாமா பின்னாலேயே வந்தார்.நான் அவசரம் அவசரமாக படிகளில் இறங்கினேன்.சித்தி நின்றிருந்த இடத்தில் சித்தியைக் காணோம்.

கவுண்டரில் கேட்டேன்."அங்க ஒருத்தங்க கீரின் கலர் சுரிதார் போட்டு பார்த்துட்டு இருந்தாங்களே?'"என்று கேட்க,"கவனிக்கலைம்மா இரண்டு பேர் அப்புறம் வர்றேன்னுட்டு போனாங்க"என்றார்.நான் மாமாவின் கைகளைப் பிடித்து இழுத்துக் கொண்டு மேலே வந்தேன்."மாமா நீங்க என்னை நம்பலை,நாம அந்த அறையில் இருந்தப்ப வெளியில் போயிருக்கணும்

"என்றபடியே வெளியில் வந்தேன்.ட்ராஃபிக் அதிகமாகியிருந்தது.இரண்டு புறமும் பார்த்தேன்.மம்ஹூம்!காணவில்லை.

மாமா பலவந்தமாக என் கைகளை இழுத்துப் பிடித்து உள்ளே அழைத்துப் போனார்.முதலாளியின் அறையிலேயே என்னை உட்கார வைத்தார்.

"நிலா,ரொம்ப பைத்தியக் காரத்தனமா இருக்கு,நீ கொஞ்ச நேரம் பேசாம இரு.,போகும் போது பேசிக்கலாம்."என்றார்.

நிமிடங்கள் கரைய முதலாளி பில்லை எடுத்து வந்தார்.பணத்தினை எண்ணிக் கொடுத்தேன்.எண்ணியவர்,"சரியா இருக்கும்மா,நானே கொடுத்து விட்டுடறேன்"என்றார்.மாமா,"இல்ல கார்ல்லயே எடுத்துட்டுப் போயிடறோம்,கார்ல்ல மட்டும் வச்சா போதும்"என்றார்.

அவரிடம் விடைப்பெற்றுக் கிளம்பினோம்.கார் டவுனை விட்டு வெளியேறியதும் காத்திருந்தவர் போல் மாமா,"நிலா நீ ரொம்ப குழப்பத்துல இருக்கே,நம்ம கண் முன்னாடிதான் அவ உடம்பு கிடந்தது,காரியம் பண்ணி கொண்டு போய் எரிச்சிருக்கோம்,நீ அவளை மாதிரியே சாய்ல்ல இருக்கிற யாரையோ பார்த்துட்டு சித்தியைப் பார்த்தேன்னு பீதியைக் கிள்ப்பறே"என்றார்.

"மாமா அப்படின்னா அந்தப் பொண்ணு ஏன் என்னைப் பார்த்தது அதிர்ச்சியடையணும்,கடையை விட்டு வெளியேறனும்?"

"அவங்க தேடி வந்த பீஸ் இருந்திருக்காது,திரும்ப போயிருப்பாங்க,நிலா ஒரு விஷயம் இதைப் போய் கோட்டை வீட்டுல யார்கிட்டயும் தயவு செஞ்சு சொல்லிடாதே,உன்னைப் பைத்தியம்ன்னு

சொன்னாலும் சொல்லிடுவாங்க"என்றார்.நான் ஒரு தீர்மானம் செய்தேன்.மாமா சொல்வதும் உண்மைதான்.கோட்டை வீட்டின் பொறுப்பை ஏற்கப் போகும் இந்த நேரத்தில் இது என்னைப் பற்றிய இரண்டாவது சிந்தனையை வளர்த்து விடும் அபாயம் இருக்கிறது.ஆனாலும் என் கண்ணில் பார்த்தது வேறு பெண் இல்லை.அதுவும் சித்தியும் சாயலில் உள்ளப் பெண் இல்லை.சித்தியே தான்!

உண்மையிலேயே சித்தி இதுதான் என்றால் கோட்டை வீட்டில் இறந்தது யார்?எனக்குள் ஒரு குழப்பம்.சித்தியின் விஷயத்தில் ஏதோ மர்மம் இருப்பதாகாவே என் உள் மனசு சொன்னது.

கோட்டை வீட்டை நெருங்கும் போது சொன்னேன்,"மாமா நான் தான் குழப்பத்துல அப்படி பார்த்துட்டேன் போல இருக்கே,அம்மாகிட்ட அதைப் பத்தி ஏதும் சொல்லிடாதீங்க" -என்றேன்.

"நான் ஏன் சொல்லப் போறேன் நிலா,நீ யார் கிட்டயும் சொல்லி குழப்பமா இருந்தா சரி"என்றார்.

நான் மாமாவிடம் அப்படி கேட்டுக் கொண்டதற்க்கு காரணம் இல்லாமல் இல்லை.நான் இந்த விஷயத்தினை இத்தோடு விட்டு விட்டதாக நினைக்க வேண்டும்.அப்பொழுதுதான் நான் அடுத்து என்ன செய்யலாம் என யோசிக்க வேண்டும்.சித்திதான் என்பதில் எனக்கு மாற்றுக் கருத்து இல்லை.மற்ற சாத்தியக் கூறுகளையும் என் மனம் ஒருப் பக்கம் அலச ஆரம்பித்து விட்டது தான் உண்மை.

அம்மாவின் அறைக்கு நேரே போனோம்.வாங்கிய அத்தனை ஜவுளிகளையும் மாமாவும் நானும் எடுத்துப் போய் அம்மாவின் அறையில் வைத்தோம்.

"பில் போட்டப் பிறகு எல்லாத்தையும் சரி பார்த்தியா நிலா?'- அம்மா கேட்டதும் நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை.நான் எங்கே சரிப் பார்த்தேன்.அங்கு சித்தியினை பார்த்த களேபரத்தில் அல்லவா இருந்தேன்?

மாமாதான் 'சட்'டென்று பதில் சொன்னார்.

"ம்,ஒரு தடவைக்கு இரண்டு தடவை பார்த்தாச்சு"என்றார்.

அம்மா என்னைப் பார்த்தாள்."என்ன நிலா நீ பதில் சொல்லாம இருக்கியா,போன இடத்துல யாரையாவது பார்த்து பயந்துட்டியா,முகமெல்லாம் ஒரு மாதிர் வெளிறினா மாதிரி இருக்கு?"

எனக்கு அம்மா அப்படிக் கேட்டதும் நான் அதிர்ந்துதான் போனேன்.அம்மா இந்த அறைக்குள் உட்கார்ந்தே அத்தைனையும் படம் பிடித்தாற்ப் போல் சொல்வார் என்று எல்லோரும் சொல்வார்கள்.இப்போது அது என் விஷயத்தில் நடப்பதால் எனக்கு ஆச்சர்யம்தான்.இருந்தாலும் எந்த சலனமும் காட்டாமல் "அதெல்லாம் இல்லம்மா"என்றேன்.

அம்மா சிரித்தாள்.

"நிலா சரிதான்,நான் என்னமோ நீ கோட்டை வீட்டு உச்சியில இறந்த அவ அங்க எங்காவது நின்னான்னு சொல்வியோன்னு நினைச்சிட்டேன்"என்று மீண்டும் சிரித்தாள்.

மாமா சிரித்துக் கொண்டே,"ஆமாம் சித்தியை மாதிரி ஒரு பெண்ணைப் பார்த்தோம்,திருநெல்வேலி காபி கிளப் கூட்டிடுப் போய் காபி வாங்கி கொடுத்து அனுப்பினோம்"என்றார்.

எனக்கு மாமா மீது கோபமாக வந்தது.என்னிடம் எதையும் சொல்லாதே என்றவர் இப்படி பேசுகிறாரே என்று.

"சரி சரி கண்ணா போதும் போய் சாப்பிடுங்க ரெண்டு பேரும்,எனக்கு கொஞ்ச நேரம் கண்ணை அசரணும்"என்றால் அம்மா.

நானும் மாமாவும் சாப்பாட்டு மேஜைக்கு வந்ததுமே மெல்லியக் குரலில் சொன்னேன்.

"மாமா என்னை நீங்க என்னை சும்மா இருக்க சொல்லிட்டு இதுதான் சாக்குன்னு அம்மா கூட சேர்ந்து என்னைய ரொம்பதான் ஒட்டறீங்க?"

"அட லூஸு எங்கக்கா அப்படி கேட்டதும் நான் அப்படி செய்யலைன்னா நீ பதட்டத்துலயோ,பயத்துலயோ ஏதாவது உளறியிருப்பே அதுதான் அப்படி பேசி சமாளிச்சேன்"என்றார்.அதுவும் சரியாகத்தான் பட்டது எனக்கு.

சாப்பிட்டதும் மேலே என் அறைக்குள் போனேன்.

அறையின் தாழ்ப்பாளில் அந்த காகிதச் சுருட்டல் இருந்தது.அதை எடுத்துப் பிரித்தேன்.

'மேலே லைப்ரரியில் இருக்கிறேன்,சாப்பிட்டதும் வரவும் - ரமேஷ்'

மேலே லைப்ரரிக்கு செல்ல ரமேஷ் அங்கு உட்கார்ந்து ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தார்.பக்கத்தில் நாற்காலி ஒன்றை தள்ளிப் போட்டு உட்கார்ந்தேன்.என் பக்கம் திரும்பியவர்,"என்னம்மா கோட்டை வீட்டு ராணி,போறப் போக்கைப் பார்த்தா கல்யாணத்துக்கு அப்புறம் கூட உன் கிட்ட எல்லாத்துக்கும் அப்பாயிண்ட்மெண்ட் ,பர்மிஷன் எல்லாம் கேட்கணும் போல இருக்கே?"என்றார் கண்ணைச் சிமிட்டிக் கொண்டே.

மெல்ல என் இடுப்பில் கையை சுற்றிப் போட்டு வளைத்தார்."சும்மா இரு ரமேஷ் ,யாரவது வந்துடப் போறாங்க இது என்ன மூடின அறையா?"

"சரிதான் அப்ப இராத்திரி ரூம் கதவைத் திறந்து வை"

"ம் அடி தான் விழும்,ரொம்ப கனவு காணாதே,ஆமாம் இது என்ன புத்தகம்?"கேட்டுக் கொண்டே அப்படியே ரமேஷின் கையில் இருந்த புத்தகத்தின் அட்டையைப் பார்த்தேன்.

'லாஸ்ட் டெம்பிள்ஸ் ஆஃப் செளத் இந்தியா - தைமஸ் மெக்காலே'

"ஹேய் இது என்ன புது ஆராய்ச்சி தென் இந்தியாவின் தொலைந்து போன கோவில்கள் பற்றி?"

"நிலா உனக்கு தெரியாது,நம்பளோட தமிழ் நாட்டுல எத்தனையோ கோவில்ங்க கம்போடியாவோட அங்கார் டெம்பிள் மாதிரி மறைஞ்சு கிடக்கு,சிலது

புதைஞ்சு கிடக்கு,இந்த ஆசிரியர் கிட்டத்தட்ட இருபது வருடம் தமிழ் நாட்டுல பல இடங்கள் சுத்தி இந்த புத்தகத்தை எழுதியிருக்கார்,படிச்சா பிரமிப்பா இருக்கு,சும்மா ரேக்குல குடைஞ்சப்ப இந்தப் புத்தகம் கண்ணுல பட்டது"

"ஆமாம் பாதி கற்பனையா இருக்கும்"

"அப்படி கிடையாது நிலா பல விதமான ஆதாரங்களை நம் முன்னாடி இந்த ஆசிரியர் வைக்கறார்,அது சரி இந்த மாதிரிப் புத்தகம் எல்லாம் யார் படிக்கறாங்க?"

"எல்லாம் கொள்ளு தாத்தா,தாத்தா காலத்துல இருந்து சேர்ந்த புத்தகங்கள்,அப்பா காலத்துல கொஞ்சம் சேர்ந்தது,மாமாவும் எங்க குடும்ப டாக்டரும் நிறையா படிப்பாங்க,வேலை எதுவும் இல்லைன்னா இங்கதான் இருப்பாங்க"

"'ஓ!இந்தப் புத்தகம் வெளி வந்தே எண்பது வருஷம் ஆகுது,புத்தகம் பார்த்தாலே தெரியுது எவ்வளவு பழசுன்னு"

லைப்ரரியின் நுழைவில் யாரோ வரும் காலடி ஓசை!

வந்தனா உள்ளே நுழைந்தாள்.

எங்களைப் பார்த்ததும் இரண்டை பின்னாள் போனாள்.

"சாரி உங்க தனிமையை கெடுத்துட்டேனோ?"

"அதெல்லா இல்ல நீ வரலாம்.சும்மா தான் பேசிட்டு இருக்கோம்"

"ரொம்ப போர் அடிச்சது, நான் கையில் கொண்டு வந்த புத்தகங்களை எல்லாம் படிச்சிட்டேன்,இங்க ஏதாவது தேடிப் படிக்கலாம்ன்னு வந்தேன்"என்றாள்.

"வந்தனா நேத்து நிம்மதியா தூங்கினியா?"என்று கேட்டேன்.

"ம்,தூங்கினேன்"என்றவள் புத்தக அடுக்கை நோக்கிப் போனாள்.

ரமேஷ்,"நிலா காலேஜை பாதியில நிறுத்தப் போறே,டி.சி .வாங்க வேண்டாமா,அதுக்கு நீ நேரத்தான போய் ஆகணும்?"

"ஆமாம்,அம்மா கிட்டத்தான் பேசணும் என்ன சொல்வாங்கண்ணு தெரியலை?"

"எனக்கு ஒரு யோசனை இருக்கு நிலா,நான் என்னோட பி.எஃப் விஷயங்களுக்குப் போய் ஆகணும்,தேன் நிலவுக்கு வெளி நாடு போகும் போது முதல்ல போய் என்னோட வேலை என்னோட வேலை எல்லாத்தையும் முடிச்சுட்டு அப்படியே போவோம்,ஆமாம் உன் கிட்ட பாஸ்போர்ட் இருக்கு இல்ல?"

"இரண்டு வருஷம் முன்னாடிதான் எடுத்தேன்,முதல்ல விருப்பம் இல்லை,நான் தான் கெஞ்சி கூத்தாடி,பிடிவாதம் பிடிச்சு எடுத்தேன்,அதுவும் இப்ப அம்மாகிட்டத்தான் இருக்கு"

வந்தனா இரண்டு மூன்று புத்தகங்களை எடுத்துக் கொண்டு வந்தாள்.

"அக்கா நான் என் ரூமுக்குப் போறேன்,நீங்க ஃப்ரீயா இருக்கும் போது வாங்க"என்று சொல்லி விட்டுப் போனாள்.

அவள் போன் கொஞ்ச நேரத்தில் மாமா வேகமாய் உள்ளே நுழைந்தார்.

எங்கள் இருவரையும் அவர் எதிர்பார்க்கவில்லை என்றே அவர் முகம் பார்த்ததும் தோன்றியது.

"நிலா ஒரு புத்தகம் எடுத்துட்டுப் போகணும்ன்னு வந்தேன்"என்று சொல்லி விட்டு வேகமாய் புத்தக அலமாரிகளை நோக்கிப் போனார்.

நான் ரமேஷுடன் வெளியேறினேன்.

ரமேஷ் என் அறை வாசல் வரை வந்து விட்டு பின் தன் அறைக்குள் போனார்.

அத்தியாயம் இருபத்து மூன்று

அறைக்குள் நுழைந்த எனக்கு முதலில் அந்த எண்ணம் உதித்தது.அதற்கான காரணம் தெரியவில்லை.அதுவும் ரமேஷிடம் பேசி விட்டு வந்ததில் இருந்து அந்த எண்ணம் தோன்றியது.தோன்றிக் கொண்டே இருந்தது.பாஸ்போர்ட்டை அம்மாவிடம் இருந்து வாங்க வேண்டும்.கேட்டால் நிச்சயம் தர

மாட்டாள்.எண்ண சொல்லிக் கேட்பது.நம்புகிறார் போல் ஏதாவது ஒரு பொய் சொல்ல வேண்டும்.யோசித்து யோசித்து மண்டைக் குத்த ஆரம்பித்தது.

இந்த கோட்டை வீட்டில் நிலவறை  தாண்டி ஏதோ ஒரு பெரிய விஷயம் இருப்பதாகவே எனக்குத்தோன்றியது.அதைப் பற்றி அம்மாவிடம் கேட்க முடியாது.அதைப் பற்றிக் கேட்டால்,"நீதான் அடுத்து பொறுப்பை ஏத்துக்கப் போறே,உனக்கே எல்லாம் தெரிய வரும்"என்றுதான் நிச்சயம் சொல்வாள்.வேறு எந்தப் பதிலையும் அம்மாவிடம் இருந்து எதிர்பார்க்க முடியாது.அம்மா அதிகம் படிக்கவில்லைதான்.ஆனால் அவளின் செயல் திறன் நிலாவைப் பல தடவை வியக்க வைத்துள்ளது.உட்கார்ந்த இடத்தில் இருந்து கோட்டை வீட்டின் சொத்துப் பரிபாலணங்களில் ஆரம்பித்து அனைத்தையும் நிர்வகிப்பது என்பது சாதாரண விஷயம் இல்லை.ஆனால் அதைப் பற்றி கொஞ்சமும் அலட்டிக் கொள்ளாமல் அம்மா இருப்பதுதான் பெரிய விஷயம்.அம்மாவின் பார்வைக்கு எப்படி எல்லோரும் கட்டுப் படுகிறார்கள்.எழுதாத ஒப்பந்தம் ஒன்று எல்லோரையும் பிணைத்திருப்பதாகவே எனக்குத் தோன்றியது.ஆனால் நடக்கும் மர்ம நிகழ்வுகள் என்னுள் பயத்தை அதிகரித்துக் கொண்டுதான் இருந்தது.மாமாவைத் தவிர வேறு யாரையும் நம்ப முடியாது இந்த வீட்டில்.

இருந்தாலும் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்கிற உள் உணர்வு மட்டும் அவ்வப்பொழுது எழுந்து கொண்டே இருந்தது.சித்தியைப் பார்த்த விஷயத்தை ரமேஷிடம் சொல்லிப் பார்க்கலாமே,அவரிடமிருந்து என்ன பதில் வருகின்றது என்று பார்ப்போம்.வெளியில் இருந்து அவர் யோசிக்கும் போது நல்ல தீர்வு ஏற்படலாம் என்று முடிவு செய்த நான் என் அறையை விட்டு வெளியில் வந்தேன்.ரமேஷின் அறையை நோக்கி நடந்தேன்.அறையின் வாசலை அடைந்த நான் கதவினைத் தட்டலாமா என்று யோசித்த வேளையில் தான் அதை கவனித்தேன்.

அறை வெளியில் பூட்டப் பட்டிருந்தது.இப்பொழுது தானே லைப்ரரியில் இருந்து இரண்டு பேரும் வந்தோம்?என்னை விட்டு எங்கும் போகப் போவதாக சொல்லவில்லையே?கொஞ்ச நேரம் வந்தனாவுடன் பேசிக் கொண்டிருக்கலாம் என்று அவள் அறையை நோக்கி நடந்தேன்.அவள் அறை கதவு மூடப் பட்டிருந்தது.தட்டலாமா வேண்டாமா என்று யோசிக்கும் முன்பே உள்ளிருந்து வந்தனா யாருடனோ பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது.

இன்னொரு குரல் ரமேஷுடையது.அவர் எப்படி திடீர் என்று வந்தனாவின் அறைக்குள்,அதுவும் கதவை மூடி விட்டு என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள்?எனக்குள் ஆர்வம் மின்ன

ஆரம்பித்தது.பின்னாலிருந்து குரல்,"கதவு கிட்ட நின்னு என்ன யோசனை?"மாமாவின் குரல்.திரும்பினேன்.மாமாவைப் பார்த்து திரும்பிய போது கதவு திறந்தது,வந்தனாவும் ரமேஷும் வெளி வந்தார்கள்.

எங்கள் இருவரையும் அவர்கள் எதிர்பார்க்கவில்லை என்பதை அவர்கள் இருவரின் கண்களும் சொன்னாலும் எனக்குள் ஒரு சின்னப் பொறி தட்டியது.ரமேஷ் அவ்வளவு எளிதாக எந்தப் பெண்ணிடமும் பேசி விடவும் மாட்டார்,நெருங்கவும் மாட்டார்.இருவரும் உள்ளே என்னப் பேசீனீர்கள் என்று அவர்களிடமே கேட்பது அநாகரிகம்.நான் ரமேஷினைப் பார்த்தேன்.அவர் புரிந்து கொண்டார் என்றே தோன்றியது.

"நிலா வந்தனாவுக்கு ஓவியக் கல்லூரியில சேரணுமாம்,அதைப் பற்றி பேசிட்டு இருந்தோம்?"என்றார்.அதற்கா கதவை மூடிட்டு பேசணும்?அடுத்த எண்ணமும் கேள்வியும் என்னுள் எழாமல் இல்லை.மாமா என் தர்ம சங்கடத்தினை உணர்ந்தார் என்றே நினைக்கிறேன்.

"சரிதான்,வந்தனா அப்படியே ரெண்டு பேரும் கிளம்பி இப்பவே சென்னைக்குப் போயிடப் போறீங்க,அவ்வளவுதான் நிலா டென்ஷன் ஆயிடுவா?"மாமா சகஜமாக்கத்தான் இதை கூறினார்.வந்தனாவும்,ரமேஷ் சிரித்தார்கள்.ரமேஷ்,"நிலா வந்தனா பிரமாதமா படம் வரையறா,அந்தப் படங்களை பார்க்கணும்ன்னு சொன்னேன்,யாருக்கும் காண்பிக்க மாட்டேன்னு பிடிவாதம்,கதவை மூடிட்டு காண்பிப்பேன்னு சொல்லிட்டு காண்பிச்சா,அதை விமர்சனம் பண்ணிட்டு இருக்கும் போது மாமாவோட குரல் கேட்டது."என்றார்.

"பார்த்தீங்களா,நான் படங்கள் வரைஞ்சு வச்சுக்கறதை யார்கிட்டயும் சொல்ல மாட்டேனுட்டு இப்ப போட்டு உடைச்சிட்டீங்களே"என்றாள் கொஞ்சம் சீரியஸாக முகத்தினை வைத்துக் கொண்டு.மாமா,"அதெல்லாம் முடியாது,எங்களுக்கும் காண்பிச்சே ஆகணும்"என்றார்."ஆமாம் அப்படி என்னத்தான் வரைஞ்சிருக்கேன்னு பார்க்க வேண்டாமா"என்றேன் நான்.அறைக்குள் சென்றோம்.வந்தனா தங்கியிருந்த கட்டிலின் மேல் அவள் வரைந்த படங்கள் பரவலாக வைக்கப் பட்டிருந்தன.படங்களைப் பார்த்த நான் முதலில் நான் அதிர்ந்து தான் போனேன்.காரணம் இல்லாமல் இல்லை.வந்தனா வரைந்து இருந்தது எல்லாம் கோட்டை வீட்டின் படங்கள்.கோட்டை வீட்டை வெளித் தோற்றங்களையும் உள் தோற்றங்களையும் பல் வேறு கோணங்களில் மிகத் துல்லியமாக வரைந்து இருந்தாள்.ஒரு கைத் தேர்ந்த ஓவியரால் தான் இப்படி வரைய முடியும்.ஒரு படம் இரண்டு படம் என்றால் பரவாயில்லை.இத்தனை

கோட்டை வீட்டு படங்களை வரைய வேண்டிய அவசியம் என்ன?மனதின் உள் எழுந்த சந்தேகத்தை வெளிப் படுத்தாமல்,"இனிமே நீ கத்துக்க என்ன இருக்கு வந்தனா,பிரமாதமா வரைஞ்சிருக்கே"என்றேன்.மாமாவும்,"ஆமாம் வந்தனா,நீ ரொம்ப பெரிய ஓவியரா வருவே"என்றார்.

"கோட்டை வீட்டு மேலே அவ்வளவு அப்சஷனா உனக்கு"என்று ரமேஷ் கேட்டார்."அப்படியெல்லாம் இல்லை என்னமோ வரையணும்ன்னு தோணிச்சு வரைஞ்சேன்"என்றாள் வந்தனா.அவள் அப்படி சொன்னதே வலியச் சொன்னதாகதான் இருந்தது.

மாமா,"அத்தை உன்னோட படங்களைப் பார்த்தா ஆச்சர்யப் பட்டு போவா?"என்றார்.மாமா அப்படி சொன்னதை வந்தனா ரசிக்கவில்லை என்பதை அவள் முகம் போன போக்கே சொன்னது.கோட்டை வீட்டின் அழகிலோ,பிரமிப்பிலோ இந்தப் படங்களை வந்தனா வரைந்து இருக்க மாட்டாள் என்பதில் நான் உறுதியாக இருந்தேன்.

என் முகம் நானே எதிர்பாராமல் கொஞ்சம் கடுமையானது."வந்தனா கோட்டை வீடுங்கறது ஒரு மியூசியம் இல்லை,தனீயார் சொத்து,அதை இப்படி ஒரு இடம் விடமா ஓவியமா வரையறதோ,இல்லை கேமிராக்குள்ள அடக்கறதோ கூடாது,ரெண்டாவது ஒண்ணு ரெண்டு படம்ன்னா கூட இப்ப பொறுப்புல இருக்கற அம்மாகிட்ட அனுமதி வாங்காம வரையறது தவறு,என்னை மன்னிச்சுடு வந்தனா"என்ற நான் மாமா பக்கம் திரும்பி,"மாமா இந்த கோட்டை வீட்டோட அடுத்த வாரிசு நிலா சொல்றேன்,இந்தப் அடங்களையெல்லாம் எடுத்து கொண்டு போய் அம்மாகிட்ட சேர்த்துடுங்க,அவங்க என்னப் பண்றாங்களோ பண்ணட்டும்"என்றேன்.எனது கண்டிப்பான குரலில் சற்றே மிரண்டுப் போன மாமா அவசரம் அவசரமாக படங்களைச் சுருட்டி எடுத்துக் கொண்டே,"இதோ இப்பவே கொண்டு போய் கொடுத்துடறேன்"என்றார்."அது மட்டுமில்ல"வந்தனாப் பக்கம் திரும்பினேன்,"வந்தனா உன்னோட கைப் பேசியிலயோ அல்லது கேமிராவிலோயோ நீ இந்த கோட்டை வீட்டைப் படம் பிடிச்சு வச்சிருக்கியா,அப்படி இருந்தா இப்ப எங்க எங்க கண் முன்னாடியே அதையெல்லாம் அழிச்சிடு"என்றேன்.வந்தனா என்னிடமிருந்து இந்த மாதிரி அதிரடிகளை எதிர்பார்க்கவில்லை போல் இருக்கிறது."சாரிக்கா அப்படி ஏதும் இல்லை,ஏதோ ஒரு ஆர்வத்துல வரைஞ்சேன்"என்றாள் தயங்கி தயங்கி.

மாமாவும் என்னைப் பிரமிப்புடன் பார்த்தவாறே அனைத்து பட சுருட்டல்களையும் எடுத்துக் கொண்டு வேகமாய் படி இறங்கினார்.நான் எனது அறையை நோக்கி நகர ரமேஷ் என்

பின்னாலேயே வந்தார்.நான் திரும்பி ,"நான் கொஞ்சம் ஓய்வு எடுக்கப் போறேன்,உங்களை அப்புறம் பார்க்கறேன்"என்றேன்.

"ஓ.கே.நான் கொஞ்ச நேரம் தூங்கப் போறேன்"என்ற ரமேஷ் தன் அறையை நோக்கி நடந்தார்.வந்தனா தன் அறைக்குள் புகுந்து கதவை மூடிக் கொண்டாள்.நான் அறைக்குள் நுழைந்து கதவை மூடிக் கொண்டேன்.என்னையும் அறியாமல் கண்ணாடி முன் நின்றேன்.என் முகம் அம்மாவின் முகம் போல் ஆகிக் கொண்டிருப்பதை என்னால் உணர முடிந்தது.நான் மிகவும் சாதுவானவள் என்றுதான் கொஞ்ச நேரம் முன்பு வரை நினைத்து இருந்தேன்.என் நினைப்பு பொய் என்பதை கொஞ்ச நேரம் முன்னால் நான் வந்தனாவிடம் கடுமையாக நடந்து கொண்ட விதம் சொன்னது.பொறுப்பை ஏற்கப் போகிறோம் என்றதுமே எனக்குள் இருக்கும் இன்னொரு நிலா விழித்துக் கொண்டாளோ?

என் முகத்தில் ஒருவித முதிர்ச்சி தெரிந்தது.கண்ணாடியில் என் முகத்தையே பார்த்தபடி நின்றிருந்த என்னை என் முதுகுக்குப் பின்னால் எட்டிப் பார்த்த முகம் கலவரம் கொள்ள வைத்தது.அது சித்தியின் முகம்.அதிர்ச்சியுடன் திரும்பினேன்.யாரும் இல்லை.சித்தியினைப் பார்த்த தாக்கம் என்னிலிருந்து இன்னமும் விடுபடவில்லை என்பதுதான் உண்மை.தைரியசாலியான நிலாவுக்குள் ஒரு பயந்தாங்கொள்ளி நிலாவும் இருக்கிறாளோ?

ஐந்து நிமிடம் கூட ஆகியிருக்காது.என் கதவை தட்டும் ஓசை."இதோ வந்துட்டேன்"என்றபடியே எழுந்து போய் கதவைத் திறந்தேன்.மாமாவும்,டாக்டரும் வெளியில் நின்று கொண்டிருந்தார்கள்.

"உள்ளே வாங்க"என்று நகர்ந்து வழியை விட்டேன்."நிலா அம்மா இந்த விஷயத்தை ரொம்ப சீரியஸா எடுத்துட்டாங்க,வந்தனாவை உடனே அனுப்பிடுங்கன்னு சொன்னாங்க,டாக்டர் இனிமே இது மாதிரி ஏதும் ஆகாதுன்னும் அவளுக்கு தன்னை விட்டா இப்போ யாரும் இல்லைன்னும் கேட்டுக்கிட்டதால டாக்டரை உன் கிட்ட பேச சொல்லி அனுப்பிட்டாங்க"என்றார்.நான் டாக்டரின் முகத்தைப் பார்த்தேன்.அவரின் முகம் கொஞ்சம் வாடித்தான் போயிருந்தது.எத்தனை வருடம் இந்த கோட்டை வீட்டோடு ஐக்கியமானவர்,அம்மா எந்த கடுமையான முடிவினையும் எடுக்க விரும்பாமல் விஷயத்தை என்னிடமே திருப்பி விட்டதாகப் புரிந்தது.

நான் டாக்டரைப் பார்த்தேன்.

அவர் பாவம்.நான் என்ன சொல்லப் போகிறேன் என்கிற தோரணையிலேயே தன் முகத்தை வைத்துக்

கொண்டிருந்தார்."டாக்டர் உங்களுக்கே தெரியும் இந்த கோட்டை வீட்டோட சட்டத் திட்டங்கள்,வந்தனா எந்த நோக்கத்துல இப்படி முழுசா கோட்டை வீட்டை வரைஞ்சான்னு எனக்குத் தெரியாது,ரொம்ப புனிதமான பிணைப்பு இந்த கோட்டை வீட்டுல இருக்கறவங்க கிட்ட இருக்கு,அது யார் மூலமாகவும் தவறானவங்க பார்வைக்குப் போயிடக் கூடாதுன்னு நினைக்கறேன்,என்னோட நிலைமையில நீங்க இருந்தா என்ன பண்ணுவீங்க சொல்லுங்க,நீங்க என்ன சொல்றீங்களோ அதுக்கு ஏத்தா மாதிரி நான் முடிவு எடுக்கறேன்'என்று சொல்லி நிறுத்தி விட்டு டாக்டர் முகத்தைப் பார்த்தேன்.

"நிலா அவ பண்ணது தப்புதான்,அம்மா கிட்ட கேட்டுட்டு வரைஞ்சு இருக்கலாம்,தப்பு பண்ணிட்டா,அவளை வேணும்ன்னா பக்கத்துல
தூத்துக்குடியிலயோ,திருநெல்வேலியோ ஒரு லேடீஸ் ஹாஸ்டல்ல போட்டுடறேன்,சின்னப் பொண்ணு பாவம்"என்று சொல்லி நிறுத்தினார்.எனக்கு அவர் முகத்தைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது.

'பட்'டென்று சொன்னேன்,"டாக்டர் உங்களை எங்க குடும்பத்துல ஒருத்தராதான் பார்க்கறோம்,நான் அந்த நேரத்துல எடுத்த முடிவு சரின்னு
நினைக்கறேன்,மறந்துடுங்க.அவ இங்கயே இருக்கட்டும்,நீங்க கொஞ்சம் சொல்லி வையுங்க"என்றேன்.அவர் முகத்தில் இருந்த குழப்பம் தொலைந்துப் போனது.மாமாவின் முகத்திலும் திருப்தியே தெரிந்தது.இருவரும் நகர-

நான்,"மாமா நீங்க கொஞ்சம் இருங்க"என்றேன்.டாக்டர் போனதும்,"மாமா நான் சொன்னது சரிதானே?"என்று கேட்டேன்.

"நிலா உங்கம்மா இந்த கோட்டை வீட்டுல பொறுப்பை ஏத்துகிட்டப்ப எப்படி நிதானமா சில விஷயங்கள்ல்ல முடிவு எடுத்தாரோ அதே மாதிரி நீ இப்பவே நடந்துக்க ஆரம்பிச்சுட்டே"என்றார்.

"மாமா,எனக்கு இன்னும் மனசுல ஒரு சின்ன உறுத்தல் இருக்கு,அந்த வந்தனா மேல ஒரு கண் வச்சுக்கங்க"

"எனக்கும் அப்படித்தான் தோணுச்சு"என்றார் மாமா.

சித்தியின் காரிய நாள் நெருங்க நெருங்க எனக்கு சித்தியின் ஞாபகம் அதிகரிக்கவே செய்தது.நான் ஜவுளிக் கடலில் பார்த்தது சித்தியேதான்.காரியத்திற்கு இரண்டு நாள் இருக்கும் போது ரமேஷைத் தனியாக கூப்பிட்டேன்.

என் அறைக்குள் வந்ததும்"கதவை உள் பக்கம் தாழ்ப்பாள் போடுங்க"என்றேன்.

தாழ் போட்டு விட்டு வந்த ரமேஷ் என்னை அணைக்க முயல விலக்கினேன்.

"ரமேஷ் இது ரொம்ப முக்கியமான விஷயம்"என்றபடியே சித்தியின் புகைப் படத்தினை எடுத்துக் கொடுத்தேன்.வாங்கிப் பார்த்தவர்,"சொல்லு நிலா என்னப் பண்ணனும்?"

"உடனே கிளம்பறீங்க,தூத்துக்குடி, திருநெல்வேலி இரண்டுலயும் சுத்தி சித்தியை தேடறீங்க"என்றேன்.நான் சொல்லி நிறுத்தியதும் ரமேஷ் என்னை ஒரு வினோதமான விலங்கைப் பார்ப்பது போல் பார்த்தார்.

"என்னாச்சு நிலா, எல்லாம் நல்லாதான் போயிட்டு இருந்தது?"

"சொன்ன கேளுங்க,என்னோட கண்கள் என்னை ஏமாத்தாத,எனக்கு மனசுக்குள்ளே சில காரணங்கள் இருக்கு,அதனால தான் உங்களைப் போய் பார்க்கச் சொல்றேன்"என்று அவரிடம் ஜவுளிக் கடலில் பார்த்த விஷயங்களைச் சொன்னேன்.

"ஓ.கே நிலா நான் கிளம்பி போயிட்டு வர்றேன்,முக்கியமா ஊருக்குப் பேச போறேன்னு சொல்லிடு உங்கம்மா கிட்டே"என்றார்.

ரமேஷ் வெளியில் கிளம்பி போய் இருக்கிறார் என்பது சாப்பாடு நேரத்தில் தான் மற்றவர்களுக்குத் தெரிந்தது.

வந்தனா என் பக்கத்தில் தான் சாப்பிட உட்கார்ந்தாள்.

அந்த நிகழ்ச்சிக்குப் பின் அவள் ஏனோ என்னிடம் இன்னமும் நெருங்கிப் பழக ஆரம்பித்து விட்டாள்.சாப்பாடு முடிந்து மாடிக்கு திரும்பிக் கொண்டிருந்த வேளையில் அவள்,"அக்கா ஒரு முக்கியமான விஷயம் உங்ககிட்ட பேசணும்"என்றாள்.

படியில் ஏறிக் கொண்றடிருந்த நான்,"எதைப் பத்தி?"என்று கேட்டேன்.

"உங்க மனசுல இப்ப குடியிருக்கற குழப்பம் பத்தி"

நான் வந்தனாவை பார்த்தேன்.

"என்ன சொல்றே,வந்தனா?"

"உங்க சித்தி"அவள் சொல்லி முடிக்கவில்லை பின்னால் இருந்து மாமா,"நிலா அம்மா உன்னை உடனே வரச் சொல்றாங்க"என்று கூப்பிட்டார் ஆரம்ப படியில் நின்று கொண்டு.

நான் வந்தனாவைப் பார்த்து,"நீ போ நான் அம்மாவைப் பார்த்துட்டு வர்றேன்"என்றபடி இறங்கினேன்.

அத்தியாயம் இருபத்து நான்கு

அம்மா அறையின் வாயிலிலேயே நின்று கொண்டிருந்தார்.என்னைப் பார்த்ததும் சிரித்துக் கொண்டே உள்ளே சென்றார்.நான் பின்னாலாயே சென்றேன்.

"உட்கார் நிலா"என்றவர் நான் உடகார்ந்ததும் இன்னும் மூணு நாள்தான் இருக்கு நீ பொறுப்பை ஏத்துக்கறதுக்கு,ஆமாம் நீயும் மாப்பிள்ளையும் கட்டாயம் வெளி நாடுக்கு தேனிலவு கொண்டாடப் போகணுமா?"என்றதும் கொஞ்சம் அதிர்ந்துதான் போனேன்.

காரணம் இல்லாமல் இல்லை.நான் வந்ததே ஏதாவது பொய் சொல்லி பாஸ்போர்ட்டை வாங்கி விடலாம் என்றுதானே?

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை.ஆனாலும் அம்மா சிரித்துக் கொண்டே தன் தலையணை அடியில் இருந்து அந்த கவரை எடுத்து என் கையில் கொடுத்தாள்.அந்த கவரை ஆவலாய் பிரித்தேன்.உள்ளே என் பாஸ்போர்ட் இருந்தது.நான் கண்களில் ஆச்சர்யத்துடன் அம்மாவைப் பார்த்தேன்.

"உன்னோட பாஸ்போர்ட்,கொஞ்ச நேரம் முன்னாடி மாப்பிள்ளை வந்தார்,நீ படிப்பை விடறதுக்கு முன்னாடி நேரப் போய் கடிதம் ஒண்ணு கொடுக்கணுமாமே அதற்கு முகவரி அத்தாட்சி வேணும்,போட்டோ நகல் வேணும்ன்னு சொன்னார்,நான் தான் பாஸ் போர்ட்டை எடுத்து வச்சேன்,முக்கியமான வேலை இருக்கு திருநெல்வேலி வரைக்கும் போயிட்டு வர்றேன்னு போயிருக்கார்,அப்படியே உன் விஷயமா யார் கல்லூரியில யார் கிட்டயோ பேசணுமாம்"என்றாள்.நான் அம்மாவின் கண்ணையேப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

"இன்னொரு விஷயம் நிலா,பொறுப்பு உன் கைக்கு வந்ததுமே அது எவ்வளவு பெரிசுன்னு உனக்கு புரிய ஆரம்பிச்சுடும்,எதை செய்யணும்,எதை செய்யக் கூடாது,எதுக்கு முதலிடம் கொடுக்கணும் எல்லாம் உனக்கே தெரிய ஆரம்பிச்சுடும்,நீ யோசிச்சுதான் எந்த முடிவையும் எடுப்பே அது எனக்கு நல்லாவே தெரியும்"என்று சொல்லி நிறுத்தினாள்.

என் மீது அம்மா வைத்திருந்த அபார நம்பிக்கை எனக்கு அம்மாவின் மீது மரியாதையையும் அதிகமாகவே ஆக்கி விட்டது.

"நிலா,இந்த கோட்டை வீட்டு மேலே நிறைய பேருக்கு ஒரு கண் இருக்கு,அதுல குறிப்பா நம்மளோட சொந்தக்காரங்களுக்கு,அவங்க எல்லாம் ஒரு சத்தியத்துக்கு கட்டுப்பட்டு இருக்கறதே அந்த விஷயத்துக்காகத்தான்,அது என்னன்னு இன்னும் இரண்டு நாள்ல்ல நீயே தெரிஞ்சுப்ப"என்றாள்.

"சரிம்மா நான் எதிலயும் ரொம்ப கவனமா இருப்பேன்,நீங்க என் மேல வச்சிருக்கிற நம்பிக்கையை பொய் ஆக்க மாட்டேன்"என்றேன்.

அம்மாவிடம் பேசி விட்டு வெளியில் வந்த நான் நேரே என் அறைக்குப் போனேன்.நான் எதிர்பார்த்தது போலவே அங்கே வந்தனா காத்திருந்தாள்.அவள் என்னைப் பார்த்ததுமே முகத்தில் பூரிப்பானாள்.

"உள்ளே வா வந்தனா"என்று அவள் கையைப் பிடித்து அறையின் உள்ளே அழைத்துப் போனேன்.பக்கவாட்டில் இருந்த சோபாவில் அமர்ந்தாள்.நான் கட்டிலில் உட்கார்ந்தேன்.

"சொல்லு வந்தனா,சித்தி பத்தி ஏதோ சொல்ல வந்தே?"

"அக்கா நான் ரொம்ப பயத்துல இருக்கேன்,கதவு திறந்து இருக்கே,ஒரு நிமிஷம் போய் மூடிட்டு வந்துடறேன்"என்று எழுந்தாள்.

"பரவாயில்ல இரு வந்தனா,யாரும் வரமாட்டாங்க,வந்தாலும் தெரியும்,கதவு திறந்தே இருந்தா பார்க்கறவங்களுக்கு எந்த ஆர்வமும் வராது"

'அக்கா'என்றுதான் ஆரம்பித்தாள் வந்தனா.

அவள் கண்கள் சிவந்தது.

'குபுக்'கென்று வாந்தி எடுத்தாள்.

சிகப்பாய் ரத்த வாந்தி.

'அக்'

'கொட கொட'வென்று ரத்த வாந்தி.

இவ்வளவு ரத்தத்துடன் ஒரு வாந்தி.

என்னையும் அறியாமல் 'டாக்டர்'என்று கோட்டை வீடே அதிர்கிறார் போல் அலறினேன்.

வராண்டாவில் தடதட வென்று யாரோ ஓடி வரும் சப்தம்.

சுரேஷ் தான் உள்ளே பாய்ந்து வந்தான்.

அவன் கண்களில் மிரட்சி.

"என்ன ஆச்சு?"

நான் வந்தனாவைக் காட்டினேன்.

தரை முழுக்க ரத்தம்.

"டாக்டரை கூப்பிட்டுட்டு வா சுரேஷ்"

நான் சொன்னதும் சுரேஷ் வெளியில் ஓடினான்.

இரண்டு கைகளாலும் தலையைப் பிடித்துக் கொண்டு வாந்தி எடுத்தவள் அப்படியே தரையில் சரிந்தாள்.

நான் அவளைப் பற்றித் தூக்கி அப்படியே என் படுக்கையில் போட்டேன்.

சுரேஷ் ஓடி வந்தான்.

"டாக்டர் இல்லை,மாமா கூட இப்பதான் வெளியில போயிருக்காராம்,என்ன ஆச்சு நிலா?"

"தெரியலை சுரேஷ் பேசிட்டுதான் இருந்தா,திடீர்னு ரத்த வாந்தி எடுத்து மயங்கிட்டா"

படுக்கையில் கிடத்தியிருந்த வந்தனாவினைப் பார்த்தேன்.

மூச்சு சீராக வந்து கொண்டிருந்தது.ஒரு வித மயக்க நிலையில் கண்கள் மூடிக் கிடந்தது போல் இருந்தது.

"பெரிசா எதும் ஆயிடக் கூடாது"என்றான் சுரேஷ்.

"ஆகாதுன்னுதான் தோணுது,இவ்வளவு ரத்தம்,மயங்கிட்டா டாக்டர் வர வரைக்கும் ஒண்ணும் நடக்க கூடாதுன்னு நம்புவோம்"பால்கனி கதவையும் திறந்து வைத்தேன்.

காற்று சிலு சிலு வென்று அடித்துக் கொண்டு இருந்தது.

நான் மீண்டும் வந்தனாவைப் பார்த்தேன்.

அவள் பெரிதாக மூச்சி விட்டவாறு தூங்கிக் கொண்டிருந்தாள்.

சுரேஷ்,"நான் இருக்கணுமா?"என்று கேட்டான்.

"பரவாயில்ல சுரேஷ்,அவ தான் தூங்கிட்டு இருக்காளே,எதாவது தேவைன்னா நான் கூப்பிடறேன்,வேலைக் கார அம்மாவை மட்டும் அனுப்பு ,இங்க சுத்தம் பண்ணனும்"

"உடனே வரச் சொல்றேன்'என்று வெளியில் போனான் சுரேஷ்.

எனக்கு ரத்தத்தை பார்த்ததும் ஒரு புறம் பயமாக இருந்தாலும் அவள் வந்ததிலிருந்து நடக்கும் விஷயங்கள் அவளுக்கு கொஞ்சம் கொஞ்சமாக மனத் தைரியத்தை மறு புறம் ஊட்டிக் கொண்டிருந்தன.ஆனாலும் வந்தனாவின் நிலைமை அவளை உண்மையியிலேயே கவலை கொள்ள வைத்தது.சுரேழ் வேலைக் கார அம்மாளுடன் வந்தான்.அவளிடம் விஷயத்தை சொல்லித்தான் கூப்பிட்டு வந்திருப்பான் போல.துடைப்பம் துடைக்கும் துணித்துடப்பம் இரண்டும் கொண்டு வந்தாள்.

எதுவும் பேசாமல் குளியறையில் இருந்து தண்ணீரை வாளியில் எடுத்து வந்து ரத்த வாந்தி மேல் ஊற்றித் துடைக்க ஆரம்பித்தாள்.சுரேஷ்,"இதோ வந்துடறேன்"என்ற படி வெளியில் போனான்.வேலைக்கார அம்மாள் துடைத்தவாறே,"அம்மா ஆட்டம் உக்கிரமா இருக்கு,நீங்க முழுப்  பொறுப்பையும் ஏற்கற வரைக்கும் இப்படித்தான் இருக்கும்,நீங்க கொஞ்சம் ஜாக்கிரதையா இருக்கு,உங்க மேல பொறாமையும் கண்ணும் நிறையா இருக்கு"என்றாள்.

அவள் அப்படி சொன்னதும் எனக்கு ஆச்சர்யமாகத்தான் இருந்தது.இதுதான் அந்த அம்மாள் கொஞ்சம் பேசி பார்க்கும் முதல் தருணம்..என் முகத்தில் மெல்ல முளைத்த பயத்தைப் பார்த்தவளாய்,"பயப்படதீங்க,உங்களை யாரும் ஒண்ணும் செய்ய முடியாதும்,எல்லாத்துக்கும் மேலே நாராயண பட்டத்தரி நாளைக்கே வந்துடுவாரு"என்றாள்.எனக்கு அவள் சொன்னதுமே கொஞ்சம் தைரியம் வந்தாலும் பட்டத்திரியை நினைத்ததும் கொஞ்சம் பயப் படுத்தும் முகத்தோற்றமே மனதில் எட்டிப் பார்த்தது.

நாராயண பட்டத்திரி பரம்பரைக்கும் எங்கள் குடும்பத்திற்கும் அவரின் கொள்ளுத் தாத்தா சிம்ம பட்டத்திரிக்கும் எங்கள் கொள்ளுத்தாத்தா வீரசாமிக்கும் தொடர்பு உண்டு.பொறுப்பு மாற்றும் வைபவத்தின் போது அவர்கள் தான் அனைத்தையும் செய்து வைப்பார்கள்.ஆனாலும் எங்கள் குடும்ப ஐயர் இருந்து சாவிக் கொத்தை கொடுப்பதிலிருந்து கீழே போய் முதலில் பொறுப்பில் இருந்தவரை விட்டு விட்டு அங்கு இருப்பவரை கூப்பிட்டு வரும் வரை இருப்பார்.கோட்டை வீட்டின் துர் மரணங்களினால் ஏற்படும் அதீத விஷயங்களை கட்டிப் போட்டு போவதே பட்டத்திரியின் வேலை.எனக்கு அதில் முதலில் நம்பிக்கை இல்லை என்றாலும் விஞ்ஞானத்திற்க்கு அப்பாற் பட்டு பல விஷயங்கள் இருப்பதை என் சிறு வயது முதலே இந்த கோட்டை வீட்டில் பார்த்து வருகிறேன்.நமக்கு அனுபவம் ஏற்படாத வரையில் எந்த ஒரு விஷயத்திலும் நமக்கு நம்பிக்கை ஏற்படுவதில்லை.அதுதானே மனிதனின் இயற்கையான சுபாவம்.

வேலைக்காரி முடித்த வேளையில் டாக்டர் பரபரப்புடன் உள்ளே நுழைந்தார்.வந்தனாவை பரிசோதித்தார்.வேலைக்காரியிடம்,"ரெண்டு மிளகு நசுக்கி கொடுத்து விடுங்க"என்றார்.வேலைக்கார அம்மாள் போனதும்,"இவளுக்கு உடம்பு ரொம்ப வீக்கா இருக்கு,சின்ன வயசுல மூக்குல ஒரு கட்டி இருந்தது,அறுவை சிகிச்சைப் பண்ணி எடுத்தாச்சு,ஆனா அதுக்குப்புறம் ரொம்ப பயந்தாலோ,அதிர்ச்சியான விஷயத்தைப் பார்த்தாலோ இப்படி வாந்தி எடுத்துடுவா,நானும் பல வைத்தியம்

பண்ணியாச்சு,மூலக் காரணத்தை கண்டு பிடிக்க முடியலை"என்றார்.நான் வந்தானாவைப் பார்த்தான்.ஆனாலும் மனதில் தோன்றியதை சொல்லாமல் இருக்க முடியவில்லை.

"டாக்டர் எனக்கு தான் இங்க கோட்டை வீட்டிலே இருக்கணும்ன்னு நிர்பந்தம் பாவம் அவளை ஏன் நாம இங்க"- நான் முடிக்கவில்லை.டாக்டர்,"நிலா உங்க குடும்பத்துக்கு நான் ரொம்ப கடமைப் பட்டிருக்கேன்,போகப் போக உனக்கே தெரிய வரும்,நான் இங்கதான் இருந்தாகணும்,சில காரணங்களுக்காகத்தான் வந்தனாவை என் கூட இருக்கச் சொல்லி வரவழைச்சேன்,அவ படிச்சிருந்தாலும் என்னோட மறைவுக்கு அப்புறம் அவ எங்க வேணும்ன்னா போகட்டும்,இப்ப இங்க இருக்கட்டும்,அவளுக்கு ஒரு நல்ல முடிவு சொல்றேன்னு உங்க அம்மா சொல்லியிருக்காங்க,அவங்க தன்னோட முக்கிய பொறுப்பை உன் கிட்ட ஒப்படைக்கும் போது அதையும் சொல்லிட்டுதான் போவாங்கன்னுதான் நினைக்கிறேன்."

வேலைக்கார அம்மாள் வந்தாள்.அவள் ஒரு சின்னத்தட்டில் மிளகுத்தூள்.டாக்டரிடம் அதை நீட்டினாள்.இதை வைத்துக் கொண்டு டாக்டர் என்ன செய்யப் போகிறார் என்ற எண்ணத்துடன் நிலா அவரையேப் பார்த்துக் கொண்டிருந்தாள்.வேலைக்கார அம்மாள்,"ஐயா வேற ஏதாவது வேணுமா?"என்று டாக்டரைப் பார்த்துக் கேட்டாள்.

டாக்டர்,"இல்லம்மா,ஏதாவது தேவைன்னா கூப்பிடறேன்"என்றதும் அவள் நகர்ந்தாள்.

டாக்டர் இரண்டு விரல்களுக்கு இடையில் அந்த மிளகுத் தூளில் கொஞ்சம் எடுத்து வந்தனாவைன் மூக்கருகே கொண்டு போனார்.ஒரு வினாடிதான் 'ஹச்'என்றுத் துள்ளிக் கொண்டு எழுந்தாள்.நிலாவுக்கு ஆச்சர்யமாக இருந்தது.

சிரித்துக் கொண்டே,"டாக்டர் நீங்க ஆங்கில வைத்தியர் தானே இது என்ன புதிய கை வைத்தியம்?"என்றதும் அவரும் சிரித்துக் கொண்டே,"வந்தனா உடம்பு எந்த மருந்துக்கு கட்டுப் படும்ன்னு எனக்குத் தானே தெரியும்"என்றார்.

வந்தனா தெளிவாக உட்கார்ந்தாள்.

"நீங்க எப்ப வந்தீங்க?'என்று டாக்டரைப் பார்த்து கேட்டாள்.

"இப்பதான்ம்மா வந்தேன்,மனசைப் போட்டு குழப்பிக்க வேண்டாம்ன்னு உனக்கு பல தடவை சொல்லியிருக்கேன்,என்ன உனக்கு டென்ஷன்"

"அதெல்லாம் ஒண்ணுமில்ல டாடி,இப்ப சரியாத்தான் இருக்கேன்"என்றாள்.

டாக்டர்,"சரி நான் கீழேப் போறேன்"என்றபடி எழுந்தார்.

அவர் போனதும்,"அக்கா நான் ஒண்ணு சொன்னா தப்பா எடுத்துக்க மாட்டீங்களே?"என்று நிலாவைப் பார்த்து கேட்டாள்.

"என்ன சொல்லு வந்தனா,எதைப் பத்தி நீ சொல்லப் போறே நான் தப்பா எடுத்துக்க?"என்று கண்கள் விரியக் கேட்டாள்.

"நீங்க இங்க இருக்கறது ரொம்ப ஆபத்தான விஷயம்,உங்க மேல எப்பவோ பார்வை விழுந்தாச்சு,நீங்க நல்லவங்கன்னு நினைக்கறவங்க எல்லாம் நல்லவங்க இல்லை,அப்புறம் உங்க சித்தி சாகலை,அவங்க உயிரோடத்தான் இருக்காங்க,அவங்க இருக்கற இடம் எனக்குத் தெரியும்,இங்க மாடியில இருந்து விழுந்து இறந்தது அவங்க இல்ல?"வந்தானா சொல்லிக் கொண்டே போக எனக்கு அதிர்ச்சியும் திகிலும் ஏறியது.

"என்ன சொல்றே வந்தனா,நீ ஏதாவது உளர்றியா?எப்படி அதெல்லாம் சாத்தியம்?"

நிலா கேட்டுக் கொண்டிருந்த போதே சுரேஷ் வந்தான்.

"என்ன?"

"அத்தை உடனே உன்னை கூட்டிட்டு வரச் சொன்னாங்க"என்றான்.

நிலா எழுந்தாள்.

வந்தனா நிலாவின் கையைப் பிடித்தாள்.அவள் கைகள் நெருப்பாய் கொதித்துக் கொண்டிருந்தன.கண்களில் அதீத மிரட்சி இருந்தது.

இன்னொரு கையால் அவள் கைகளை அழுத்திப் பிடித்த நிலா,"ஒண்ணும் ஆகாது வந்தனா,நான் வந்துடறேன்,பேசுவோம்'என்று நகர்ந்தாள்.

அம்மாவின் அறைக்குள் போய் சேர்ந்த போது அங்கே மாமா,ரமேஷ் இருவரும் இருந்தார்கள்.

இவர் எப்ப வந்தார் என்று குழப்பத்துடன் நான் ரமேஷைப் பார்த்தபடியே நிற்க அம்மா,"உட்கார் நிலா"என்றாள்.

நான் அம்மா தட்டிக் காட்டிய இடத்தில் கட்டிலில் அம்மா பக்கத்தில் உட்கார்ந்தேன்.

## அத்தியாயம் இருபத்து ஐந்து

அம்மா என் முகத்தையேப் பார்த்தாள்.அது வழக்கமான கனிந்தப் பார்வையும் இல்லை கறாரானப் பார்வையும் இல்லை.ரமேஷைப் பார்த்தேன்.அவரும் என்னைதான் பார்த்து கொண்டிருந்தார்.நான் அம்மாவை மீண்டும் பார்த்தேன்.

"நிலா நாளைக்கு காலையில் ஐயரு,பட்டத்திரி எல்லாம் வந்துடறாங்க,என்னை நீ கீழே அனுப்பிட்டா எல்லாம் முடிஞ்சுடும்,உன்னோட சித்தி காரியத்தையும் காலையில முடிச்சிடறோம்,உங்கிட்ட நிறைய விஷயங்கள் நான் சொல்லனும்ன்னு இருந்தேன்,சொல்ல முடியாம போயிடுச்சு,உன்னோட மனசுல என்ன ஓடிட்டு இருக்குன்னு தெரியும்,நீ பார்த்தது பாதி நிஜம் பாதி உண்மை,எந்த குழப்பமும் தயக்கமும் இல்லாம நீ பொறுப்பை ஏத்துக்கனும்ன்னு நினைக்கறேன்"அம்மா திரும்பி மாமாவையும்,ரமேஷையும் பார்த்தாள்.அவர்கள் இருவரும் வெளியில் சென்றார்கள்.

நான் கொஞ்சம் குழப்பத்துடன் அம்மாவைப் பார்த்தேன்.

"நிலா நீ ஜவுளிக் கடல்ல பார்த்தது சித்திதான்!"என்று சொல்லி நிறுத்தினாள்.எனக்கு சப்த நாடியும் ஒடுங்கியது.நான் பார்த்தது சித்தியைத் தான் என்றால் இங்கு மாடியில் இருந்து விழுந்து இறந்து யார்?

"அவ என்னோட கூடப் பொறந்தவ இல்லை,உங்கப்பாக்கு திருநெல்வேலியில் ஒரு தொடர்ப்பு இருக்கிறா மாதிரி உங்க தாத்தாக்கும் ஒரு தொடர்ப்பு இருந்தது,அவருக்கு ரெட்டைப் பொண்ணுங்க,அதுல ஒருத்திதான் இங்க கோட்டை வீட்டுல என்னோட இருந்தது, நீ பார்த்தது இன்னொருத்தியை,அந்த விஷயங்களை இதோட மறந்துடு,இன்னும் கவனம் செலுத்த வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கு,இந்த கோட்டை வீட்டுக்கு எது தேவை எது தேவை இல்லைன்னு நீயே புரிஞ்சு அதுக்கு ஏத்தா மாதிரி செயல் பட ஆரம்பிச்சுடுவே அதுல ஒண்ணும் எனக்கு சந்தேகம் இல்லை,நாளைக்கு காலையில் காரியத்துக்கு நீ கீழே வர வேண்டாம்,ஆறரை மணிக்கு வந்தா போதும்,உடனே பொறுப்பு பூஜையை ஆரம்பிச்சுடலாம்,எனக்கு ஒரே ஒரு வருத்தம் தான் உன்னோட கல்யாணத்தைப் பார்க்காமா கீழே போறேன்னு"

"அம்மா நான் சொன்னா ஒன்னு கேட்பீங்களா?"

"என்ன நிலா சொல்லு"

"ஏன் கல்யாணத்தை முதல்ல வச்சுட்டு இந்த பொறுப்பை மாத்தறா சம்பிரதாயத்தை பின்னாடி வைக்கக் கூடாது?"

"வைக்காலம்தான்,அதுல ஒண்ணும் பிரச்சனை இல்லை,ஆனா உங்கிட்ட பொறுப்பை ஒப்படைக்கறதை எந்த காரணத்தை கொண்டும் தள்ளி போட வேண்டான்னு பார்க்கறேன்"

நான் அம்மாவைப் பார்த்தேன்.

"இனிமே எந்த காரணம் கொண்டும் என் மனசு மாறாது"

"எல்லாம் முடிவு பண்ணியாச்சு,எதையும் மாற்ற முடியாது"

"எனக்கு ஒரு யோசனை தோணுதும்மா?"

"என்ன நிலா சொல்லு,உன் யோசனை சரியா இருந்தா அதன் படி செய்துடலாம்"என்றாள்.

"நீங்க விருப்பப் பட்டா நாளைக்கு காலையில பொறுப்பை ஏத்துக்கறதுக்கு முன்னாடி கல்யாணத்தை வச்சுக்கலாம்,எப்படியும் நாளைக்கு எல்லா சொந்தக்காரங்களும் இங்க இருப்பாங்க இல்ல அதனால தான் திரும்ப யோசிச்சு அதையே சொல்றேன்"

"நீ முதல்ல சொன்ன உடனேயே அந்த யோசனை எனக்கு வந்தது,ஆனா இந்த சித்தி சடங்குக்கு பின்னாடி பொறுப்பு மாத்தற விஷயத்துக்கே முதல்ல யோசிச்சேன்,அதுக்கு ஏதோ சாங்கியம் பண்ணிக்கறேன்னு சொன்னாரு பட்டத்திரி,எதுக்கும் நீ சொன்னா மாதிரி பட்டத்திரிகிட்ட பேசிடறேன்"

அம்மா தன் அறையில் இருந்த போனில் இருந்து பட்டத்திரியின் போனை முயற்ச்சித்தார்.ரீஸிவரை காதில் வைத்துக் கொண்டே இருந்தார்."யாரும் எடுக்கலை,எப்படியும் நடு ராத்திரி வந்து சேர்ந்துடுவார்,கேட்டுடறேன்,நீ போய் ஒய்வு எடு,பொறுப்பு உன் கைக்கு வந்தப் பிறகு இப்ப இருக்கற நேரம் மாதிரி உனக்கு கிடைக்காது"

அம்மாவின் அறையை விட்டு வெளியில் வந்தேன்.சோபாவில் உட்கார்ந்து மாமாவுடன் பேசிக் கொண்டிருந்த ரமேஷ் என்னைப் பார்த்ததும் எழுந்தார்.நான்,"வாங்க மேலே போய்

பேசலாம்"என்று சொல்லி விட்டு முன்னால் நடந்தேன்.ரமேஷ் என்னைத் தொடர்ந்தார்.

படியில் ஏறும் போதே,"அம்மா நாளைக்கே கல்யாணம் வச்சாலும் வச்சிடுவாங்க போல இருக்கு"என்றதும் ரமேஷ்,"என்ன பேசறே நிலா,காரியம் பண்ண அன்னைக்கே பொறுப்பு ஏத்துக்கப் போறியேன்னு நான் யோசிச்சுட்டு இருக்கேன்,அதுக்கே உங்க மாமாகிட்ட பேசினேன்,அதுக்கு ஏதோ ப்ரீதி பண்ணிட்டு பண்ணுவாங்கண்ணு சொன்னாரு,இப்ப கல்யாணமும் நாளைக்குன்னா,இந்த யோசனை சரிப் பட்டு வரும்ன்னு தெரியலை"என்றார்.

நான் ஆச்சர்யத்துடன் ரமேஷைப் பார்த்தேன்.ரமேஷுடனான என் பழக்கத்தில் முதல் முறையாக ரமேஷ் இப்படி பேசியது.

பேசிய படியே அறையை நெருங்கி விட்டோம்.

நான் என் அறைக்குள் நுழையும் முன் அனிச்சையாக வந்தனா அறையைப் பார்த்தேன்.எந்த வித சலனமும் இல்லை.

ரமேஷ் உள்ளே சென்று அறையின் பக்கவாட்டில் இருந்த சோபாவில் உட்காரந்தார்.

நான் கட்டிலில் உட்கார்ந்தேன்.

"நிலா பொறுப்பை நீ ஏத்துக்கிட்டதும் கல்யாணம்ன்னு முதல்ல சொன்ன,இப்ப என்ன திடிர்ன்னு குழப்பறே?"

"அம்மா என் கல்யாணத்தைப் பார்க்கணும்ன்னு ஆசைப் படறேன்,அது தப்பா?"

"தப்பில்ல,ஆனா அவங்கதான இந்த மற்ற ஏற்பாடு எல்லாம் செஞ்சது,அப்புறம் அவங்களுக்கு ஏன் திடீர்ன்னு உன்னோட கல்யாணத்தைப் பார்க்கணும்ன்னு ஆசை வந்துச்சு?"

"நான் தான் ஆசைப் பட்டேன்,என் கல்யாணத்தை அம்மா பார்க்கணும்ன்னு"

ரமேஷ் ,மௌனமானார்.

அவர் ஏதோ தீவிர யோசனையில் ஆழ்ந்ததை அவரின் முகம் காட்டியது.

பெரிய அத்தையினைப் பார்த்து பல நாட்கள் ஆகிறது.

நாளை எப்படியும் அவர் பொறுப்பு மாற்று சடங்குக்கு வருவார் என்றே எனக்குத் தோன்றியது.

"ரமேஷ் சொல்லுங்க நீங்க திருநெல்வேலி போனீங்களா,இல்லையா,அங்க என்ன நடந்தது?"

நான் சடாரென்று இந்த கேள்வியைப் போட்டதும் யோசனையில் ஆழ்ந்திருந்த ரமேஷ் நிமிர்ந்து என்னைப் பார்த்தார்.

"நான் கிளம்பும் போது உங்க மாமாவும் வெளியில் கிளம்பிட்டு இருந்தார்,அவர் கூட தான் கார்ல்ல போக வேண்டி இருந்துச்சு,அவர் சுத்தி சுத்தி என்ன வேலை,என்ன வேலைன்னு கேட்டார்,என்னால மறைக்க முடியலை"

"கடவுளே"

"அவர்தான் தான் சில விஷயங்கள் அம்மாக்கும் தெரியும்ன்னும் கொஞ்ச தூரம் போனதுமே காரைத் திருப்பி கூட்டிட்டு வந்துட்டார்,உங்கம்மாதான் உங்க சித்திப் பத்தி எங்கிட்ட சொல்லிட்டு உனை கூப்பிட ஆளை அனுப்புனாங்க"

எனக்கு ரமேஷ் மீது கோபம் வந்தது.

"ரமேஷ் அம்மா சொன்னது ஒரு பக்கம் இருக்கட்டும்,நான் உங்களை நம்பிதான் அந்த காரியத்திற்கு அனுப்பினேன்,பாதியில திரும்பி வர இல்லை"நான் கொஞ்சம் வேகமாக சொன்னதும் ரமேஷின் முகம் கொஞ்சம் மாறித் தான் போனது.பின் மெல்ல சிரிப்பை முகத்தில் பலவந்தமாய் வரவழைத்துக் கொண்டதாகவே எனக்கு தோன்றியது.

"நிலா,என்னை மன்னிச்சுடு,கொஞ்சம் பொறு, நான் திரும்ப போய் தீவிரமா விசாரணைப் பண்ணிட்டு வர்றேன்"

"விடுங்க ரமேஷ் அப்புறம் பார்த்துக்கலாம்,நான் பெரிய அத்தையைப் பார்த்துட்டு வர்றேன்"எழுந்தேன்.எனக்கு

என்னமோ உடனே பெரிய அத்தையைப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது.

நான் வேகமாக அத்தையின் அறையினை நோக்கி நடந்தேன்.எனக்குள்ளே ஏதோ என்னவென்று சொல்ல முடியாத உறுத்தல்.அத்தையின் அறையை அடைந்த நான் சாதாரணமாய் மூடி வைத்திருந்த கதவை மெல்ல தட்டி,"அத்தை நான் நிலா வந்திருக்கேன்"என்றேன்.

உள்ளே இருந்து 'ம்'என்று குரல் வந்தது.

நான் கதவைத் திறந்தேன்.

அத்தை தன் கையில் இருந்த பிரஷ்ஷை ட்ரேயில் போட்டாள்.

அவளின் ஓவியப் பலகையில் துணித் தொங்கிக் கொண்டிருந்தது.அது பறக்காமல் இருக்க அதன் அடியில் ஒரு கிளிப் தொங்கிக் கொண்டிருந்தது.

என்றும் இல்லாமல் பெரிய அத்தையின் முகத்தில் ஒரு சிரிப்பு இருந்தது.அதுவே எனக்கு முதல் ஆச்சர்யம்

சைகையாலேயே "நாளைக்குத் தானே"என்று கேட்டாள்.

சைகையால் தன் பீரோவைக் காட்டினாள்.

எழுந்துப் போய் திறந்தேன்.

திறந்து விட்டு திரும்பி அத்தையைப் பார்த்தேன்.அத்தை சுட்டிக் காட்டினாள்.

அந்த இடத்தில் ஒரு டைரி இருந்தது.

அதை எடுத்து கொண்டு போய் படிக்கும் படி சைகை செய்தாள்.

எடுத்துக் கொண்டேன்.

கொஞ்ச நேரம் ஒன்றும் பேசாமல் உட்கார்ந்து இருந்தேன்.

கைகளால் கழுத்தில் தாலி கட்டுவது போல் பாவனை செய்து 'எப்பொழுது?'சைகையில் கேட்டாள்.

'தெரியலை'என்றேன்.

அத்தை சிரித்தாள்.

அவள் சிரிப்பு நேரம் ஆக ஆக பெரிதானது.

அந்த சிரிப்பு வேகம் கூட கூட அவளின் குரலில் ஒரு வித ஊளை ஏற்பட்டது.

நான் நடுங்கிப் போனேன்.

அத்தியாயம் இருபத்தி ஆறு

அத்தையின் ஊளை என்னைக் கலவரத்தில் ஆழ்த்தியது.மாமா எங்கிருந்தோ ஓடி வந்தார்.

என்னைப்பார்த்து,"என்ன ஆச்சு நிலா,என்ன கேட்ட அத்தையை இப்படி கோபம் ஆயிட்டாங்க?"

"நான் ஒண்ணும் கேட்கலை,அத்தைதான் கல்யாணம் பற்றி தாலி கட்டறா மாதிரி சைகைப் பண்ணாங்க,எப்பன்னு கேட்டாங்க,தெரியலைன்னு சொன்னேன்,அதுக்குப் அப்புறம் தான் இந்த ஊளை"

மாமா அத்தையைப் பார்த்தார்.அத்தையின் கண்கள் சிவந்து இருந்தன.பார்க்கவே பயங்கரமாக இருந்தது.அத்தை ஊளையை நிறுத்தி மாமாவைப் பார்த்தார்.தன் கையால் சைகை காட்டி மாமாவை அருகில் அழைத்தார்.மாமா பக்கத்தில் சென்று குனிந்தார்.மாமாவின் காதருகில் அத்தையின் உதடுகள் அசைந்தது மட்டும் தான் எனக்குத் தெரிந்தது.மாமா தலையினை மட்டும் ஆட்டிக் கொண்டு இருந்தார்..

பின் நிமிர்ந்தவர்,"நிலா எழுந்திரு போகலாம்'என்றார் படபடப்புடன்.

நான் அத்தையை திரும்பிப் பார்த்தேன்.கண்களை மூடியிருந்தார்.மூடிய விழிகளின் ஓரம் இருந்து நீர் கசிந்துக் கொண்டிருந்தது.நான் நின்ற படியே இருக்க மாமா என்னை நிற்க விடாமல் என் கைகளைப் பற்றி இழுத்துக் கொண்டு வெளியில் வந்தார்.

"கீழே வா நிலா,நாராயண பட்டத்திரி வந்தாச்சு,கீழ் ரூம்ல்ல தங்க வச்சிருக்கு,அம்மா கிட்ட பேசிட்டு இருக்காரு?"என்றாள்.

"விடியற்காலையில தான் வர்றார்ன்னுதான் அம்மா சொன்னாள்"

"வந்துட்டாரு,உன்னோட கல்யாணத்தைப் பற்றிதான் அம்மா பேசிட்டு இருக்காங்க,உன்னை கூப்பிட்டு வரப் போனேன்,மேல எல்லாம் தேடிட்டு வந்தப்பதான் இங்க சத்தம் வந்தது,ஓடி வந்தேன்,அத்தை கூப்பிடாம அவங்க அறைக்குப் பொக கூடாதுன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கு?"

அத்தையின் அறை தாண்டி சின்னத் திருப்பம்,பக்கவாட்டு அறை!நாங்கள் யாருமே பழகாத இடம்.பூஜை சாமாங்கள்,கழிவுக்குத் தேவையான பொருள்கள்,சின்ன சின்ன சிலைகள் எல்லாம் கிடக்கும்.அந்த அறை கொஞ்சம் பெரிய அறைதான்.அதில் தான் நாராயண பட்டத்திரி எப்பொழுது வந்தாலும் தங்குவார்.அவரின் தோற்றம் சாந்தமாய் இருந்தாலும் அவர் மந்திர வேலைகளில் இறங்கி விட்டால் எங்கிருந்தோ ஒரு குரூரம் வந்து அவர் முகத்தில் ஒட்டிக் கொள்ளும்.நான் சின்னப் பெண்ணாய் இருக்கும் போது இரண்டு மூன்று தடவை பார்த்து இருக்கிறேன்,நான் சென்னைக்கு கிளம்பிப் போகும் முன் கூட ஒரு முறை அவர் வந்திருந்தார்.

அவர் அறையை நோக்கி நெருங்க நெருங்க எனக்கு ஏனோ மெல்லிய பய ரேகை இழையாக ஒட்டிக் கொண்டது.அறையின் வாயிலில் அவரின் உடன் வரும் அரை வயசுப் பையங்கள் சின்ன அரை முண்டி கட்டி நின்று கொண்டிருந்தார்கள்.உள்ளே இருந்த அம்மாவின் குரல் கேட்டு கொண்டிருந்தது.எனக்கு இந்த மாய மந்திர தந்திர

ங்கள் மீது எல்லாம் நம்பிக்கை கிடையாது.ஆனால் நாராயண பட்டத்திரியையும் அவரின் பரிவாரங்களையும் பார்க்கும் போதும்,அவர்கள் செய்யும் பூஜைகளையும் ,அதற்கு முன்னால் அவர்கள் தரையில் போடும் தந்திர வண்ணக்

கோலங்களையும் பார்க்கும் போது யாருக்கும் நம்பிக்கை வந்து விடும்.ஆனாலும் அம்மாவை எதிர்த்து நான் இதுவரை எதுவும் சொன்னதில்லை என்பதுதான் உண்மை.

நானும் மாமாவும் உள்ளே நுழைந்ததும் அவருக்கு எதிரே நாற்காலியில் உட்கார்ந்து இருந்த அம்மா,;;இதோ அவளே வந்துட்டாளே"என்றாள்.

நாராயணப் பட்டத்திரி,"ஓ இத்தரை சுந்தரி ஆயோ"என்றார்.

அம்மா,"'நீங்களே சொல்லுங்க சாமி,அவளுக்கு இதுல எல்லாம் நம்பிக்கை கிடையாது,நம்மளை பாதுகாத்துக்க சில விஷயங்களை நாம செஞ்சாகணும் அதுல தப்பு இல்லைன்னு அவளுக்கு புரிய வையுங்க?என்றாள்.

அவர்,"மோளே,இவ்விட வரு"என்றார்.நான் கொஞ்சம் முன்னால் சொன்னார்.

"நீதான் அடுத்த கோட்டை வீட்டு ராணி ஆகப் போறே,என்னோட தாத்தா காலத்துல இருந்து எங்களுக்கு இந்த வீட்டோட ஒரு லிங்க் இருக்கு,கல்யாணம் பண்ணிடலாம்ன்னு சொன்னாங்க,அதுக்கு ஒரு சின்ன பூஜை பண்ணா போதும்,பூஜைன்னு சொல்ல மாட்டேன்,இந்த கோட்டை வீட்டுல நடந்த துர்மரணங்கள் மூலமா சுத்திட்டு இருக்கற துர் ஆவிகளை விரட்டிட்டு உனக்கு ஒரு வளையம் போடணும் அதுக்கு நீ பூஜையில உட்கார்ந்து தான் ஆகணும்"என்றார்.நான் ஒன்றும் பதில் சொல்லாமல் அம்மாவைப் பார்த்தேன்.

அம்மா,"நிலா உன் மேல பலருக்கு ஒரு கண் திருஷ்ட்டி இருக்கு,உனக்கு தைரியம் இருக்கு,இருந்தாலும் நம்ம சக்திகளையும் மீறி சில எதிரிகள் செயல் படும்போது அதை ஆரம்பத்திலேயே முறியடிக்கிற சக்தி,ஒரு பாதுகாப்பு வளையம் உனக்கு இருக்கணும்ன்னு நான் முடிவு பண்ணேன்,கொஞ்ச நேரம் நீ உட்கார்ந்தா போதும்'என்றாள்.நான்,"உங்க இஷ்டம்மா இந்த கோட்டை வீட்டுக்காக நான் என்ன வேணும்ன்னாலும் செய்வேன்"என்றேன்.

"காலையில நீ மூணு மணிக்கு தயாரா இருக்கணும்"என்றாள் அம்மா.

பட்டத்திரி அந்த புடவையை என்னிடம் தந்தார்.

"காலையில் இதை கட்டிட்டு வந்துரும்மா'என்றார்.

அரக்கு கலர் பட்டுப் புடவை.

"உங்கம்மா தந்தது தான் ,உங்க பரம்பரை புடவை, பொறுப்பு ஏற்கற அன்னைக்கு இதைதான் கட்டிக்கணும்"

நான் புடவையுடன் அறைக்குத் திரும்பினேன்.

ரமேஷ் அறை வாசலில் நின்று கொண்டிருந்தார்.

"எங்க போன நிலா,ரொம்ப நேரமா இடம் இடமா உன்னை தேடிட்டு இருக்கேன்."என்றார்.

"ஒண்ணுமில்ல,எங்க குடும்பத்துக்கு நெருக்கமான் பட்டத்திரி வந்து இருக்கார்,அம்மா அவர் கிட்ட பேசிட்டு இருக்காங்க அவரைப் பார்க்க போயிருந்தேன்,இன்னோரு விஷயம் நாளைக்கு நமக்கு கல்யாணம்"என்றேன்.

ரமேஷ் சின்ன அதிர்ச்சியுடன் என்னைப் பார்த்தார்.

"என்ன அவ்வளவு அதிர்ச்சியா என்னைப் பார்க்கறீங்க,இந்த கல்யாணத்துல உங்களுக்கு இஷ்டம் இல்லையா என்ன?'

"சே சே,நான் அப்படி நினைக்கலை,உன்னை கல்யாணம் பண்ணிக்கத்தானே எல்லாத்தையும் விட்டுட்டு வந்திருக்கேன்,ஆனாலும் பொசுக்குன்னு நாளைக்கு ஞாயிற்றுக் கிழமைங்கறா மாதிரி கல்யாணம்ன்னு சொல்றியே?"என்றார்.

"ஆமாம்,அம்மா என்னோட கல்யாணத்துக்கு இருக்கணும்ன்னு ஆசைப் பட்டேன்,அதனால நாளைக்கு அவங்க என் கிட்டே பொறுப்பை ஒப்படைக்கறத்துக்கு முன்னாடி நம்ம கல்யாணம் நடக்கப் போகுது"என்றேன்.

"சந்தோஷம்'என்றார்.

மற்ற விஷயங்கள் எதையும் நான் சொல்லவில்லை.

இரவு சாப்பாடு நேரத்தில் மேஜையில் அம்மா மறு நாள் திருமணம் என்கிற விஷயத்தினையும் சொல்லி விட்டார்.எல்லோருக்கும் மகிழ்ச்சிதான்.ஒரு வேளை கல்யாணம் என்று மீண்டும் இந்த பொட்டல் வெளியில் வந்து அடைந்து கிடக்க வேண்டாம் என்கிற விஷயமும் அவர்களின் மனதில் ஓடியிருக்க வேண்டும் என்றே எனக்கு தோன்றியது.

"தூத்துக் குடி சொந்தகாரங்க வந்துடுவாங்க,அவங்க ராத்திரி சாப்பிட்டு வராங்களா இல்லையான்னு தெரியாது,அவங்களுக்கு டிபன் ரெடி பண்ணி வச்சுடுங்க'என்றேன் சமையல்கார அம்மாளிடம்.

சீக்கிரமே படுக்கப் போனேன்.மனம் ஒரு நிலையில் இல்லை.எல்லாம் திடீர் என்று வேகமாய் நடப்பது போல் தோன்றியது.

நள்ளிரவில் திடீர் என்று முழிப்பு வந்தது.இருளின் அமைதியில் அந்த பன்றிக் குட்டிகளின் சப்தம்.நம் கோட்டை வீட்டிலும் சுற்று வட்டாரத்திலும் பன்றிகளின் நடமாட்டமே கிடையாது.அப்புறம் எப்படி?

கட்டிலில் எழுந்து உட்கார்ந்து கால்களைத் தரையில் ஊன்றினேன்.கால்களில் ஏதோ வழவழவென்று.பாய்ந்து அறையின் விளக்கைப் போட்டேன்.அறை ,முழுக்க பாம்புகள் சிறியதும் பெரியதுமாக வளைந்து நெளிந்து கொண்டிருந்தன.

நான் அலறினேன்.

கதவை யாரோ 'தட் தட்' டென்று தட்டினார்கள்.

பாம்புகளை மிதித்துக் கொண்டு ஓடிப் போய் திறந்தேன்.

வாசலில் மாமா நின்று கொண்டிருந்தார்.

"என்ன ஆச்சு நிலா?'

"பாம்பு பாம்பு"பயத்தில் கத்தினேன்.

"எங்க?'

"அறை முழுக்க இருக்குப் பாருங்க" நான் திரும்ப அறையில் ஒன்றும் இல்லை.

மாமா சிரித்தார்.

"நிலா உனக்கு ப்ரமைதான்,பயம்தான் ப்ரமையா மாறியிருக்கு"என்றார்.

நான்,"நான் இப்பதான் பார்த்தேன்.என் காலால மிதிச்சேன்? என்றேன்.

"நீ சொல்றா மாதிரி மிதிச்சிருந்தா அடுத்த வினாடியே உன்னை கொத்தியிருக்கும்,பேசாம படு,காலையில சீக்கிரம் எழுந்திருக்கணும்"என்றார்.

அவர் போனதும் அறையின் விளக்கை அணைக்காமலேயே படுத்தேன்.மெல்ல என்னை உறக்கம் தழுவ ஆரம்பித்தது.

யாரோ கதவைத் தட்டினார்கள்.

எழுந்து போய் கதவைத் திறந்தேன்.

வேலைக்கார அம்மாள்.

"மணி இரண்டரை ஆயிடுச்சு,அம்மா எழுப்பச் சொன்னாங்க,பட்டத்திரி தயார் ஆயிட்டாராம்,உங்களை குளிச்சுட்டு உடனே கீழே வரச் சொன்னாங்க"என்றாள்.

"சரி சரி,குளிச்சுட்டு வர்றேன்,நீங்க போங்க"என்றேன்.

அவள் போனதும் பல் தேய்த்து குளிக்க ஆரம்பித்தேன்.

குளித்து முடித்து அரக்கு புடவையினைக் கட்டிக் கொண்டு கீழே சென்றேன்.

அம்மா தயாராய் இருந்தா.

சில சொந்தக் காரர்கள் தான் இருந்தார்கள்,

அம்மா,"எல்லாம் பொறுப்பு ஏற்கறத்துக்குள்ள தயார் ஆகி வந்துடுவாங்க,பட்டத்திரி பூஜைக்கு நீயும் நானும் இருந்தா போதும்'என்றாள்.

"எங்க?"

"பின்னாடி வா"

அம்மா மெல்ல நடந்தாள்.

அம்மாவின் நடை எப்பொழுதும் கம்பீரமாய் இருக்கும்.ஆனால் இப்பொழுது கொஞ்சம் தளர்ந்து இருந்தது.

பின்னால் ஐயர் ஒரு பக்கம் சித்தியின் காரியங்களில் இறங்கியிருந்தார்.

திரும்பி கோட்டை வீட்டின் பக்க வாட்டில் போக நாராயண பட்டத்திரி ஒரு பெரிய பொடி வண்ண சுதர்ஸன சக்கர கோலத்தின் முன்னால் உட்கார்ந்து இருந்தார்.அவரின் வாயில் இருந்து புலனுக்குப் புலப்படாத மந்திர வார்த்தைகள் வெட்ட வெளியில் வந்து விழுந்து கொண்டு இருந்தன.கொஞ்சம் தள்ளி ஒரு பெரிய வட்டம் போடப் பட்டிருந்தது.வெள்ளைப் பொடியில் அந்த வட்டம்.

எட்டுப் பெரிய குத்து விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

அவருக்குப் பக்கவாட்டில் ஒரு சின்ன வட்டம்.அதை தன் பார்வையாலே காட்டி என்னை அங்கு உட்காரச் சொன்னார்.உட்கார்ந்தேன்.அவர் சிவப்பு நிற வஸ்திரம் ஒன்றை தன் உடலில் சுற்றியிருந்தார்.கழுத்தில் கழு மர வேர் ஒன்று தங்கச் சங்கிலியில் தொங்கி கொண்டிருந்தது.சுதர்ஸன சக்கரத்தினைப் பார்த்தேன்.

.அம்மா எனக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தாள்.

'ஓம் ஷ்ரீம் க்லீம் மாமாயி ஸ்வர்ண சூலினி,துஷ்ட கிரஹம் ஹூம்பட் ஸ்வாஹா..'அவரின் உச்ச மந்திரம் தொடங்கியது.அவரின் முகம் சிவக்க ஆரம்பித்தது.அவர் திரும்பி அவரின் சிஷ்யப் பிள்ளை ஒருவனைப் பார்த்தார்.அவன் அந்தப் பார்வைக்கு காத்திருந்தவனைப்

போல் அவன் போனான்.சடுதியின் திரும்பியவன் கையில் பிடித்து இருந்த கயிற்றில் அந்தப் பன்றிகளைப் பிடித்து இழுத்தே வந்தான்.அவற்றில் இரண்டு சின்னது.ஒன்று பெரியது.அவனை இழுப்புக்குப் போட்டிக் கொண்டு மூன்றும் முன்னேறாமல் பின் பக்கம் இழுத்தன.பலமாக இழுத்து வந்தவன் அந்த வெற்று வட்டத்துக்கு அருகில் இழுத்து வந்தான்.அந்த மூன்று பன்றிகளையும் அவன் பலவந்தமாக அந்த வட்டத்திற்க்குள் எத்தி விட்டான்.அவற்றைப் பிணைத்து இழுத்து வந்த கயிற்றையும் விட்டு விட்டான்.

அவை வட்டத்தை விட்டு வெளியே செல்லாமல் உள்ளேயே அலறிய படி சுற்றி சுற்றி வந்தன.

விஞ்ஞானத்தால் விளக்க முடியாத சிலவற்றினைப்பார்க்கத் தொடங்கினேன்.

பட்டத்திரி மந்திரத்தை உச்சரித்தவாறே கையில் இருந்த குங்குமத்தை வீசினார்.என்னைப் பார்த்து மெல்ல சிரித்தார்.பின் மீண்டும் உக்ரத்துடன் மந்திரத்தை உச்சரித்தவாறே மீண்டும் குங்குமத்தை அவற்றின் மேல் எரிந்தார்.

என் கையில் கைப்பிடியளவு குங்குமத்தை கொடுத்தார்.அவர் மந்திரங்களை உச்சரிக்க பெரிய பன்றி பெருத்த ஓசையை எழுப்பியவாறே என்னை நோக்கி அந்தரத்தில் பாய்ந்தது.நான் மிரண்டு அவரைப் பார்த்தேன்.அவர் தன் கையில் இருந்த குங்குமத்தினை வீசிக் காண்பித்தார்.நான் என் கையில் இருந்த குங்குமத்தினை என்னை நோக்கி வந்த பன்றி மீது வீச அது சுருண்டு அந்த வட்டத்திற்க்குள்ளேயே விழுந்தது.அதன் சலனம் அடங்கியது.பட்டத்திரி மீண்டும் குங்குமத்தை வீச குட்டிப் பன்றிகளும் உள்ளே விழுந்தன.மூன்றின் துடிப்புகளும் சுத்தமாய் அடங்கி விட்டு இருந்தன.

என்னைப் பார்த்து பட்டத்திரி எழுந்து போகுமாறு சைகையில் சொன்னார்.

நான் எழுந்தேன்.

அம்மா என்னுடன் மெல்ல நகர்ந்தார்.

முன்னே ஹாலுக்கு வரும் போது அம்மா சொன்னாள்.

"நிலா உனக்கு நம்பிக்கை இருக்கோ இல்லையோ,பிடிச்சிருக்கோ இல்லையோ சில விஷயங்களை நம்பி செஞ்சாகணும்,இது வெறும் கோட்டை வீடு இல்ல நிலா,உனக்கே இனிமே புரிய ஆரம்பிச்சுடும்"என்றார்.

ஹாலில் கல்யாணத்துக்கு ஆன ஏற்பாடுகள் செய்யப் பட்டிருந்தன.

அம்மாவுடன் அவர் அறைக்குள் நுழைந்தேன்.

கட்டிலில் உட்கார்ந்தார்.

திறந்திருந்த பீரோவைக் காட்டினாள்.

"அந்த மஞ்சள் பையை எடு "என்றாள்.

எடுத்து கொடுத்தேன்.

"உள்ளே பாரு"என்றாள்.

அதன் உள்ளே ஒரு பழைய பத்திரம் பெரிய கட்டாக இருந்தது.அதன் உடன் புதிய பத்திரம் ஒன்று.

"கோட்டை வீட்டோட முழுப் பத்திரம், புதுசு நான் சட்டப் படி வாரிசா நியமிச்சப் பத்திரம் ,ஒரு மாசம் முன்னாடியே எழுதினது,சடங்கு சம்பிரதாயம்தான் இப்போ,பழையப் பத்திரம் முழுக்க படிச்சுப் பாரு,நம்மளோட சொத்து விவரம் ,கோட்டை வீட்டுப் பற்றின முக்கியமான விஷயங்கள் எல்லாம் அதுல இருக்கு,இன்னொரு விஷயம் இதுதான் இனிமே உன்னோட அறை"என்றாள்.

அம்மாவை நிமிர்ந்துப் பார்த்தேன்.

"நானும் உங்கப்ப்பாவும் இருந்த அறை ஒண்ணு பெரிய அத்தை ரூம் பக்கத்துல இருக்கு இல்ல,அதை தான் உங்க இரண்டு பேரோட புழக்கதுக்கு,இந்த சொத்துப் பத்திரம் எந்த காரணம் கொண்டும் இந்த அறையை விட்டு வெளியில போகக் கூடாது"என்றாள்.

கதவருகில் சலனம்.நான் நிமிர்ந்துப் பார்த்தேன்.

"யாரது?"என்றாள் அம்மா.

"நான் தான் "கதவைத் திறந்து கொண்டு மாமா உள்ளே வந்தார்.

"அக்கா எல்லாம் தயார்"

"தூத்துக்குடி காரங்க"

"அவங்க ராத்திரியே வந்துட்டாங்க,சித்தியோட விஷயங்கள் முடிஞ்சு எல்லாம் ஹால்ல காத்து இருக்காங்க,பட்டத்திரி பூஜையறையில் பொறுப்பு மாத்த காத்திருக்காரு"

"மாப்பிள்ளை ரெடியா?"

"ம்,இப்பத்தான் அறையில பார்த்தேன்,குளிச்சு முடிச்சுட்டார்,கீழே வரத்தயாரா இருக்கார்,ஐயர் சொன்னதும் நான் போய் அழைச்சிட்டு வந்துடறேன்"

"சரி நீ போ இவளை புதுப் படவை கட்டிட்டு அழைச்சிட்டு வர்றேன்'என்றாள் அம்மா.

நான் புதுப் புடவை மாற்றி அம்மாவுடன் முன் அறைக்குள் நுழைந்த போது எங்கள் கோட்டை வீட்டின் ஒட்டு மொத்த சொந்தமும் காத்து இருந்தது.என் பார்வை நான் சொல்லாமலேயே சுரேஷைப் பார்த்தது.

காரணம் இல்லாமல் இல்லை.பெரிய அத்தை இப்பொழுது வரைந்து கொண்டு இருப்பது இவன் படத்தைதான்.

## அத்தியாயம் இருபத்தி ஏழு

பெரிய அத்தையை சக்கர நாற்காலியில் உட்கார்த்தி அழைத்து வந்து மணமேடைக்கு முன்னால் வலதுப் பக்கம் நாற்காலியினை நிறுத்தியிருந்தார்கள்.அந்தப் பெரிய ஹாலில் சொந்தங்கள் எல்லாம் கண்களில் ஆர்வமும்,கொஞ்சம் பொறாமையுடன் தான் இருந்தார்கள்.சுரேஷ் முகத்தில் இப்பொழுதும் ஒரு சின்ன ஏக்கம் தெரிந்தது.ஏதாவது ஆகி கல்யாணம் நின்று மாப்பிள்ளையாக தன்னை ஏற்றுக்

கொண்டாலும் நல்லதுதான் என்பது போல் தான் அவன் பார்வை இருந்தது.

மந்திரங்களை முழங்கி கொண்டிருந்த ஐயர் இடையில் மந்திரம் நிறுத்தி மாமாவைப் பார்த்து,"மாப்பிள்ளையை அழைச்சிண்டு வாங்கோ"என்றார்.மாமா மாடியை நோக்கிப் போனார்.அம்மாவின் முகத்தைப் பார்த்தேன்.

அம்மாவின் முகம் சலனமில்லாமல் இருந்தாலும் மெல்லிய சந்தோஷ ரேகை அவர் முகத்தில் தெரிந்தது.தன் விருப்ப படியே என் திருமணத்தினை நடத்தி வைத்து விட்டு பொறுப்பை ஒப்படைக்கிறோம் என்கிற சந்தோஷம் தான் அது.வேறு என்ன இருக்க முடியும்.நான் மாடிப் படியைப் பார்க்க ஆரம்பித்தேன்.ஐயரின் சடங்கு மந்திரங்களில் என் கவனம் ஒரு பக்கம் இருந்தாலும் என் பார்வை ஏனோ ரமேஷிற்கு ஏங்க ஆரம்பித்து விட்டது.மாடிப் படியில் ரமேஷ் மாமாவுடன் வந்து கொண்டிருந்தார்.பட்டு வேஷ்டி ஒன்றை கட்டியிருந்தார்.மாமா தேர்ந்தெடுத்த பட்டுப் வேஷ்டிதான் அது.என் பக்கத்தில் வந்து உட்கார்ந்தது என்னையும் அறியாமல் என்னுள் ஒரு வெட்கமும் பரவசமும் வந்து உட்கார்ந்து கொண்டது.உட்கார்ந்தவர் சும்மா இல்லாமல் அவர் விரல்களால் யாரும் பார்க்காத மாதிரி என் தொடையில் ஒரு கிள்ளு கிள்ளினார்.'ஹா'என்று வந்த அலறலை உள்ளுக்குள்ளேயே தள்ளி விட்டு அவரைப் பார்த்து மெல்ல முறைத்தேன்.ஐயர் கவனித்து விட்டார் என்று நினைக்கிறேன்.அவர் எங்கள் இருவரையும் பார்த்து சிரித்துக் கொண்டே."இரண்டு பேரும் சேர்ந்து கொஞ்சம் நெருக்கமா உட்காருங்கோ"என்றார்.

தமிழ் சினிமா படங்களில் வருவது போல் அவர் கையில் தாலி போன சில வினாடிகளில் ஐயர்"புமாங்கல்யம் தந்துனானே மம ஜீவன ஹேதுனா கண்டே பத்னாமி சுபாகே த்வம் சஞ்சீவ சரத சதம்பூஎன்றார் உச்சத்தில்.பின் புறம் சுற்றி அவர் தாலியினை முடிச்சிட தூத்துக்குடி பெண் மாமாவின் ஒருத்தி தொடர் முடிச்சுகளை போட்டாள் ரமேஷ் சொந்தங்கள் சார்ப்பில்.

அம்மாவைப் பார்த்தேன்.அம்மாவின் கண்களில் இருந்து கண்ணீர் எட்டிப் பார்த்தது.திருமண சடங்குகள் முடிந்த கையோடு பொறுப்பு மாற்றும் வேலைத் தொடங்கி விட்டது.

மாமாவைப் பார்த்தேன்.மாமா ஏனோ டென்ஷனாய் இருந்தார்.ஆனாலும் நான் அவரைப் பார்ப்பதை உணர்ந்ததும் மெல்ல சிரிக்க முயன்றார்.எங்கள் முன் ஒரு சற்றே பெரியதான ஜாடியில் துணி மூடியபடி கொண்டு வந்து வைத்தாள் சமையல்கார அம்மாள்.தொடர்ந்து பட்சணத் தட்டுகள் கொண்டு வந்து அடுக்கப் பட்டன.வரிசையாக

